உ

செந்திலாண்டவன்

திருவடி துணை

# பால பக்தவிஜயம்

வரகவி - திரு. அ. சுப்ரமண்ய பாரதி

எழுதியது



மாடர்ன் பப்ளிஷிங் ஹவுஸ்

திருவல்லிக்கேணி, சென்னை.

1927

 [விலை அணா 10.

உ

செந்திலாண்டவன் திருவடி துணை

# முகவுரை

---

பால பக்தவிஜயம் என்னும் இச் சிறுநூலில் இருபத்து நான்கு பக்தர்களுடைய சரித்திரங்கள் அடங்கியிருக்கின்றன. இவை பக்தவிஜயம், பக்தமாலா என்று வெளிவந்துள்ள நூலிலிருந்து சிறுவர்க்கென்று பொறுக்கி எடுத்துச் சிறுவர்க்கு எளிதில் விளங்கத்தக்கபடி இனிய நடையில் எழுதியுள்ளவை. இவைகளுள் ஒவ்வொன்றும் கடவுட் பக்தியை விளக்குவதாயிருப்பதுடன் அரிய பெரிய கருத்துகளடங்கிய நீதிகளையும் புகட்டக்கூடியதா யிருக்கின்றது. அன்றியும் ஆத்மார்த்தமான சில உயர்ந்த போதனைகளையும் இவற்றினின்று உணரலாம். பாதிவிரத்ய மகிமைகளும் இவைகளில் நிறைந்துள்ளன.

பெற்றோரை வழிபடவேண்டியதும் பேணுதலும் பிள்ளைகளுடைய கடமை என்பது புண்டரீகன் சரித்திரத்தை விட வேறு சரித்திரம் அவ்வளவு தெளிவாகப் போதிக்கக் கூடியதல்ல என்றே சொல்லலாம். நாமதேவர், ஞானதேவர், துகாராமர், மீராபாய், ஸ்ரீராமதாஸர் இவைகள் பகவானிடத்திற் பக்தியை ஊட்டத்தக்க அரிய சரித்திரங்கள். நாமதேவரும் ஞானதேவரும் சிறந்த வைராக்ய புருஷர்கள். அவர்கள்முன் தெய்வம் தோன்றிப் பேசியிருக்கின்றது. சகுபாய் என்கிற சரித்திரத்தில் மாமியின் கொடுமையும் பகவான் அடியார்க்கடியர் என்பதும் விளங்கும். மச்சேந்திர கோரக்ஷகர் என்கிற சரித்திரத்தில், குரு சிஷ்ய வழிபாட்டின் சிறப்புச் செவ்வனே அமைந்துள்ளது.

இப்படி ஒவ்வொரு சரித்திரமும் உயர்ந்த நீதிகளை விளக்குகின்றமையால் சிறுவர்க்கு இது சிறந்த நூலாகுமென்று கருதி இதனை எழுதினேம். இச் சரித்திரங்கள், சைவமத நூலாகிய பெரியபுராணத்திலுள்ள அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய சரித்திரம் போன்றவை. அவ் வறுபத்து மூன்று நாயன்மார் சரித்திரங்களைச் சிறுவர்க்குப் பெரியபுராணம் என்று சுருக்கி வெளியிட்டுள்ளேன். அது போலவே வைஷ்ணவ நூலும் சிறுவர்க்கேற்றபடி விளங்குதல் அவசியமெனத் தோன்றியபடியால் இதனை எழுதலானேன். இது பிள்ளைகளுக்குச் சிறந்த :போதனைகளைத் தருவதாதலால், தமிழறிஞர்கள் இதில் கவனஞ்செலுத்திப் பள்ளிக்கூடங்களில் உபயோகப்படும்படி ஆதரவை யளிப்பார்களென்று நம்புகிறேன். பெரியார் இதிலுள்ள பிழைகளைப் பொறுப்பாராக.

குமாரபுரம்
1—3—27

இங்ஙனம் :
திரு. அ. சுப்ரமண்ய பாரதி

V. Krase III class

# பொருளடக்கம்

உ

செந்திலாண்டவன் திருவடி துணை

# பால பக்தவிஜயம்

## 1. புண்டரீகன் சரித்திரம்

முற்காலத்தில் லோகதண்டம் என்று பெயர் பெற்றிருந்த பண்டரிபுரத்தில் ஜத்வா என்னும் பெயர் கொண்ட ஓர் அந்தணனிருந்தான். அவனுக்கு ஸாத்யகி என்னும் பெயர் கொண்ட மனைவி ஒருத்தியிருந்தாள். இருவரும் மகாவிஷ்ணுவினிடம் மெய்யான அன்பு செலுத்தி வந்தார்கள். அவர்களுக்கு வெகு காலம் வரையில் பிள்ளை யில்லாமலிருந்து அப்பால் ஓர் ஆண் மகன் பிறந்தான். அவனுக்கு அவர்கள் புண்டரீகன் என்று பெயரிட்டு அருமையாய் வளர்த்து வந்தார்கள்; பிறகு, யுக்த வயதில் உபநயனம் செய்துவைத்து, வித்தையையும் கற்பித்து, விவாகஞ் செய்துவைப்பதற்கேற்ற வயது வந்ததும் ஒரு பெண்ணைத் தேடி விவாகமும் செய்து வைத்தார்கள்.

புண்டரீகன் நாளடைவில் தீயவர்கள் கூட்டுறவினால் பரம துஷ்டனானான்; தாய் தந்தையருடைய பேச்சைக் கொஞ்சமும் லட்சியம் செய்வதில்லை; தன் மனம் போனபடி பொருளைச் செலவழிக்கத் தலைப்பட்டான்; பெற்றோர்கள் கண்டித்தால், அவர்களை வாயில் வந்தபடி வையவும் சில சமயம் அடிக்கவும் துணிந்தான். அப்படியாகவே, அவனைப்பற்றி அவனுடைய தாய் தந்தையர் கவனிப்பதை விட்டுவிட்டார்கள்; 'துஷ்டப் பிள்ளைக்கு ஊரார்தான் புத்தி சொல்லவேண்டும்' என்று அவனை வெறுத்துத் தங்கள் காரியங்களைக் கவனித்து வந்தார்கள்.

இப்படியிருக்கையில் ஒரு நாள், காசி யாத்திரை செல்லும் சிலர் அவ்வூரிலே வந்து தங்கினார்கள். அவர்களைக் கண்ட ஜத்வாவும், அவன் மனைவியும் அவர்களுடன் காசிக்குப் போக விரும்பி, புண்டரீகனிடம் அநுமதி கேட்டனர். புண்டரீகன் "நீங்கள் இருவரும் இன்றே வீட்டை விட்டுத் தொலையுங்கள். நான் சுகமாயிருப்பேன். உங்களை இங்கிருக்க வேண்டுவார் யாருமில்லை'' என்றான்.

இதைக் கேட்டதும் அவர்கள் " இவன் நமக்கு மகனல்ல; பகைவன்; இவனிருக்குமிடத்தில் நாம் இனி ஒரு க்ஷணப் பொழுதும் இருப்பது கூடாது. இருந்தால் கொன்று விடுவான்'' என்று எண்ணி, அவனை வெறுத்து உடனே காசி யாத்திரைக்குப் பிரயாணமானார்கள்.

அவர்களிருவரும் ஊரை விட்டுப் புறப்பட்டுப் போன சில நாட்களுக்கெல்லாம், காசி யாத்திரை செல்லும் வேறு சிலர் அவ்வூரில் வந்து தங்கினார்கள். அவர்களைக் கண்ட புண்டரீகன் அவர்களுடன் தானும் காசிக்குப் போய்க் கங்கா ஸ்நானம் செய்து வர விரும்பினான்; உடனே தன் மனைவியை அழைத்து, "நாமும் காசிக்குப் போய் வருவோம். தக்க துணை சேர்ந்திருக்கிறது. என்னிடம் வழிச் செலவுக்கு வேண்டிய பணமுமிருக்கிறது'' என்று கூறினான். பின் இருவரும் இரண்டு குதிரைகளில் ஏறிப் பிரயாணமானார்கள்.

புண்டரீகன் இப்படிப் புறப்பட்டுப் போகையில் வழியில் அவனுடைய தாய் தந்தையர்கள் கால் நடையாய், நடக்க முடியாமல் நடந்து செல்வதைக் கண்டான்; கண்டும் காணாதவன்போல் போனான். காசிக்கு அருகே போனதும் அவன் அங்கிருந்த ஒரு சத்திரத்தில் தங்கினான். அந்தச் சத்திரத்திற்குப் பக்கத்தில் குக்குடர் என்கிற முனிவர் ஒருவர் ஆச்ரமம் ஏற்படுத்திக்கொண்டு அதிலிருந்து வந்தார். அவர் எப்போதும் தம்முடைய தாய் தந்தையர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண்டு, அவர்களையே தெய்வமாக எண்ணித்

தொழுது வந்தார்; வேறு தெய்வத்தைப் பற்றி அவர் சிந்திப்பதே யில்லை. தாய் தந்தையர்க்குச் செய்யவேண்டிய பணிவிடைகளைச் செய்த பின், பகற் காலத்தில் புராண சிரவணம் செய்து வருவார்; இராக்காலத்தில் ஸ்ரீஹரியின் குண விசேஷங்களைக் கேட்டு மகிழ்வார்; பெற்றோர்களையும் கேட்டு மகிழும்படி செய்வார். அந்தக் குக்குட முனிவரை இப்பொழுது நினைப்பினும் சகல விக்கினங்களும் நீங்குமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

புண்டரீகன் அவரைக் கண்டான்; "ஸ்வாமி, காசி இங்கிருந்து இன்னும் எவ்வளவு தூரத்திலிருக்கிறது?" என்று கேட்டான். அவர், "காசி எத்தனை தூரத்தி லிருக்கிறதோ அஃது எனக்குத் தெரியாது! நான் இந்த இடத்திலிருந்து எங்கும் செல்வதில்லை; எப்போதும் என்னை ஈன்றவர்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண்டே யிருக்கிறேன். எனக்குக் காசி, கங்கை, தெய்வம் எல்லாம் என் தாய் தந்தையர்தாம்" என்றார். புண்டரீகன், "என்ன ஆச்சரியமிது! இவ்வளவு சமீபத்திலிருந்தும் காசியைக் கண்ணாலே கூடக் காணாமலிருக்கிற உம்முடைய நடவடிக்கை வெகு விசித்திரமாயிருக்கிறதே!" என்றான். பெரியவர், "இவன் மூடன்" என்று நினைத்துப் புண்டரீகனுக்கு மறுமொழி யொன்றும் சொல்லாமல், தம் அலுவலைக் கவனிக்கச் சென்றார்.

அப்பால் அன்றிரவு எல்லோரும் நித்திரை போய்விட்டனர். புண்டரீகன் மாத்திரம் நித்திரை செய்யாமல் பல பல ஆலோசனை செய்துகொண் டிருந்தான். அப்பொழுது முனிவருடைய ஆசிரமத்திற்கு மூன்று மாதர்கள் குடத்தில் ஜலமெடுத்துக்கொண்டு வந்தனர். அவர்கள் மூவரையும் புண்டரீகன் கண்டு "இந்நேரத்தில் இங்கே வந்திருக்கும் இவர்கள் யார்? கவனிக்கவேண்டும்" என்று கருதி, அவர்களைக் கவனித்தான். அவர்கள் மூவரும் அந்த ஆசிரமத்தை மெழுகிக் கழுவிப் பெருக்கிக் கோலமிட்டுச் சுத்தம் செய்தார்கள்; பின்

தங்கள் உருவமாறி சாவித்ரி, லக்ஷ்மி, கௌரீ தேவிகளைப் போல் விளங்கினார்கள். புண்டரீகன் அவர்களுடைய உருவத்தைக் கண்டு ஆச்சரியமடைந்து, "நீங்கள் யார்? இந்த ஆச்ரமத்தில் நீங்களேன் இந்தப்படி சேவை செய்கிறீர்கள்?" என்று கேட்டான்.

அவர்கள், "அடே பாபி, துராத்மா, சாதுநிந்தகனே, நீ எங்கள் முன்னே நில்லாதே! போ. போ." என்று கடிந்து கொண்டார்கள். புண்டரீகன் பயந்து அவர்களைப் பணிந்து, "நான் பதிதனென்பதில் ஐயமில்லை. என்னைக் காப்பாற்ற வேண்டும். தள்ளலாகாது" என்று வேண்டிக்கொண்டான். அவர்கள், "அடே, எழுந்திரு, நீ அநேக பிறவிகளிலே செய்த புண்யம் இன்றைக்குப் பலித்தது. இந்தப் பிறவியில் நீ துராத்மாவாய் இருக்கிறாய்! பெரியவராகிய முனிவருடைய தரிசனம் செய்தபடியால் உன் பாபம் ஒழிந்தது. ஆகையினால் எங்களுடைய தரிசனமும் உனக்குக் கிடைத்தது. நாங்கள் மூவரும் கங்கை, யமுனை, ஸரஸ்வதிகளாவோம். பாபிகளில் அநேகர் எங்களிடம் ஸ்நானம் செய்வதால் அவர்களுடைய பாபங்களை நாங்கள் வகிக்க நேரிடுகிறது. அந்தப் பாபத்தைத் தீர்த்துக்கொள்ளவே நாங்கள் நாடோறும் இங்கே வந்து இப்படி சாது சேவை செய்கிறோம். இந்த மகாத்மாவினுடைய மகிமையை எங்களால் சொல்ல இயலாது—" என்றனர்.

இப்படிக் கூறவே புண்டரீகன், "என்னை ஆதரிக்க வந்த தெய்வங்களே, நீங்கள் இவ்வளவு தூரம் சிறப்பித்துப் பேசும்படி இந்த முனிவர் செய்த புண்ணியச் செயல்கள் எவை?" என்று கேட்டான். அவர்கள், "இந்த மகாத்மா பூர்வம் செய்துள்ள புண்ணியம் அளவிடுவதற்கரியது. இவர் இப்போது தம்முடைய தாய் தந்தையர்க்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை அன்போடும் சிரத்தையோடும் செய்து வருகிறார்; அவர்களையே தெய்வமாகக் கொண்டிருக்கிறார். தாய் தந்தையரின் சேவையைக் காட்டிலும் பெரிய புண்ணியம் வேறொன்று

யில்லை. அது கோடி புண்ணியப் பயனைக் கொடுக்கும்; பூமி முழுவதையும் வலம் வந்த பலனையும் கொடுக்கும். தந்தையின் சேவையினால் அற்புதமான ஞான முண்டாகும்; ஈசுவரன் பிரத்யக்ஷமாவர். சுருதியானது தாய் தந்தையரே தெய்வ மென்று கூறுகிறது. தாய் தந்தையரை நிந்திப்பவர்கள் பரம சண்டாளர்களாய் உழல்வர்; முடிவில் அதே கதியை அடைவர்—'' என்று கூறினார்கள்.

இதைக் கேட்டதும் புண்டரீகன் பெருந்துயரமடைந்து, கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருக, அவர்கள் முன்னின்று, ''என் தாய் தந்தையர்களை நான் பலவாறான கொடுமைகளுக் குள்ளாக்கி மகத்தான பாபத்தைத் தேடிக் கொண்டிருக்கிறேன். நான் இனி உய்வது எப்படி?'' என்று வேண்டினான்.

அவர்கள், "நீ உய்யும் வழியைச் சொல்கிறோம். கேள்: உன் தாய் தந்தையரைத் தெய்வமாகப் பாவித்து நீ தினந் தோறும் பூஜித்து வா. பகவான் உன்னிடம் சந்தோஷங் கொண்டு உனக்கு நல்ல கதியைக் கொடுப்பார். இது ஸத்தியம்—'' என்று கூறிச் சென்றனர்.

புண்டரீகன், "அந்தோ! ஜன்மத்தை வீணாக்கினேனே பாவி! எப்பொழுது எங்கே என் பெற்றோரைக் காண்பேன்! எப்பொழுது அவர்கள் திருவடி பணிந்து, மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, என் பாபங்களைத் தீர்த்துக்கொள்வேன்?'' என்று வருந்திக்கொண்டே மனைவியுடன் அவ்விடம் விட்டுப் புறப்பட யத்தனித்தான். அப்பொழுது அவனுடைய தாய் தந்தையரும் அங்கே வந்து சேர்ந்தார்கள். புண்டரீகன் அவர்களைக் கண்டதும் வணங்கித் தான் செய்த பிழைகளையெல்லாம் மன்னிக்கும் படி வேண்டிக்கொண்டான்; பின் அவர்களிருவரையும் இரண்டு குதிரைகளிலும் ஏற்றிவைத்துக்கொண்டு காசிக்குப் போனான். அங்கே அவர்களுக்குக் கங்கா ஸ்நானமும் பகவானுடைய

தரிசனமும் செய்வித்துப் பின் தானும் தன் மனைவியுடன் கங்கா ஸ்நானமும் பகவானுடைய தரிசனமும் செய்து, திரும்பிப் பண்டரிபுரம் போனான். அங்கே சென்ற நாள்முதல் தன் தாய் தந்தையர்க்குச் சேவை செய்து, அவர்களை ஒரு குறைவுமில்லாமல் பாதுகாத்து வந்தான்.

இப்படிப் புண்டரீகன் தன் பெற்றோர்களைப் போற்றி வருகையில், அவனிடம் ஸந்தோஷமடைந்த கிருஷ்ணபகவான் அவனுக்குக் காட்சிதரத் திருவுளங் கொண்டார். ஒரு நாள் புண்டரீகன் தன் தாய் தந்தையர்களுக்கு ஏதோ பணிவிடை செய்துகொண் டிருந்தான். அப்பொழுது பகவான், புண்டரீகனுடைய வீட்டிற்கு எழுந்தருளினர்; கரங்களிலே சங்கு சக்கரமும் இடுப்பில் பீதாம்பரமும் கழுத்தில் இரத்தின மணி மாலையுடன் துளசி மாலையும் செவியில் மகர குண்டலங்களும் சிரசில் நவரத்ன மிழைக்கப்பெற்ற கிரீடமும் தரித்துக்கொண் டிருந்தார். அவருடைய திருமேனியின் காந்தி நாற்புறமும் வீசியது. புண்டரீகனுடைய கண்களையும் அந்தக் காந்தி கவர்ந்தது. அதனால் அவன், "என்னை இஃது!" என்று வியப்படைந்து, பின்னே திரும்பிப் பார்த்தான். பகவான் சங்கு சக்ர பீதாம்பரதாரியாய் விளங்குவதைக் கண்டு, அவன் தன் பக்கத்திலிருந்த இரண்டு செங்கற்களை அவர் முன்னே எடுத்துப் போட்டு, "ஆண்டவனே, எழுந்தருளியிருக்க வேண்டும்!" என்று வேண்டிக்கொண்டு, மனத்தினால் அவரை நமஸ்காரஞ் செய்து, தன் தாய் தந்தையர்க்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் செய்து முடித்தபின் அவர் முன்னே வந்து, பணிந்து எழுந்து கரங்குவித்து நின்றான். பகவான், "அப்பனே, நாம் உன்னிடம் ஸந்தோஷம் கொண்டோம். நீ உன் தாய் தந்தையர்களுக்குக் கீழ்ப்படிதலுள்ளவனாயிருந்து, அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுத்துத் தக்கவாறு பணிவிடை செய்து வருகிறபடியால், உன் பாபங்களெல்லாம் உன்னை விட்டு விலகின. நீ பரிசுத்தனாய்விட்டாய்.

ஆனபடியால் உனக்கு நாம் தரிசனம் தந்தோம். நீ விரும்பும் வரங்களைக் கேட்பாயாக!'' என்றார்.

பகவான் இப்படித் திருவாய் மலர்ந்தருளக் கேட்டதும் புண்டரீகன் என்றுமடையாத ஆநந்தமடைந்து, அவரை அன்போடு பணிந்து எழுந்து, "என் ஐயனே, தாம் எப்போதும் இந்த இடத்திலேயே இந்தத் திருக்கோலத்துடன் திருக்கோவில்கொண்டிருந்து பக்தர்களுக்கெல்லாம் திவ்விய தரிசனம் தந்து அவர்களைப் பாதுகாத்தருளல் வேண்டும். இந்த வரமே எனக்குப் போதும்'' என்றான். பகவான் அதைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி யடைந்து, "புண்டரீக, உன் விருப்பப்படி நாம் இவ்விடத்தில் திருக்கோவில் கொண்டிருந்து, பக்தர்களுக்கு அநுக்ரகம் செய்வோம். எம்முடைய தரிசன மாத்திரத்தில் அன்பர்கள் பக்திஞான மடைந்து முத்திக்குப் பாத்திரராவார்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளி, அன்று முதல் பகவான் அங்கேயே யிருந்து வருகிறார். பகவான் அங்கே திருக்கோவில் கொண்டபிறகுதான் லோகதண்ட மென்கிற அந்த ஊருக்குப் பண்டரிபுரம் என்கிற பெயர் உண்டாயிற்று.

---

## 2. ஜயதேவர் சரித்திரம்

ஜகந்நாதம் என்னும் க்ஷேத்திரத்திற்கு அருகே துந்துபில்வம் என்னும் கிராமத்தில் ஜயதேவர் பிராமண குலத்தில் அவதரித்தார். அவர் சகல சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்று, உலக முழுவதும் புகழ்ந்து பேசத்தக்க அறிஞரானார். அப்பால், அவர் பாத்ம புராணத்திலுள்ள ராதா மாதவ விலாசம் என்னும் இதிஹாச மொன்றைக் கீர்த்தனை ரூபமாகப் பாடினார்; அதற்குக் கீத கோவிந்தம் என்று பெயரிட்டார். அந்தக் கிரந்தம் மிகவும் மேன்மையுடையதாய் விளங்கியது. அதனைப் புக்திமான்களெல்லாரும் எழுதிப் பாடஞ் செய்துகொண்டு, பூஜா காலங்களில் பாடித் துதித்தனர். புஷ்பம் ஓரிடத்தி லிருந்தாலும்

அதன் பரிமளம் எங்கும் பரவுமல்லவா ? அதுபோல் நாளடை வில் அந்தக் கிரந்தத்தின் பெருமை உலக முழுவதும் பரவியது.

ஜயதேவர் இப்படிப் பிரபல பக்த சிரோமணியாய் விளங் கிய அக்காலத்தில் ஜகந்நாதத்தில் சாத்வீகன் என்னும் பெயர் கொண்ட ஓர் அரசனிருந்தான். அவனும் சிறந்த வித்வானாத லால், ஜயதேவர் செய்த கிரந்தத்தைப் போலவே தானும் ஒரு கிரந்தத்தை இயற்றி, அதனில் அநேக பிரதிகள் எழுதும்படி செய்து, அப்பிரதிகளை யெல்லாம் பல நகரங்களுக்கு அனுப்பிப் பரவச் செய்தான். இதனை யறிந்த சில வித்வான்கள் அரசனைச் சபையிலே கண்டு, "வேந்தரே, நீர் செய்த கிரந்தத்தைப் பார்த் தோம். அது ஜயதேவர் செய்த கிரந்தத்திற்கு ஈடாகாது. அறிஞர் தம்முடைய கீர்த்தியைத் தாமே புகழ்ந்துகொள்ளார். நீர் செய்த கிரந்தத்தைப் படிக்கும்படி எல்லோரையும் கட்டா யப் படுத்துகிறீர். வித்தையும் குருமந்திரமும் மகாரத்தினமும் கஸ்தூரியும் கன்னிகையும் பலாத்காரமாக விற்பனைக்கு வந்தால் அவற்றின் விலை குறைந்துபோகும்'' என்றார்கள்.

வேந்தன் அதைக் கேட்டதும் "ஓ! அப்படியா ? இருவரு டைய கிரந்தங்களையும் ஜகந்நாதருடைய ஸந்நிதியில் ஒரு நாள் இரவில் வைப்போம். 'எது உத்கிருஷ்டமுடையதோ அதனை அங்கீகரித்தருளல் வேண்டும்' என்று பெருமாளைப் பிரார்த்தித்துக் கொள்வோம். பெருமாள் தாம் அங்கீகரி யாததை விலக்கிவிடுவா ரல்லவா ? கவனிப்போம்'' என்றான். பண்டிதர்கள் "அப்படியே செய்வோம்'' என்று கூறினர். அர சன் உடனே ஜயதேவருடைய கிரந்தத்தை வரவழைத்து, இரண்டு கிரந்தங்களையும் பெருமாளுடைய ஸந்நிதியில் வைக் கும்படி செய்து, கோவில் கதவைத் தானே மூடிப் பூட்டிக் கொண்டு சென்றான். மறுநாள் பொழுது விடிந்ததும் அரசன் எல்லாருடனும் வந்து, கதவைத் திறந்து பார்த்தான். ஜயதேவ ருடைய கிரந்தம் ஸ்வாமிக்கு அருகே யிருந்தது. தன்னுடைய

கிரந்தம் விலகி வேறு பக்க மிருந்தது கண்டதும் அரசன் பண்டிதர்களை நோக்கி "என்ன விநோதம் இது!" என்று ஆச் சரியப்பட்டான்; பின் பகவானை நோக்கிக் கரங் குவித்து நின்று, "பதித பாவனனென்கிற தமது திருநாமத்திற்கு மாறாக நடந்திருக்கிறதே! ஜயதேவருடைய மனதிலிருந்து அவருக்கு அந்தக் கிரந்தத்தைச் சொல்லிவைத்தவரும் நீர்தான். என் மனதிலிருந்து எனக்குப் போதித்தவரும் நீர்தான். இப்படி யிருக்க என்னை ஏன் அவமானத்திற் குள்ளாக்கினீர்?" என்று விண்ணப்பஞ் செய்து கண்களிலிருந்து நீர் பெருக மனவுருக்கத் துடன் துதித்தான். பகவான் உடனே அவன்முன் தோன்றி, "உன்னுடைய கிரந்தத்தையும் சிறப்பிக்கிறோம். உங்களுடைய பக்தி விசேஷத்தை உலகத்தாருக்குக் காட்டவே இந்தச் சோதனை நடந்தது. கவலைப்படாதே" என்று கூறி, அவனுடைய கிரந்தத்திலிருந்து இருபது சுலோகங்களை எடுத்து, ஜயதேவ ருடைய கிரந்தத்தில் சேர்த்தருளினர். அரசன் இவ் வளவிலே திருப்தியடைந்து எல்லாருடனும் அரண்மனை சென்றான்.

இஃது இப்படியிருக்க, ஜகந்நாத க்ஷேத்திரத்தில் ஒரு பிராமணனுக்கு வெகுநாள் குழந்தை யில்லாம லிருந்தது. அவன் பகவானை நோக்கித் தவம் புரிந்து, ஒரு பெண் மகவை அடைந்தான். அந்தப் பெண்ணுக்குப் பத்மாவதி என்று பெய ரிட்டு "இறைவனே, உன் திருவருளால் எனக்குக் கிடைத்த இந்தப் பெண்ணை உனக்கே அர்ப்பணம் செய்துவிட்டேன்" என்று கூறி, அந்தப் பெண்ணைக் கிருஷ்ணார்ப்பணம் செய்து விட்டான். பிறகு யார் அந்தப் பெண்ணை விவாகம் செய்து கொள்ள விரும்பிக் கேட்டாலும் அவன் "நான் அவளைக் கிருஷ் ணார்ப்பணம் செய்துவிட்டேன். ஆகையினால் அப் பெண்ணின் கல்யாண விஷயமாய் நான் ஒன்றும் செய்வதற்கில்லை" என்று சொல்லிவந்தான். அது கேட்டு எல்லோரும் ஆச்சரியப் பட்டார்கள்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் பகவான் அவ்வந்தணன் கனவிலே தோன்றி, "அன்ப, நீ எனக்கு அர்ப்பணம் செய்த பத்மாவதியை ஜயதேவருக்குக் கல்யாணம் செய்து கொடு" என்று கட்டளையிட்டுச் சென்றார். பின்னர், அவ்வந்தணன் ஆண்டவனுடைய கட்டளைப்படி, பத்மாவதியை ஜயதேவருக்கு முறைப்படி மணஞ்செய்து கொடுத்துத் தன்னைவிடப் பாக்கியம் செய்தவரில்லை யென்று சந்தோஷங் கொண்டான்.

ஜகந்நாதத்திற்கு அருகே ஒரு கிராமத்தில் ஒரு பணக்கார வியாபாரி யிருந்தான். அவன் நல்ல குணங்களுக்கு இருப்பிட மாகவும் தன் குல ஒழுக்கம் தவறாதவனாகவு மிருந்தான். அவன் ஜயதேவருடைய பிரபாவத்தைக் கேட்டு, அவரிடம் உபதேசம் பெற விரும்பி, ஒரு நாள் அவரைக் கண்டு பணிந்து, தன் கருத்தைத் தெரிவித்தான். ஜயதேவர், "விசுவாச மில்லாதவன், பிறரை இகழும் இயல்புடையவன், பிறர் பொருளை இச்சிப்பவன், ஒழுக்க மில்லாதவன், பெற்றோரை வஞ்சிப்பவன் இவர்களுக்குப் பெரியோர்கள் உபதேசம் செய்ய மாட்டார்கள். நீ இப்படிப்பட்ட இழி குணங்க ளில்லாதவனாகையால், நான் உனக்கு உபதேசம் செய்ய விரும்புகிறேன்" என்றார்.

வியாபாரி இதைக் கேட்டதும் ஸந்தோஷ மடைந்து, "நான் உலகத்தில் எவரும் செய்திராத புண்யம் செய்தவன்; இதில் ஐயமில்லை. அதனாலேதான் ஸ்வாமிகள் எனக்கு அநுக்கிரகம் செய்யத் திருவுளங்கொண்டீர்கள்!" என்று முகமன் கூறிப் பின், "ஸ்வாமி, இரதம் கொண்டுவருகிறேன். அதிலேறிக்கொண்டு, என்னுடன் கூட ஊருக்கு வந்து, என்னுடைய சிறு குடிசையைப் பரிசுத்தமாக்கி என்னையும் அடிமை கொள்ள வேண்டும்" என்றான்.

ஜயதேவர், "அப்படியே செய்வோம்" என, வியாபாரி உடனே ஓர் இரதம் வரவழைத்து, அவரை அதில் ஏற்றி வைத்துக்கொண்டு தன் ஊருக்கு அழைத்துப் போனான்; அங்கே அவரை ஒரு தனி மாளிகையில் இருக்கச் செய்து

வேண்டிய உபசாரங்களைச் செய்து மகிழ்ந்தான். ஜயதேவர் அங்கே ஒரு மாத காலமாக வியாபாரிக்கு ஸ்ரீ ஹரி பக்தியின் விசேஷங்களையும் அந்தப் பக்தியினால் அடையும் பயனையும் தெளிவாய்க் கூறியருளினார்; பின் அவ்வியாபாரியிட மிருந்து விடை பெற்று ஜகந்நாதத்திற்குப் புறப்பட்டார். வியாபாரி, அவருக்குக் குருதக்ஷிணையாக ஏதேனும் பொருள் கொடுத் தனுப்ப விரும்பினான். ஜயதேவர் பொன்னையும் பூஷணத்தை யும் யமனுக்குச் சமானமாக நினைப்பவர். ஆதலால், வியாபாரி தான் கொண்ட விருப்பப்படி நேரில் அவரிடம் பொருளைக் கொடுக்க அஞ்சி, அவரை யறியாமலே வண்டியில் பொன்னும் பூஷணமும் ஆடையும் ஒரு மூட்டையாகக் கட்டி வைத்து, அது மறைய வைக்கோலைப் பரப்பி, மேலே அழகிய விரிப் பொன்று விரித்து, "ஸ்வாமி, வண்டியில் ஏறலாம்" என்று வேண்டிக்கொண்டான். ஜயதேவர் அவ்வண்டியில் ஏறிப் புறப்பட்டார். வியாபாரி வண்டிக்காரனிடம் "நான் இவ் வண்டியில் குரு தக்ஷிணையாக ஒரு மூட்டை வைத்திருக்கி றேன். அதனைத் தேவருடைய மனைவியாரிடம் சேர்ப்பித்து, பின் வந்தனத்தைச் சொல்லிவிட்டு வா" என்று கூறிப் பிறகு ஜயதேவரை வந்தன வழிபாடுடன் வழிகூட்டி யனுப்பித் திரும்பினான்.

வண்டி நடுக் காட்டிலே போகும்போது வண்டிக்காரன், "ஸ்வாமி, வண்டியை நீங்களே கொஞ்ச தூரம் ஓட்டிக்கொண்டு செல்லுங்கள். நான் இதோ பக்கத்திலுள்ள ஊருக்குப் போய் விட்டு, வெகு சீக்கிரத்தில் குறுக்குப் பாதை வழியாக வந்து உங்களைச் சந்திக்கிறேன். இந்த ஊரில் எனக்கொருவன் பணம் தரவேண்டும். வெகு நாட்களாகத் தவணை சொல்லி வருகிறான். அவனைக் கேட்டு வருகிறேன்" என்று கூறினான்.

ஜயதேவர், "சரி, போய்வா. நான் ஓட்டிக்கொண்டு போகி றேன்" என்று கூறி, அவனை அனுப்பிவிட்டுத் தாமே வண் டியை ஓட்டிக்கொண்டு போனார். சிறிது தூரம் போனதும்

வண்டியைத் திருடர்கள் மடக்கிக்கொண்டார்கள். ஜயதேவர் உடனே, வண்டியைவிட் டிறங்கி, "நீங்கள் இந்த வண்டியில் என்ன இருந்தாலும் எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறி முன்னே நடந்தார். திருடர்கள், "ஓ இவர் ஊர்ப்புறஞ் சென்று யாரையேனும் ஆட்களைக் கூட்டி வருவார்; அதற்குத்தான் முன்னே போகிறார். இவரை நாம் விடுவது கூடாது" என்று பேசிக்கொண்டு ஜயதேவரிடம் போய் அவரைப் பிடித்து இரண்டு கைகளையும் இரண்டு கால்களையும் வெட்டி, அங்கிருந்த ஒரு சேற்றுக் குட்டையிலே போட்டுவிட்டுப் பின் வண்டியிலிருந்த பொருளைக் கொள்ளை யடித்துக்கொண்டு சென்றனர்.

ஜயதேவர், பகவானைத் தியானம் செய்துகொண்டு தம்மையே மறந்தார். அப்படி யிருக்கையில், காட்டில் வேட்டையாட வந்த ஓர் அரசன் அவ்வழியே சென்றான். அவன் ஜயதேவரைக் கண்டான். கண்டதும், "யார் இவர்? பகவத் தியானபரரா யிருக்கிறார். இவருடைய கை கால்களோ வெட்டப்பட் டிருக்கின்றன" என்றெண்ணி, விரைவில் அவரருகே சென்று, "ஸ்வாமி, தாங்கள் யார்? இப்படிப்பட்ட கஷ்டம் எப்படி வந்தது தங்களுக்கு?" என்று பரிவாய் விசாரித்து அவரைக் கரையேற்றினான். ஜயதேவர், "ஐயா! என்னுடைய பிறவியே இப்படி ஏற்பட்டது. நான் இவ்விடம் தியானபரனா யிருந்தேன்" என்றார்.

அரசன் அவரை அடியார்களில் ஒருவரென்று தெரிந்து கொண்டு, உடனே தன் நகரத்திலிருந்து பல்லக்கை வரவழைத்து அதில் அவரை ஏற்றி வைத்துக்கொண்டு நகரம் சென்றான். அங்கே தன் அரண்மனையில் தனியான ஒரு மாளிகையில் அவரை வைத்து, அவருக்குப் பணிவிடை செய்யச் சில பணியாளர்களையும் நியமித்துச் சகல சௌகரியங்களையும் செய்து வந்தான்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் ஜயதேவர் தம்மை வந்து வணங்கி நின்ற அரசன்மீது அருள் கூர்ந்து, "வேந்தே,

உமக்கு ஒரு நல்ல உபதேசம் செய்கிறேன். அதன்படி நடந்து வந்தால் உமக்கு ஈசுவரனுடைய திருவருள் கிடைக்கும்'' என்று கூறினர். வேந்தன் "அப்படியே செய்வேன்'' என, ஜயதேவர் அவனை நோக்கி, 'நீர் தினந்தோறும் சாது ஜனங்களை ஆராதித்துக்கொண்டிரும். அவர்களுக்கு அன்னமிட்டு ஆடை யுதவிவாரும். சாதுஜன சேவை செய்பவரிடம் பகவான் சந்தோஷங்கொண்டு அருள் புரிகிறார்—'' என்றார்.

இதைக் கேட்டதும் மன்னன் மகிழ்ந்து, "நான் புண்ணியம் செய்தவனானேன். இன்றுடன் என்னுடைய பழைய வினைகளெல்லாம் நீங்கின. இன்று முதல் நான் சாது சேவை தவறாமல் செய்துவருவேன். சாதுக்கள் எப்படி இருப்பார்கள்? நான் அஞ்ஞானமென்கிற தடையி லிருப்பவனாதலால், அவர்களைக் கண்டுகொள்வதற்கு இயலாது. தாம் அவர்களுடைய தன்மையை விளக்கியருளல் வேண்டும்'' என்று பிரார்த்தித்தான். ஜயதேவர், "வேந்தே, சாதுக்கள் எப்போதும் பகவானையே தியானித்துக்கொண் டிருப்பார்கள்; பாவ வழியை விட்டுப் புண்ய வழியிலேயே நாட்ட முடையவர்களாய் எல்லாரிடமும் இரக்கம் பாராட்டி வருவார்கள்; தங்களை வைவோரையும் வாழ்த்துவார்கள்; பிறர் தங்களை வாழ்த்தக் கேட்டால், அப்போது வணக்கமா யிருப்பார்கள். இறுமாப்பு என்பது அவர்களுக்குத் தெரியாது. கோபத்தை அடக்கிக்கொண்டு, நிதானத்தை மேற்கொண்டு பெரியார் விரும்பும் நெறியில் நடப்பார்கள். இப்படிப்பட்ட அரிய குணங்களுக்குப் பிறப்பிடமாக விளங்குவார்கள்!'' என, வேந்தன் "நல்லது'' என்று கூறி விடைகொண்டு சென்று, அன்று முதல் சாது சேவை செய்யத் தலைப்பட்டான்.

பின்னர், சில நாட்களுக்கெல்லாம் அரசன் சாது சேவை செய்துவருவது பல இடங்களில் பரவியது. பரவவே, சாதுக்கள் சர்க்கரை கண்டபோது எறும்பு மகிழ்ந்து ஓடுவதுபோலவும் மேக கர்ஜனை கேட்டு மயில்கள் களித்து ஆடுவது போல

வும் சாதுக்கள் அரசனுடைய பக்தியைக் கேட்டதும் மகிழ்ந்து அவனிடம் அடிக்கடி வருவாராயினர். அரசன் அவர்களெல்லாரையும் அன்புடன் ஆதரித்து வந்தான். அப்படி வரும் சாதுக்களெல்லாரும் முன்னே ஜயதேவரைக் கண்டு வணங்கிப் பின் அரசனைப் பார்ப்பார்கள்.

சில சோம்பேறிகளும் சாதுக்களைப்போல் வேஷம் பூண்டு அரசனிடம் சென்று தங்களுக்கு வேண்டுவன பெற்றுச் சென்றனர். இப்படியாகவே முன் ஜயதேவரின் கைகால்களை வெட்டிய திருடர்களும் சாதுக்களைப்போல் பாசாங்கு செய்துகொண்டு அரசனிடம் வெகுமதி பெற வந்தார்கள். வழக்கப்படி இவர்களும் முதலில் ஜயதேவரைக் கண்டார்கள். கண்டதும் இவர்கள் மனந்திடுக்கிட்டு, 'அந்தோ!' என்று கூறிக் கலங்கினார்கள்; 'அக்னி குண்டத்தில் வந்து விழுந்தோம்; இனித் தப்ப வழியில்லை. வேடனொருவன் புறுக்களை அடிக்க யத்தனிக்கும் போது அவன் காலில் அரவம் ஒன்று கடிக்க மாண்டான்' என்று கதை கேட்டிருக்கிறோமல்லவா? அதுபோல் நம்முடைய கபடமும் நம்மையே இந்தக் கதிக்குக் கொண்டு வந்து விட்டது—'' என்று பேசிக்கொண்டு தயங்கினார்கள்.

இப்படித் தயங்கிய கபட சாதுக்களை இன்னாரென்று ஜயதேவர் அறிந்துகொண்டார். ஆனால், அவர் பரம சாந்த குண சீலராகையினால், சிறிதும் அவர்களிடம் விரோத புத்தி கொள்ளாமல், ஆசனத்திலிருந்து எழுந்து அவர்களை நோக்கி, 'வர வேண்டும்! வரவேண்டும்!!' என்று கூறித் தழுவிக்கொண்டு அங்கிருந்த சேவகர்களை அழைத்து "இதோ சாதுக்கள் வந்திருக்கிறார்கள். மகாராஜாவினிடம் அழைத்துச் செல்லுங்கள்'' என்று கட்டளையிட்டார். சேவகர்கள் உடனே அந்தக் கபட சாதுக்களை அரசனிடம் அழைத்துப் போனார்கள். அரசன் அவர்களை வந்தனத்துடன் வரவேற்று, வேண்டிய உபசரணைகளைச் செய்து, சாதுக்களோடு சாதுக்களாய் அரண்மனையில் இருந்து வரும்படி கேட்டுக்கொண்டான். அவர்கள் அதற்கிணங்கி,

'என்ன நடக்குமோ! எப்படி முடியுமோ நம்முடைய கதி!' என்று பயந்தவர்களாய், அங்கே இருந்து வந்தார்கள்.

மற்ற சாதுக்களுக்கு நடப்பதுபோலவே கபட சாதுக்களுக்கும் அங்கே நாடோறும் அளவு கடந்த ஆசார உபசாரங்கள் நடந்து வந்தன. அவை யெல்லாம் கபடர்களுக்குப் பொறுக்க முடியாதவைகளா யிருந்தன. அந்த அரண்மனை அவர்களுக்குச் சிறைக்கூடமா யிருந்தது. அதனால், அவர்கள் நிலை கலங்கி, மனக்கவலைக்குள்ளாய் வருந்தினர். நாளுக்கு நாள் அவர்களுடைய தேகம் இளைத்தது. மற்ற சாதுக்களெல்லாம் தேகபுஷ்டி யடைந்து, உற்சாகத்துட னிருந்தார்கள். இந்த வித்யாசத்தைக் கண்ட அரசன், ஜயதேவரிடம் சென்று, "ஸ்வாமி, சில நாட்களுக்கு முன் வந்த சாதுக்க ளிருவரும் நாளுக்கு நாள் இளைத்துப் போகிறார்கள். அதற்குக் காரணம் தெரியவில்லை. நான் அவர்களுக்கு ஒரு குறைவும் செய்யவில்லை. என்ன செய்யலாம்?" என்று கேட்டான். ஜயதேவர், "சாதுக்களாகையினால் இப்படிப்பட்ட சுக சௌகரியங்களை யெல்லாம் விரும்பாம லிருப்பார்கள். மற்ற சாதுக்க ளெல்லாரையும் விட அவர்கள் விரக்தரா யிருக்கலாம். உமது பாக்ய வசத்தால் அவர்கள் உம்மிடம் வந்து இத்தனை நாள் உம்முடைய அன்ன முண்டனர். அவர்கள் இங்கிருந்து போக விரும்பினால் அவர்களை அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுத்து அனுப்பி விடும்" என்றார். அரசன் அப்படியே செய்வதாகத் தீர்மானம் செய்துகொண்டான்.

அப்பால் சில நாட்களுக்கெல்லாம் கபட சாதுக்கள் இருவரும் அரசனிடம் தங்களை அனுப்ப விடை கேட்டார்கள். அரசன் "உங்களுக்கு வேண்டுவதென்ன?" என்று கேட்டான். அவர்கள் அரசனிடமிருந்து ஏராளமான பொருளை விரும்பினார்கள். அவர்கள் விருப்பப்படி அரசன் பொருளைக் கொடுத்தனுப்பினான். பொருளை மூட்டையாகக் கட்டி இரண்டு ஏவலாளர் தலையி லெடுப்பித்துக்கொண்டு கபட சாதுக்கள்

சென்றனர். ஊரை விட்டுத் தாண்டிச் செல்கையில் சேவகர்கள், "சாதுக்களே, மற்ற சாதுக்களை விட உங்களிருவரிடமும் ஜயதேவர் மிகவும் அன்பு பாராட்டி உங்களுக்கு விருப்பமானவைகளைத் தந்து அனுப்பும்படி சொன்னாரே அதற்கென்ன காரணம்?" என்று கேட்டார்கள்.

கபட சாதுக்கள், "பூர்வாச்ரமத்தில் ஜயதேவர் ஓர் அரசனிடம் மந்திரியா யிருந்தார். நாங்கள் அந்த அரசனிடமே சேவகர்களாயிருந்தோம். அந்த அரசன் துன்மார்க்கன். அவன் ஒரு நாள் ஜயதேவர் செய்த ஒரு சிறு குற்றத்திற்காக அவரிடம் கடுமையான கோபங்கொண்டு, அவரை அரண்யத்திற்கு அழைத்துப்போய்த் தலையை வெட்டி விடும்படி எங்களுக்கு ஆக்ஞை யிட்டான். நாங்கள் அரசனுடைய ஆக்ஞைப்படி அவரை அரண்யத்திற்கு அழைத்துப் போனோம். அங்கே போனதும் அவரிடம் எங்களுக்கு இரக்க முண்டானபடியால், அவருடைய கை கால்களை மாத்திரம் வெட்டி, அவரை ஒரு குட்டையிலே போட்டுவிட்டு அரசனிடம் சென்று, ஆக்ஞையை நிறைவேற்றி விட்டதாகச் சொல்லிவிட்டோம்; பின் அவ்வரசனிடமிருந்து சேவை செய்ய மனமில்லாமல் தீர்த்தாடனஞ் செய்யப் புறப்பட்டுவிட்டோம்; நெடுகலும் சுற்றிக் கொண்டு இப்பொழுது உங்களுடைய நகரத்துக்குத் திரும்பி வந்தோம். அந்த விசுவாசத்தினால் ஜயதேவர் இப்போது எங்களிடம் அன்பு பாராட்டி எங்களை ஆதரித்தனுப்பினார்" என்றார்கள்.

இவ்வாறு பொய் மொழி கூறிய அக்கணமே பூமி அவர்களிருந்த இடத்தில் பிளவு பட்டது. அந்தப் பிளவில் அவர்களிருவரும் அமிழ்ந்து போயினர். இதைக் கண்ட சேவகர்கள், "இவர்கள் பொய் சொல்லி யிருக்கிறார்கள். அதனைப் பூமி தேவி பொறுக்கவில்லை. அதனால் பூமி பிளவுண்டது" என்று அறிந்து கொண்டு, திரும்பி நகரத்திற்குச் சென்று, ஜயதேவரைக் கண்டு அவரிடம் நடந்த விருத்தாந்தத்தைக் கூறினர். ஜயதேவர் அச்

செய்தி கேட்டதும் கண்களில் நீர் ததும்ப விசனமுற்று, "ஸ்ரீகிருஷ்ண! பக்த வத்ஸலா! என் பகைவர்களை ஏன் அதோ கதிக்கு அனுப்பினீர்? உம்மிடம் விரோதங்கொண்ட இராவணனுக்கு சாயுஜ்ய பதவி தரவில்லையா? சிசுபாலனுடைய நூறு பிழைகளைப் பொறுக்கவில்லையா? என்னுடைய பகைவருடைய பிழையை மாத்திரம் பொறுக்காமற் போனதேன்? கம்சனையும், சாணூரன் முஷ்டிகன் என்னும் மல்லர்களையும், பூதனையையும் மோக்ஷத்திற்கு அனுப்பவில்லையா? அப்படி யிருக்க என் பகைவர்களுக் கேனோ அதோகதி தந்தீர்?—" என்று பகவானை நோக்கித் துதித்தார். பகவான் அவரிடம் சந்தோஷமடைந்து தமது திவ்ய சொரூப தரிசனம் தந்தார். அவருடைய தரிசனம் செய்த வளவில் ஜயதேவருக்கு அவருடைய கை கால்கள் முன் போல் வளர்ந்தன. ஜயதேவர் பரமானந்தமடைந்து, பகவானை இன்னொருமுறை பார்த்தார். அப்போது பகவான் இரண்டு கபடசாதுக்களுடன் ஒரு புஷ்பக விமானத்தில் விளங்கினர். ஜயதேவர் அந்தச் சேவையைக் கண்டதும் தம்மை மறந்து அன்புருவாய் நின்றார். பகவான், "அன்ப, உன்னுடைய பரிபூர்ணமான பக்தியைக் கண்டு மகிழ்ந்தோம். பொறுமையும் தயையும் சாந்தமும் உன்னிடம் விளங்குகின்றன. சத்ருக்களையும் தமது மித்திரர்கள்போல் பாவிக்கும் சமரஸ ஞானமுடையவர்களுக்கு நாம் ஸ்வாதீனமா யிருப்போம்" என்று திருவாய் மலர்ந்து மறைந்தார். பக்தியின் பிரபாவம் அளவிட்டுச் சொல்ல முடியாது. அதன் பெருமையைப் பக்தர்களே உணர்வார்கள்.

ஜயதேவர்க்குக் கைகால்கள் வளர்ந்ததை அறிந்த வேந்தன் வியப்பும் மகிழ்ச்சியு மடைந்து, ஜயதேவரிடம் வந்து பணிந்தமர்ந்து, "கர சரணங்கள் இப்போது எப்படி யுண்டாயின?" என்று வினவினன். ஜயதேவர், பரம சந்தோஷத்துடன் தமது வரலாற்றைத்தையும் ஆதியோடந்தமாய் நவின்றார். உடனே அரசன், ஒரு பல்லக்கை அனுப்பி ஜயதேவர் மனைவியாராகிய பத்மாவதி தேவியாரை வரவழைத்தான்; அந்த அம்மையாரை

வணங்கி அவர்களுக்குத் தனி விடுதி தந்து, அதிலிருந்துவரும்
படி வேண்டிக்கொண்டான் ; தனது மனைவியை அழைத்துப்
பத்மாவதி தேவியாருக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து
வரும்படி திட்டப்படுத்தினான்; தான் ஜயதேவரிடம் முன்னி
லும் பதின் மடங்கு அதிகமான பக்தி கொண்டு அவரைத் தன்
பிரத்யக்ஷ தெய்வமாக எண்ணிச் சகல உபசாரங்களையும்
செய்து வந்தான்.

இப்படி யிருக்கையில், ஒருநாள் ஜயதேவரின் மனைவி
யாகிய பத்மாவதி யம்மாள், இராஜ ஸ்திரீகள் பலருடன் ஒரு
விடுதியில் வீற்றிருந்து, கற்புடைப் பெண்டிர் பெருமைகளைப்
பற்றிப் பேசிக்கொண் டிருந்தார். அச்சமயத்தில் ஒரு வேலைக்
காரி வந்து "அம்மா ஓர் அதிசயம்! நகரத்தில் ஒரு வியாபாரி
மரணமடைந்து விட்டானாம். அவன் மனைவி உடன்கட்டை
ஏறப்போகிறாளாம்" என்றாள். இதைக் கேட்டதும் பத்மாவதி
யம்மாளைத் தவிர ஏனைய மாத ரனைவரும் பெரு வியப்படைந்து,
"இஃது உத்தமியின் செய்கை! உத்தமியின் செய்கை!" என்று
கூறினர். பத்மாவதி யம்மாள், அது பற்றி ஒன்றும் பேச
வில்லை. அதுகண்ட இராணி, "அம்மா ! இது ஆச்சரியப்படத்
தக்கசெய்தி யல்லவா ?" என்று கேட்டாள். பத்மாவதி
யம்மாள், "புருஷன் முதலில் இறந்து பின் மனைவி இறப்பா
ளானால் அவள் தன் புருஷனை எப்போது அடைவாளென்பது
தெரியாது. புருஷன் மரணமடைந்தான் என்னும் சொல்லைக்
கேட்ட வளவில் பகலவன் பின் கிரணம்போல் உயிரை விடு
பவளே சிறந்தவள்" என்று கூறினார்.

இதைக் கேட்டதும் இராணி, "இவள் அநுபவமில்லாத
வள் ! ஆகையினாலேதான் இவ்வாறு கூறுகிறாள். இவளுடைய
மன நிலையை அறிய ஓர் யுக்தி செய்தல் வேண்டும்" என்று
தனக்குள் எண்ணிக்கொண்டு, பத்மாவதி யம்மாளைப் பார்த்து,
"நல்லது ; அப்படியா தெரிந்து கொண்டேன்" என்று விடை
கூறிச் சென்றாள். பின் ஒரு நாள், அரசன் ஜயதேவரையும்

அழைத்துக்கொண்டு காட்டிற்கு வேட்டையாடச் சென்றிருந்தான். அப்பொழுது இராணி மந்திரியை அழைத்து "வனத்தில் ஜயதேவரைப் புலி அடித்துக் கொன்றுவிட்டதாக ஊரெங்கும் வதந்தி உண்டாக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டாள். மந்திரி அவ்வாறே வதந்தியை உண்டாக்கினான். அது பத்மாவதி யம்மாளுக்குந் தெரிந்தது. அந்த அம்மாள் அக்கணமே ஓடி வந்து இராணியைக் கண்டு, "என் நாதரைப் புலி கொன்றது உண்மைதானா? உண்மைதானா? உண்மைதானா?" என்று மூன்று முறை கேட்டார்கள். இராணி, "உண்மை, உண்மை" என்று கூறினாள். அவ்வுரை கேட்டவளவில் பத்மாவதி யம்மாள், "ஆ நாதா! நாதா!" என்று அலறியவாறே கீழே விழுந்து உயிர் துறந்தார்.

அப்பால் அன்று மாலை அரசன் காட்டிலிருந்து ஜயதேவருடன் நகரத்துக்கு வந்து, தன் அரண்மனைக்குச் சென்றான். அங்கே சென்றதும், பிரதானி நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் அரசனுக்குத் தெரிவித்து "இந்த விபரீதத்திற் கென்ன செய்வது?" என்று மலைத்து நின்றான். அரசன் தன் மனைவியின் செய்கை கேட்டுக் கடுஞ்சின மடைந்தான்; ஆயினும், மனைவியைக் கொன்றால் ஸ்திரீ ஹத்தி தோஷம் நேருமே!" என்றஞ்சித் தானே அக்னிப் பிரவேசஞ் செய்து உயிரை விடத் தீர்மானித்தான்.

இவையனைத்தும் ஜயதேவருக்குத் தெரிந்தது. ஜயதேவர் விரைவில் வந்து அரசனை நோக்கி, "நீர் உயிரை விடுவது தகுதியல்ல. வேண்டாம் இச்செய்கை" என்று கூறித் தடுத்து, அவனையும் அழைத்துக்கொண்டு பத்மாவதி யம்மாள் இறந்து கிடக்கும் இடத்துக்குப் போய், பகவானைத் தியானித்து நின்று, **ராதா மாதவ விலாஸம்** என்னும் இருபத்து நான்கு அஷ்டபதிகளைப் பாடித் துதித்தார். துதித்தவளவில், பகவான் பிரத்தியக்ஷமாய், ஜயதேவரைப் பார்த்து, "நீ அன்புடன் பாடிய இந்த அஷ்டபதியைப் பாடுகிறவர்கள் சகல சித்திகளையும் பெறுவார்

கள். அவர்கள் முன் நான் பிரத்யக்ஷமாவேன்'' என்று கூறிப் பத்மாவதி யம்மாளைத் தமது திருக்கர மலரால் ஸ்பரிசித்தார். ஸ்பரிசித்தவளவில், அந்த அம்மாள் உயிர்பெற் றெழுந்தார்கள். இந்த அதிசயங்கண்டு எல்லாரும் ஆச்சரியப்பட்டுப் பகவானை ஜயகோஷத்துடன் துதித்தார்கள். வானத்திலிருந்து மலர் மாரி பெய்தது. பகவான் அச்சமயம் அந்தர்த்தானமானார். அரசன் ஜயதேவரை வணங்கி, "உய்ந்தேன்! உய்ந்தேன்! உமது திருவருள் என்றும் என்னைப் புரத்தல் வேண்டும்'' என்று பிரார்த்தித்தான். இராணியும் ஓடி வந்து ஜயதேவரைப் பணிந்து, "நான் அறியாமையினால் செய்த பிழையை மன்னிக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டாள். ஜயதேவர் எல்லாரையும் ஆசீர்வதித்துப் பகவானைத் துதித்துக்கொண்டு, தமது விடுதி போய்ச்சேர்ந்து சுகமாக வாழ்ந்து வந்தார்.

---

## 3. துளசிதாஸர் சரித்திரம்

ஹஸ்தினபுரத்தில் ஒரு பிராமணனிருந்தான். அவன் பெயர் ஆத்மாராமன். அந்தப் பிராமணன் அறிவிற் பெரியவனாயும் சகல உத்தம குணங்களுக்கு இருப்பிடமாயும் விளங்கியபடியால், அவனை அக்காலத்தில் அரசனாயிருந்த அக்பர் என்னும் மொகலாய அரசன் தன்னிடத்தில் மந்திரியாக வைத்துக் கொண்டான்.

ஆத்மாராமன், தன் மைந்தனாகிய துளசிதாஸருக்கு உபநயனம் வேதாத்யயனம் முதலியவைகளைச் செய்துவைத்துப் பின் யுக்த வயதில் மமதாதேவி என்னும் பெயர்கொண்ட ஒரு பெண்ணைத் தேடி மணஞ் செய்வித்தான். மமதாதேவி நல்ல குணவதி யாகையினால் தன் கணவனுக்கு அடங்கி அவன் சொற்படி நடந்து "இவள் உத்தமி, பதிவிரதை'' என்று எல்லாரும் புகழத்தக்க பெருமையுடன் வாழ்ந்து வந்தாள்.

இப்படியிருக்கையில், அக்பர் துளசிதாஸரை அழைத்துக் கொண்டு வன விநோதங் காணச் சென்றிருந்தான். அச்சமயத்தில் மமதாதேவியின் அன்னை தேக அசௌக்யமா யிருப்பதாக ஓர் ஓலை வந்தது. அதைக் கண்டதும் மமதாதேவி தன் மாமியாரிடமும் மாமனாரிடமும் உத்தரவு பெற்றுக்கொண்டு பக்கத்தூரிலிருந்த தன் அன்னையைப் பார்க்கச் சென்றாள். பிறகு மாலையில் துளசிதாஸர் வீடுவந்து சேர்ந்தார். அவர் தமது மனைவியினிடம் கரைகடந்த அன்புடையவர். ஆகையினால், மனைவி தாய்வீடு சென்றிருப்பதாகத் தமது அன்னையார் கூறக் கேட்டதும் அவசரமாக உணவுண்டு அவ்வூர் போகப் பிரயாணப்பட்டார். அப்பொழுது, சூரியாஸ்தமனமாய்ப் பேரிருள் பரவி யிருந்தது. அவருடைய தாயார், "இந்த இருட்டில் ஏன் போகிறாய்? காலையில் போ" என்று தன்னாலியன்றவரையில் சொல்லிப் பார்த்தாள். துளசிதாஸர், தமது மனைவியைப் பார்க்க வேண்டுமென்கிற ஆசையினால் அந்த இருட்டிலேயே கால் நடையாகப் புறப்பட்டுச் சென்று, நடு நிசி வேளையில் அவ்வூர் போய்ச் சேர்ந்தார்; அந்த வேளையில், மரமும் உறங்குகிற தென்று சொல்லும்படி அவ்வூர் முழுவதும் அடங்கியிருந்தது. துளசிதாஸர் தம்முடைய மாமனார் வீடு போய்ச் சேர்ந்த அச்சமயம் அவர் வீட்டுக் கதவு சாத்தியிருந்தபடியால், கதவை இடித்துத் தொந்தரவு செய்வது கூடாதென்று கருதி, வேறு வழியே உள்ளே பிரவேசிக்க இடமிருக்கிறதா என்று வீட்டை நாற்புறமும் சுற்றிப் பார்த்தார். அவ்வீட்டின் பின்புறம் ஒரு சுவரில் ஒரு பெரிய ஸர்ப்பம் தொங்கிக்கொண்டிருந்தது. அந்த ஸர்ப்பம் தாஸருக்கு ஒரு கயிறுபோல் தோன்றிற்று. அதனால், அவர் அந்த ஸர்ப்பத்தைப் பிடித்துக் கொண்டு சுவரேறிக் குதித்தார். அப்பொழுது மமதாதேவி விழித்துக்கொண்டபடியால் "இந்நேரத்தில் யார் சுவரேறிக் குதிப்பது? திருடனோ?" என்று பயந்தாள். அதற்குள் தாஸர் அவள் அருகே சென்று நின்றார். மமதாதேவி தன் நாயகனைக்

கண்டதும் வியப்படைந்து, "எப்படி இந்தச் சுவரில் ஏறினீர்?" என்று கேட்டாள். தாஸர், "உனக்கு என்னிட மிருக்கும் அன்பினால் நீ சுவரில் ஒரு கயிறு கட்டிவைத்திருக்கிறா யல்லவா? அந்தக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு சுவரின்மே லேறிக் குதித்தேன்" என்றார்.

இதைக் கேட்டதும் மமதாதேவி ஆச்சரிய மடைந்து, "நான் எங்கே கயிறு கட்டிவைத்தேன்? அப்படிச் செய்ய வில்லையே!" என்று கூறிக்கொண்டு, விளக்கை யேற்றிச் சுவ ரருகே போய்ப் பார்த்தாள். அங்கே சுவரில் ஒரு பெரிய ஸர்ப்பம் தொங்கிக்கொண் டிருக்கக் கண்டு, 'ஆ!' என்று விலகி அப்பா லோடி, "ஓ! இதைக் கயிறென்றெண்ணிப் பிடித்துக் கொண்டு ஏறியிருக்கிறார் என்னுடைய நாதன்! பிரேமையின் வேகத்தினால் வந்த மயக்கமிது!" என்று தனக்குள் கூறிக் கொண்டே தாஸருடன் வீட்டிற்குள் சென்று, அவரைப் பார்த்து, "நான் உமக்கு ஒரு விஷயம் கூறுகிறேன் இச்சமயம். கவனமாய் மனத்திற் கொள்ளவேண்டும்: நீர் உம்மைப் புத்தி சாலியென்று நினைத்துக்கொண் டிருக்கிறீர்! உமக்கு விவேகம் ஒரு சிறிதுமில்லை. உம்முடைய தாய் தந்தையரையும் உற் வினரையும் விட்டுவிட்டுப் பேயும் வெளிவர அஞ்சும் இந்த இரவில்;நீர் என் பொருட்டு இங்கே வந்திருக்கிறீர்! இப்படி நீர் என்பேரில் ஆசைகொண்டு இங்கே வந்தது, விளக்கை நோக்கிச் சூழ்ந்து நாசமடையும் விட்டிற் பூச்சியின் செயலுக்கு நேரா கும். பிள்ளை, பெண்டு, பொருள் இவர்களிடம் ஆசைகொள்வது போல் ஸ்ரீ ஹரியின் அம்சமாக அவதரித்த ஸ்ரீராமபிரானுடைய சரணாரவிந்தத்தில் ஆசைவைத்து, அவரை ஆராதித்து வந்தால் சகல நன்மைகளும் கைகூடும். அப்படிப்பட்ட மேலான வழியை நாடுவதை விட்டுப் பயனற்றதாகிய இந்த வழியில் சித்தத்தைச் செலுத்துவது அழகல்ல. இதனை ஆழ்ந்து ஆலோசனை செய்துபாரும்" என்று சொன்னாள்.

இதைக்கேட்டதும் துளசிதாஸர், தமது மனைவியினிடம் குருபாவனை கொண்டு, "நீ சொன்னது சிறந்தபோதனை! இனி நான் உய்ந்தேன். இனி இந்தப் பிரபஞ்சத்தில் எந்தப் பொருளின் மீதும் எனக்கு ஆசை கிடையாது. ஸ்ரீராம சரணாரவிந்தமே எனக்கு அடைக்கல ஸ்தானம்" என்று புகன்று, மறுநாளே அவ்விடமிருந்து புறப்பட்டு நேரே காசிக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே சென்றதும் பாகீரதியில் ஸ்நானஞ் செய்து நேமமாய் ஓரிடத்தில் அமர்ந்து, ஸ்ரீ ராமத்தியானம் செய்தார். இவ்வாறு தினந்தோறும் வழக்கமாய் வேறொன்றிலும் மனதைச் செலுத்தாமல் சதாகாலமும் ஸ்ரீராமத்தியானமே செய்து வந்தார். அப்படியிருக்கையில், ஒரு பூதம் அவர்முன் தோன்றி, "ஸ்ரீராம பக்தனே, உனக்கு வேண்டும் வரத்தைக் கேள். தருகிறேன்" என்று கூறியது. துளசிதாஸர், "நீ யார்?" என, பூதம், "நானொரு பூதம்! நீ கமண்டலத்திலே வைத்திருந்த ஜலத்தை யருந்தி என் தாகத்தைத் தீர்த்துக்கொண்டேன். நான் கங்கையில் ஜலம் அருந்துவதற் கில்லை—அருந்தினால் நாசமடைவேன். அப்படி எனக்கு ஒரு பெரியவர் சாபம் கொடுத்திருக்கிறார். நீ எனக்கு இந்த விதத்தில் உதவி செய்தவனாகிறபடியால் உனக்கு ஏதேனும் உதவி செய்ய விரும்புகிறேன்" என்று கூறியது. துளசிதாஸர், "நீ பூதம். உன்னால் எனக்கு என்ன செய்யக்கூடும்? நான் நாடியிருப்பது ஸ்ரீராம தரிசனம். அது உன்னால் செய்விக்க இயலுமா?" என்று கேட்டார். பூதம், "ஸ்ரீராமா என்னும் சப்தமே என் செவியில் விழக்கூடாது. விழுந்தால் எனக்கு நாசமுண்டாகும். ஆனால் நான் ஒன்று செய்கிறேன்: ஸ்ரீராமனுடைய பரமபக்தனாகிய ஆஞ்சநேயரை உனக்குக் காட்டுகிறேன்" என்றது. துளசிதாஸர், "நல்லது! அவரைக் காட்டு, போதும். அவருடைய துணைகொண்டு நான் ஸ்ரீராமனைக் காண்கிறேன்" என்றார். பூதம், "இந்நகரத்தில் ஒரு தெருவில் ஒரு பிராமணர் ஸ்ரீராமாயணம் வாசித்துப் பொருள் கூறுகிறார். அங்கே மாருதி

தினந்தோறும் பிராமண ரூபத்துடன் வந்து ஸ்ரீ ராமாயண சிரவணஞ் செய்து செல்கிறார். அவர் தினந்தோறும் எல்லாருக்கும் முன்னே வருவார். எல்லாரும் சென்ற பிறகே செல்வார். அவர் தம் தலையில் ஒரு குல்லா வைத்துக்கொண்டு கையில் பிரம்பு பிடித்திருப்பார்; அரையில் கிழிந்த வஸ்திரம் தரித்திருப்பார். பார்த்துக்கொள்'' என்று நவின்று மறைந்தது.

அப்பால் மறுநாள் துளசிதாஸர் ஸ்ரீராமாயண காலக்ஷேபம் நடக்குமிடத்துக்குச் சென்று, ஸ்ரீராமாயண கதையைக் கேட்டுக்கொண்டிருந்து, முடிவில் ஆஞ்சநேயர் யாரென்று கவனித்தார். பூதம் சொன்னபடி எல்லாரும் சென்ற பிறகு ஒரு பிராமணர் எழுந்து செல்லத் தொடங்கினர். துளசிதாஸர், அவர்தான் ஆஞ்சநேயரெனக் கண்டு ஓடி, அவருடைய சரணாரவிந்தத்தை இரு கரங்களாலும் பிடித்துக்கொண்டு பணிந்து "என்னைக் காப்பாற்றவேண்டும்'' என்று வேண்டினர். பிராமணர், "நான் அநாதை! பரம ஏழை! என்னுடைய சரணத்தை ஏன் பிடித்துக்கொள்கிறீர்?'' என்று கேட்டார். துளசிதாஸர், " நீர் ஆஞ்சநேயர் ! ஸ்ரீராமபக்தர்! எனக்கு ஸ்ரீராம தரிசனஞ் செய்துவைக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கொண்டார். ஆஞ்சநேயர், துளசிதாஸருடைய பூர்வ விருத்தாந்தத்தை நினைத்தார்; அவர் ஸ்ரீ வால்மீகி ரிஷியின் அம்சம் எனக் கண்டுணர்ந்தார், உடனே மனமுவந்து, "துளசிதாஸரே, உமது விருப்பப்படி ஸ்ரீராம தரிசனம் உமக்கு விரைவில் கிடைக்கும்'' என்று கூறி மறைந்தார். பின் ஆஞ்சநேயர் ஸ்ரீராமபிரானை நினைத்து, "துளசிதாஸருக்கு உமது தரிசனம் தந்தருளவேண்டும்'' என்று பிரார்த்தித்தார். ஸ்ரீராமர் "அவ்விதமே தருவேன்'' என்றருளி, அப்பால் ஒருநாள் துளசிதாஸர் இருந்துவரும் ஆச்ரமத்தின் பக்கமாய் மாறு வேஷங்கொண்டு சென்றார். அவருடன் ஆயிரக்கணக்கான வானர சேனைகளும் சென்றன.

துளசிதாஸர் அவர்களையெல்லாம் பார்த்து, 'யாரோ அரசனொருவன் சேனைகளுடன் செல்கிறான்; நமக்கென்ன ?' என்றிருந்துவிட்டார். ஸ்ரீராமரும் அவ்வழியே போய்விட்டார். ஸ்ரீராமர் சென்றவுடன், ஆஞ்சநேயர் துளசிதாஸரின் முன் தோன்றி "ஸ்ரீராம தரிசனம் செய்தீரா?" என்று கேட்டார். துளசிதாஸர், "இன்னும் அவர் தரிசனம் கிடைக்கவில்லையே!" என்றார். ஆஞ்சநேயர், "ஆகா! என்ன சொல்வேன் நான்! இப்போது இவ்வழியே சேனைகளுடன் சென்றாரே, அவர்தான் ஸ்ரீராமச்சந்திர பிரபு" என்றார். துளசிதாஸர், "நான் அவரை யாரோ ஓர் அரசன் சேனைகளுடன் செல்கிறானென்று நினைத்து விட்டேன். ஜலம் பூமியில் எல்லா இடங்களிலு மிருந்தபோதி லும் சாதகபக்ஷி மழை நீரைத் தவிர வேறு நீரைக் கிரகிப் பதில்லை. அதுபோல் ஸ்ரீராமபக்தர்கள் ஸ்ரீராம சொரூபத்தைத் தவிர வேறு சொரூபத்தை மனனம் செய்யமாட்டார்களல்லவா? வால்மீகி மகரிஷி வர்ணித்திருப்பதுபோலவே ஸ்ரீராமரை நான் காணவேண்டுகிறேன்" என்றார். ஆஞ்சநேயர், "ஸ்ரீராமச்சந்திர பிரபு அவ்வாறே தரிசனம் தந்தருளுவார்" என்று புகன்று, ஸ்ரீராமபிரானைத் தியானித்து துளசிதாஸருடைய விருப்பப்படி தரிசனம் தந்தருளவேண்டு மென்று பிரார்த்தித்தார். அப்பால், ஸ்ரீராமர் துளசிதாஸர் முன் தோன்றியருளினார். துளசிதாஸர் ஸ்ரீராம தரிசனங் கண்டதும் ஆநந்த பரவசராய் நின்று, அவரைத் துதித்து வணங்கினார். பகவான் அவர்க்குத் திரு வருள்புரிந்து மறைந்தார். ஆஞ்சநேயர் அக்கணமே அவர் முன் தோன்றி, "நீர் ஸ்ரீராம சொரூபத்தை நேரிலே கண்டீரல்லவா? ஆகையினால், நீர் இனி அவருடைய லீலையைப் பிரஜைகளுக்குக் கூறி, அவர்களைப் பக்தியில் ஈடுபடும்படி செய்வீர்" என்று புகன்று மறைந்தார். அப்பால் அந்த நிமிஷ முதல் துளசி தாஸர் பகவானுடைய குணாதிசயங்களைப் பாடி மகிழும்படியான சக்தியை அடைந்தபடியால், பரமானந்தத்துடன் பகவானைப் பாடித் துதிக்கலாயினர்.

துளசிதாஸர் பாடிய கீர்த்தனைகளெல்லாம் காசியி லிருந்த பக்தர்கள் கேட்டு மகிழ்ந்து, அவர் தங்கி யிருக்க ஒரு மடத்தைக் கட்டிக் கொடுத்தார்கள். துளசிதாஸர் அந்த மடத்தில் தங்கியிருந்தார். அவர்க்கு ஸ்ரீமந்தன் என்னும் பேர் கொண்ட ஒரு சிஷ்யன் ஏற்பட்டான். அவன் மடத்தில் தினந் தோறும் அநேகர் போஜனம் செய்வதற்கான ஏற்பாட்டைச் செய்துவந்தான். மற்றும் பல பக்தர்களும் அந்த அன்னதான கைங்கரியத்திற்கு உதவிசெய்ய முன் வந்தனர். ஆகவே, துளசிதாஸருடைய மடத்தில் நாடோறும் ஆயிரக்கணக்கான ஜனங்களுக்குப் போஜன மளிக்கப்பட்டு வந்தது. அதுகண்டு அநேகர் துளசிதாஸரைப் புகழ்ந்தார்கள்; சிலர் இகழ்ந்தார்கள். துளசிதாஸர் இரண்டையும் கவனியாமல் தமது காரியத்தி லேயே கண்ணுயிருந்தார். மடத்தில் இரவும் பகலும் வெகு நேரம் வரையில் பஜனை நடக்கும். ஆகவே இரவில் அந்த மடத்துக் கதவைத் திறந்து வைத்துவிட்டே அங்கிருப்பவர் கள் நித்திரை செய்வார்கள்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் இரவு இரண்டு திருடர் கள் மடத்தினுள்ளே புகுந்து, சில ஸ்வர்ண பாத்திரங்களைத் திருடி மூட்டையாகக் கட்டிக்கொண்டு, வெளியே போக வாயிற் படியண்டை வந்தார்கள். அங்கே இரண்டு சேவகர்கள் வில்லம்பு களுடன் சூரரைப்போல் நின்றுகொண் டிருந்தனர். அவர் களைக் கண்டதும் திருடர்கள், "நாம் போகும்போது இவர்க ளில்லையே ! இப்போது இவர்கள் எப்படி வந்தனர் ? தெரிய வில்லையே!"—என்றெண்ணி ஆச்சரியப்பட்டவராய், "சற்றுத் தாமதித்தால் சேவகர்கள் சென்று விடுவார், பிறகு போகலாம்" என்று அங்கொருபக்கம் ஒளிந்திருந்தார்கள். வாயில் காப்பவ ராய் வந்தவர்கள் ஸ்ரீராம லக்ஷ்மணர்க ளாகையினால், திருடர் களுடைய எண்ண மறிந்து நன்ருய் விடியும் வரையில் அவ் விடம் விட் டசையாமலிருந்தார்கள். திருடர்கள், 'அந்தோ, இன்று நாம் வகையாய் அகப்பட்டுக் கொண்டோம். தப்பவழி

யில்லை' என்று பயந்து, இன்னது செய்வதென்று தோன்றாமல் விழித்தார்கள்.

இந்தச் சமயத்தில் வழக்கம்போல் மடத்திலுள்ளவர்களெல்லாரும் எழுந்திருந்தார்கள். துளசிதாஸரும் எழுந்து வாயிலண்டை வந்தார். அப்போது அவர் திருடர்களைப் பார்த்துவிட்டார்; ஆனால், காவலாளர்களாக வந்திருந்த ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் மறைந்துவிட்டபடியால் அவர்களைக் காணவில்லை. திருடர்கள் துளசிதாஸரைக் கண்டதும் அவர் திருவடியில் விழுந்து பணிந்து, "ஸ்வாமி, வாயிற் கதவு திறந்திருந்தபடியால் நாங்கள், துணிவாய் இங்கே திருட நுழைந்து சில ஸ்வர்ண பாத்திரங்களைத் திருடி மூட்டையாகக் கட்டிக்கொண்டு வெளியேபோக இங்கு வந்தோம். இங்கே வாயிலில் நீங்கள் இவ்விடம் வந்து எங்களைக் காணும் வரையில் இரண்டு காவலாளிகள் வில்லும் அம்பும் கையிலுடையவர்களாய் நின்றுகொண்டிருந்தனர். அதனால், நாங்கள் இவ்விடத்தை விட்டு வெளியேபோக முடியாமல் தவித்துக்கொண் டிருந்தோம். நீங்கள் வந்தீர்கள். தப்ப வழியில்லாமையால் சரணமடைந்தோம். எங்களை மன்னித்தருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்கள்.

துளசிதாஸர், "அப்படியா! நல்லது '' என்று கூறித் தமது சிஷ்யர்களை அழைத்து "என்னைக் கேட்காமல் இந்த வாயிலில் இரண்டு காவலாளர்களை வைத்தது யார்?'' என்று கேட்டார். சிஷ்யர்கள், "நாங்கள் காவலாளிகளை வைக்கவில்லையே! தங்கள் திருவடி சாக்ஷியாகக் கூறுகிறோம்'' என்று கூறி வியப்புற்று நின்றனர். இதைக் கேட்டதும் துளசிதாஸர், ஸ்ரீராம லக்ஷ்மணர்களே காவலாளிகளாக வந்திருக்கவேண்டுமென் றுணர்ந்து அவர்களைத் தியானித்துத் தம்மை மறந்து நின்று சற்றுநேரம் துதித்துப் பாடிப் பின், திருடர்களைநோக்கி "நீங்கள் விரும்பிய ஸ்வர்ணபாத்திரங்களை எடுத்துக்கொண்டு செல்லுங்கள். இனி உங்களைத் தடுப்பதில்லை'' என்று சொல்ல, அவர்கள் உடனே துளசிதாஸருடைய இரண்டு பாதங்களையும் பிடித்துக்

கொண்டு, 'நாங்கள் மகாபாவிகள்; தீயர்கள்; ஞானமற்றவர்கள்; உம்முடைய சமாகமத்தினால் ஸ்ரீராமபிரானுடைய தரிசனம் கிடைக்கப் பெற்றோம். உமது தரிசனத்தினால் சூரியனுதிக்கும் போது இருள் நீங்குவதுபோல் எங்களுடைய அக்ஞானமும் நீங்கியது. எங்கள்மீது கிருபைவைத்து அபயதானம் கொடுத் தாதரிக்கவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டனர்.

துளசிதாஸர், "நீங்களிருவரும் பாக்கியசாலிகள்! சிறி தும் ஆயாசமின்றி ஸ்ரீராம லக்ஷ்மணர்களுடைய தரிசனங் கிடைக்கப் பெற்றீர்கள். நீரைத் தேடிப்போன ஒருவனுக்கு வழியில் அமிர்தங் கிடைத்ததுபோ லாயிற்று. இஃது உங்கள் அதிர்ஷ்டம்'' என, அவர்கள், மறுபடியும் துளசிதாஸரைப் பணிந்து, "நாங்கள் இனி எங்கும் போவதில்லை. இங்கேயே உமது பாதசேவை செய்துகொண் டிருப்போம்'' என்று கூறி அந்த மடத்திலேயே யிருந்தனர்.

"பகவானை அடைய விரும்புவோர் சத் ஸங்கம் செய்ய வேண்டும். அதனால் ஸ்ரீஹரியின் குணானுபவத்தை அறியலா கும். ஹரிநாம ஸ்மரணையிற் பிரீதியுண்டாகும். பின்பு அவர்கள் சாதுக்க ளாவார்கள்'' என்று கிருஷ்ணமூர்த்தி உத்தவர்க்கு இரகசியமாய்த் திருவாய் மலர்ந்தருளியுள்ளார் (பாகவதம்). அதுபோல் திருடர்கள் துளசிதாஸருடைய சமாகமத்தினால் சாது சங்கப் பிரியரானதைக் கண்டு எல்லாரும் ஆச்சரிய மடைந்தார்கள்; சாது சங்கத்திலும் சாதுக்களுக்கு சேவை செய்வதிலும் பகவானுடைய குணங்களைக் கேட்பதிலும் முன் னிலும் அதிகப் பற்றுடையவரானார்கள்.

இப்படியிருக்கையில், ஒரு நாள் மடத்தில் சாதுக்கள் போஜனம் செய்ய உட்கார்ந்திருந்தபோது ஒரு பிராமணன் வந்து வாயிற்படியில் நின்று ஜயசீதாராம் என்று கூறித் துளசி தாஸரைப் பார்த்து, "நான் பிரம்மஹத்தி செய்த பிராமணன்; பசியின் கொடுமையினால் வருந்துகிறேன். அன்ன மிடுங்கள்'' என்று கேட்டான். துளசிதாஸர் அவனை அழைத்துக்

கொண்டுபோய் உள்ளே மற்றப் பிராமணர்களுடன் உட்கார வைத்தார். பிராமணர்கள், "பிரமஹத்தி செய்த பிராமணனை எங்களுடைய மத்தியில் கொண்டுவந்து உட்கார வைக்கிறீர்களே! இது நியாயமா?" என்று கேட்டனர். துளசிதாஸர், "இந்தப் பிராமணன் பகவானுடைய திருநாமத்தை உச்சரித்தானல்லவா? அதனால் இவன் பிரமஹத்தி தோஷம் நீங்கியவனாகிறான். கலியுகத்தில் ஸ்ரீ ஹரி நாம மகிமை அற்புதமென்று கருதி ஸ்நான ஸந்தியாவந்தனாதி கர்மங்கள் செய்வதற்குமுன், பகவானுடைய நாமங்களையே சொல்லுகிறார்கள்; முடிவிலும் பகவானுடைய நாமங்களையே கூறுகிறார்கள். பிராம்மணப் பிரஷ்டனான அஜாமீளன் என்பவன் முடிவு காலத்தில் நாராயண நாமத்தைச் சொல்லி நற்கதி யடைந்தானென்பதை நீங்கள் பாகவதத்திற் படித்ததில்லையா?" என்றார். பிராமணர்கள், "ஸ்வாமி, நீங்கள் சொன்ன காரணங்களால் எங்கள் மனம் சமாதானப்படவில்லை. வேறேதேனும் அற்புதம் ஒன்று பிரத்யக்ஷத்தில் காட்டியருளல் வேண்டும்" என்றனர். துளசிதாஸர், "உங்களுக்கு என்ன திருஷ்டாந்தம் வேண்டும்" என்று வினவினார். அவர்கள், "ஸ்வாமி, விசுவேசுவருடைய ஸந்நிதியிலிருக்கும் நந்திகேசுவரர், இங்கே செய்துள்ள போஜனத்தில் சிறிது அருந்துவாரானால் எங்கள் மனச் சந்தேகம் நீங்கும்" என்றார்கள்.

துளசிதாஸர், உடனே ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் போஜனம் எடுத்துக்கொண்டு விசுவேசுவருடைய ஸந்நிதிக்குப் போய், அங்கே நந்திகேசுவரரை வணங்கித் துதித்து, "இந்த நைவேத்தியத்தைப் புசித்தருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். நந்திகேசுவரர், உடனே அந்த நைவேத்யத்தைப் புசித்தருளினார். எல்லாரும் அது கண்டு வியப்படைந்து, துளசிதாஸரைப் புகழ்ந்து மகிழ்ந்து, அவருடன் மடத்துக்குப் போய்ப் பிரமஹத்தி செய்த பிராமணனைப் பந்தியில் வைத்துக்கொண்டு போஜனம் செய்தார்கள்.

இவ்வாறு துளசிதாஸருடைய மகிமை விளங்கிக் கொண்டிருக்கையில் ஒருநாள், அந்தப் பட்டணத்தில் ஜைத்பால் என்னும் ஒரு வர்த்தகன் காலமானான். அவனுடைய மனைவி அவனுடன் அநுமரணம் செய்ய நிச்சயித்துக் கங்கைக் கரையில் அக்கினி வளர்க்கச் செய்து அதில் விழும் பொருட்டு துளசிதாஸருடைய மடமிருக்கும் வழியே போனாள். மடத்தின் முன்னே செல்கையில் துளசிதாஸரைத் தரிசித்துச் செல்லவேண்டு மென்கிற எண்ணம் அவளுக் குண்டாயிற்று. ஆகையினால், அவள் அம் மடத்திற் புகுந்து துளசிதாஸரை வணங்கினாள். துளசிதாஸர், "நன்மக்களைப் பெற்றுச் சுகமாய் வாழ்வாயாக'' என்று ஆசிர்வாதம் செய்தார். அந்த மாது, "ஸ்வாமி, இனி நான் மக்களை அடைவதெப்படி? என் பர்த்தா இறந்து விட்டார். நான் இதோ தீயில் விழப்போகிறேன். உமது தரிசனஞ் செய்ய அவாவுண்டானபடியால் இங்கே வந்தேன்'' என்று கூறி விசனப்பட்டாள். துளசிதாஸர், "அந்தச் செய்தியை நான் அறியேனாதலால் உனக்கு அப்படிப்பட்ட ஆசிர்வாதம் தந்தேன். நீ போ; ஸ்ரீராமபிரானுடைய அநுக்ரகத்தால் உன் கணவன் உயிர்பெற்றெழுவான்'' என்று கூறினார். அம்மாது அவருடைய பேச்சை நம்பி அவரை மறுபடியும் பணிந்து விடைகொண்டு சென்று கணவனைப் போய்ப் பார்த்தாள். கணவன் அப்போது நித்திரை தெளிந்து எழுந்திருப்பவனைப்போல் உயிர்பெற்றெழுந்தான். அந்த மாது அது கண்டு பரமானந்த மடைந்து, தன் கணவனை அழைத்துக் கொண்டு, துளசிதாஸரிடம் போய்த் தன் கணவனுடன் தானும் பணிந்து அவரிடம் விடைகொண்டு, தன் வீடு சென்று சுகமாக வாழ்ந்து வந்தாள். அப்பால் பக்தருடைய தரிசன விசேஷத்தையும் ஆசிர்வாத விசேஷத்தையும்பற்றி எல்லாரும் பேசி மகிழ்வாராயினர்.

துளசிதாஸரின் பிரபாவம் இப்படி நெடுகலும் பரவி

வரும் இக்காலத்தில், ஹஸ்தினுபுரியிலிருந்து அக்பர் என்கிற மொகலாய அரசன் அரசுபுரிந்து வந்தான். அவன் தாஸருடைய மகிமையைக் கேட்டு அவரைத் தன் அரண்மனைக்கு வரவழைத்து, அநேக உபசாரங்களைச் செய்து, "ஸ்வாமி, உம்முடைய பிரபாவத்தைப்பற்றி ஜனங்களெல்லாரும் வெகுதூரம் புகழ்ந்துபேசக் கேட்டிருக்கிறேன். உம்மை ஈசுவராம்சமென்று கூறி மகிழ்கிருர்கள்; வணங்குகிருர்கள். நீர் மனிதரால் செய்தற்கரிய செய்கைகளைச் செய்து வருவதாகக் கேள்விப்படுகிறேன்" என்ருன். துளசிதாஸர், "வேந்தே, அந்தச் செய்கைகள் யாவும் ஸ்ரீராமபிரான் செய்த செய்கைகள். அடியேன் அவருடைய சரணுரவிந்த தியானத்திலேயே இருப்பவன்" என்ருர்.

அக்பர், "நல்லது, ஸ்ரீராமனை எனக்குக் காட்டவேண்டும். அதுவரையில் நீர் இந்த இடத்தைவிட்டுப் போவது கூடாது" என்று கூறிவிட்டு அந்தப்புரஞ் சென்ருன். அப்பொழுது துளசிதாஸர் 'இதற்கென்ன செய்வது' என்றெண்ணிச் சங்கடத்தி லாழ்ந்து ஆஞ்சநேயரைத் தியானித்தார். ஆஞ்சநேயர் உடனே அநேக வானர வீரர்களை அக்பருடைய ஆஸ்தான மண்டபத்தின்மேல் வரவழைத்து வைத்து, "நீங்கள் உங்களுடைய சுபாவ குணங்களை அக்பரரசனுக்குக் காட்டுங்கள்" என்று ஆக்ஞாபித்தார். வானரர்கள், தங்கள் சேஷ்டைகளைச் செய்யத் தொடங்கி, இங்குமங்கும் ஓடிக்குதித்தனர்; மரங்களைப் பிடுங்கியெறிந்து கீச் கீச் என்று கூவினர்; அவ்வழியே செல்பவர்களுடைய காது மூக்குகளைக் கடித்தும் அவர்களுடைய ஆடைகளைக் கிழித்தும் பலவிதமாய்த் தொந்தரை செய்தனர்.

இவ்வாறு வானரர்கள் சேஷ்டை செய்வதை அறிந்த அக்பர், "நாம் துளசிதாஸரை வெளியே போகவொட்டாமல் செய்ததனுல் வந்த விபரீதம் இது" என்றுணர்ந்து அவரிடம் போய்ப் பணிந்து நின்று, "நான் செய்த அபராதத்தைய்

பொறுத்தருளவேண்டும்'' என்று வேண்டினுன். தாஸர், "ஸ்ரீராமதரிசனத்தை நீர் விரும்பினீர். ஆதலால், பிரதமத்தில் வானரங்கள் இங்கே வந்தனர். இன்னும் பதினெட்டுப் பத்மங்கள் கணக்கான வானரர்கள் வருவார்கள். அவர்கள் வந்த பிறகுதான் ஸ்ரீராமர் வருவார்'' என்றூர்.

அக்பர், "ஸ்வாமி, ஸ்ரீராம தரிசனம் அடைந்தது போதும். உமது மகிமையை அறியாமற்போனேன். வந்திருக்கும் வானரர்களை இப்போழுதே ஸ்ரீராமரிடம் அனுப்பிவையும்'' என்று கேட்டுக்கொண்டான். உடனே தாஸர் ஆஞ்சநேயரைத் தியானித்தார். தியானித்த வளவில் வானரங்களெல்லாம் மாயமாய் மறைந்தன. அது கண்டு ஆச்சரியப்பட்டு அநேகர் துளசிதாஸரைப் பணிந்து அவர்க்கு மாணவராயினர்.

அப்பால் அங்கே அரசனுடைய ஆதரவில் துளசிதாஸர் ஒரு வருஷ மிருந்தனர். பின் அவர் வடமதுரை சென்றூர். அங்கே, பிரியதாஸர் என்னும் ஒரு விஷ்ணுபக்த ரிருந்தார். அவர் வடமொழியில் வல்லவர். ஆகையினுல், அவர் கலியுகத்திலே அவதரித்த பக்தர்களுடைய சரித்திரங்களை யெல்லாம் வடமொழியில் எழுதிக்கொண் டிருந்தார். துளசிதாஸர் அவரிடம் போய்த் தம்மை இன்னுரென்று தெரிவியாமலே வணங்கி "தாங்கள் ஹரிபக்தர்களுடைய சரித்திரங்களை எழுதி வருவதாகக் கேள்விப்பட்டேன். அவைகளைக் காட்டியருளவேண்டும்'' என்றூர். அவர், "நான் அநேகமாகப் பக்தர்களெல்லாருடைய சரித்திரத்தையும் எழுதிவிட்டேன். ஆனுல் துளசிதாஸர் சரித்திரத்தை மாத்திரம் இன்னும் எழுதவில்லை. அச்சரித்திர மெழுதி முடிவாகவில்லை யென்கிற கவலை என்னைப் பாதிக்கிறது'' என்று கூறினுர்.

துளசிதாஸர், " இருக்கட்டும்; கவனிப்போம். மற்றவர்களுடைய சரித்திரத்தைப் பார்க்கலாமோ?'' என்றனர். பிரியதாஸர் தாம் எழுதிவைத்திருந்த புஸ்தகத்தை எடுத்துவந்து எல்லாருக்கும் முன்னிலையிலே வாசித்தார். வாசித்து வருகையில்

கடைசியில் துளசிதாஸருடைய சரித்திரமும் அதில் எழுதி யிருக்கக் கண்டு, எல்லாரும் ஆச்சரியப்பட்டனர். துளசி தாஸரும் வியப்படைந்தனர். பகவான் பக்தர்களிடம் அன் புடையவ ராகையினுல் பிரியதாஸருக்குத் தெரியாமலே துளசி தாஸருடைய சரித்திரத்தை அவருடைய புத்தகத்தில் எழுதி வைத்திருந்தனர். துளசிதாஸரும் பிரியதாஸரும், ஸ்ரீராம மூர்த்தியே இந்தமாதிரி திருவிளையாடல் செய்திருக்க வேண்டு மென்று தெரிந்துகொண்டு, அவரைத் தியானம் செய்து மகிழ்ந்தனர்.

---

## 4. நாமதேவர் சரித்திரம்

பண்டரிபுரத்தில் தாமாஜி என்றொருவ தையற்கார னிருந்தான். அவன் ஹரிபக்தியி லீடுபட்டிருந்தான். அவ னுடைய மனைவி கோணயி என்னும் மாதரசியும் ஹரிபக்தி யில் ஈடுபட்டவளாயிருந்தாள். இவர்களுக்குப் புத்ரபாக்கிய மில்லாதிருந்தது. அதனுல் அவர்கள் பகவானை நோக்கிப் பிரார்த்தித்தவா றிருந்தார்கள். ஒருநாள் பகவான் தாமாஜியின் முன் அவன் தியானத்திலிருக்கும்போது எழுந்தருளி, "அன்ப, நீ நாளையதினம் சந்திரபாகா நதிக்கு ஸ்நானம் செய்யப் போ. அங்கே நதியில் கரையோரமாய் ஒரு கிளிஞ்சிலில் ஒரு குழந்தை மிதந்துகொண்டு வரும். அது விட்டல என்னும் திருநாமத் தைச் சொல்லிக்கொண் டிருக்கும். அந்தக் குழந்தையை நீ எடுத் துக்கொண்டு போய், உன் மனைவியிடங் கொடுத்து வளர்த்து வா" என்றருளிச் செய்து மறைந்தார். தாமாஜி மறுநாள் பகவான் கூறியபடியே நதிக்குப்போய்ப் பார்க்கையில், கிளிஞ்சி லில் ஒரு குழந்தை மிதந்துவரக் கண்டு பரமானந்த மடைந்து, அக்குழந்தையை எடுத்துத் தனது மனைவியிடம் கொடுத்தான். மனைவி கோணயிதேவி அக்குழந்தைக்குப் பால் கொடுத்துத் தன் ஆருயிர்ச் செல்வமாக எண்ணி வளர்த்துவந்தாள். அக்

3

குழந்தை பகவானுடைய நாமத்தை உச்சரித்துக்கொண்டே தோன்றியபடியால், அதற்கு நாமதேவர் என்று தாமாஜியைச் சேர்ந்த பெரியவர்கள் பெயரிட்டார்கள்.

தாமாஜி நாடோறும் பாண்டுரங்கர் ஆலயம் போய் அவர்க்கு எதையேனும் வைத்து, நிவேதனம் செய்து வழிபட்டுவருவான். நாமதேவர் ஏழுவயது பாலகனானபின் ஒருநாள் தாமாஜி, வெளியூருக்குப் போயிருந்தான். அப்பொழுது கோணாயி நாமதேவரிடம் நைவேத்யத்தைக் கொடுத்து, "கண்மணி, உன் தந்தையைப்போல் நீ இன்று பாண்டுரங்கருடைய ஆலயம் சென்று, இதைப் பாண்டுரங்கருக்கு நிவேதனம் செய்துவா" என்று கூறி யனுப்பினாள். நாமதேவர் அன்னையின் கட்டளைப்படி நைவேத்யத்தை எடுத்துக்கொண்டு, ஆலயஞ் சென்று அதைச் சுவாமியின் திருமுன் வைத்து, "என் ஐயனே, இந்த நைவேத்யத்தைப் புசித்தருளும்" என்று பிரார்த்தித்தார். பகவான் அதனைப் புசிக்காம லிருந்தபடியால், "நைவேதயங் கொண்டுவர நேரமாயிற்று என்று சுவாமிக்குக் கோபம்போலும். நான் சிறியவன். என் பிழையை மன்னித்து நைவேத்யத்தைப் புசித்தருளவேண்டும். பிரபுவே, நீர் நைவேத்யத்தைப் புசிக்காவிட்டால், என் அன்னை என்மேல் சினங்கொண்டு என்னை அடிப்பாள்" என்று அடிக்கடி பகவானை நோக்கிப் பிரார்த்தித்தவண்ணமிருந்தார். ஆனால், விக்ரகம் எப்படி நைவேத்யத்தைப் புசிக்குமென்று அவர் எண்ணவில்லை. தினந்தோறும் தமது தந்தை கொண்டுவருகிற நைவேத்யத்தைப் பகவான் புசிப்பதாகவே அவர் எண்ணியிருந்தார். ஆதலால், "ஏ ஜகந்நாதா! பாண்டுரங்கா! இன்றைக்கேன் இப்படிச் செய்கிறீர்? இது என்னைச் சோதிக்கவா?" என்று கூறி அழுதார்.

பகவான் உடனே அவர் முன்னே தோன்றி அவரைச் சமாதானப்படுத்தி அவர் கொண்டுவந்த நைவேத்யத்தைப் புசித்து, "பாலக, நீ இதனை யாரிடமும் சொல்லாதே" என்று ஆக்ஞாபனம் செய்து மறைந்தருளினார். நாமதேவர் சந்தோஷத்துடன்

பகவானைப் பணிந்து வீட்டுக்குச் சென்றார். அவருடைய அன்னை 'நைவேத்யம் எங்கே'? என்று வினவினாள். நாமதேவர் 'பாண்டுரங்கர் புசித்துவிட்டார்' என, அந்த அம்மாள் அதைக் கேட்டதும் பெரு வியப்படைந்து, "சுவாமி புசித்தாரா? உண்மைதானா?" என்று பலதடவை கேட்டாள். நாமதேவர், "உண்மையில் பகவான் புசித்துவிட்டார். நான் கண்ணால் பார்த்தேன்" என்று கூறினார். அப்பால் தாமாஜி ஊரிலிருந்து வந்தான். இந்த அதிசயத்தை அவனிடம் அவன் மனைவி தெரிவித்து, "இஃது உண்மையா யிருக்குமா? இப்படி நடப்ப துண்டா?" என்று கூறி ஆச்சரியப்பட்டாள். தாமாஜி, நாம தேவரை யழைத்து, "அப்பனே, பகவான் பிரசாதத்தைப் புசித்தாரா? நிச்சயமாகவா? இன்று நாமிருவரும் நைவேத்தி யம் கொண்டுபோவோம்; பகவான் புசிப்பதை எனக்குக் காட்டவேண்டும் நீ" என்று கூறி, அன்றையதினம் பூஜா காலத்தில் வழக்கம்போல் நைவேத்யமும் பூஜா திரவியமும் எடுத்துக்கொண்டு நாமதேவருடன் ஆலயத்துக்குப் போனான்.

நாமதேவர் அங்கே போனதும் பகவானைப் பணிந்து எழுந்து மலர்களால் அர்ச்சனை செய்து, நைவேத்யத்தை ஸந்நிதியி லெடுத்துவைத்து, "பிரபுவே, இதைப் புசித்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார். பகவான் உடனே பிரத் யக்ஷமாய் எழுந்தருளி, அந்த நைவேத்யத்தைப் புசித்தருளி னார். அந்த அதிசயங்கண்ட தாமாஜி, என்றும் அடையாத ஆநந்த மடைந்து, நாமதேவரை இறுகத் தழுவி உச்சிமோந்து முத்தமிட்டு, "அப்பனே, நீ எனக்கு மகனாய்ப் பிறந்ததனால் நான் இன்று பகவானைக் கண்டேன். நீ உண்மையான பக்த னானதால் பகவான் உன் வேண்டுகோளுக் கிணங்கி நைவேத்தி யத்தைப் புசித்தருளினார். இதுவரையில் பகவான் நைவேத்தி யத்தை எந்தப் பக்தனுக்காகவும் புசித்ததில்லை!" என்று கூறிப் பகவானைப் பணிந்து, பெருமகிழ்ச்சியுடன் நாமதேவரை அழைத்துக்கொண்டு தன் வீட்டிற்குப் போய் மனைவியிடம்,

“ பகவான் நைவேத்யத்தைப் பிரத்யக்ஷமாய் வந்து புசித்தார். நாமதேவன் நிஜபக்தன். இல்லையேல் பகவான் இப்படித் திருவுள மிரங்கமாட்டார்” என்று சொன்னான். கோணாயி தேவியும் அதைக் கேட்டு மகிழ்ந்து, மகனை வாரியெடுத்து முத்தமிட்டு “என் தெய்வமே! என் செல்வமே! என் கண்ணே!” என்று சீராட்டி ஆனந்தமடைந்தாள்.

அப்பால் நாமதேவர் தக்க பருவமடைந்ததும் தாமாஜி, அவருக்கு இராஜாயி என்னும் பெயர் கொண்ட ஒரு பெண்ணைத் தேடி விவாகம் செய்வித்தான். அதன்பின் நாமதேவருக்கு ஒரு குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு நாமகரணஞ் செய்யுங்காலத்தில், பகவானே ஒரு பந்துவைப்போல் காணிக் கையுடன் வந்திருந்து, குழந்தைக்கு நாராயணன் என்று பெயரிடும்படி கூறிவிட்டு மறைந்தார். அந்த அதிசயங் கண்ட அனைவரும் மனமகிழ்ந்து பகவானைத் துதித்துப் பணிந்தார்கள்.

நாமதேவர் எப்போதும் பகவானைத் தியானிப்பதும் அவருடைய குணங்களைப் பாடி ஆனந்தமடைவதும் அவருடைய அடியார்களுடன் கூடி பஜனை செய்வதுமாக இருந்து வந்தார்; தமது பரம்பரைத் தொழிலாகிய தையல் வேலையைச் செய்வதில்லை; பொருளைத் தேடவேண்டுமென்கிற எண்ணமே இல்லாதவரா யிருந்தார். இதனால் அவருடைய தாயார் அவரை அழைத்து, “நீ யேன் நமது தொழிலில் சிறிதும் சிரத்தை கொள்ளாமல் சதாகாலமும் ஹரிபஜனை செய்துகொண்டு அலைகிறாய்? இப்படியிருந்தால் குடும்ப காலக்ஷேபம் நடப்பது எப்படி? இனி என்னாலும் தேடியிட இயலாது. உன் தந்தையாலும் தேடியிட இயலாது. குடும்பச் செலவுக்கு வேண்டிய பொருளை நீயே தேடிவரவேண்டும்” என்று கடிந்து கொண்டாள்.

நாமதேவர், மனவருத்தமடைந்து ஆலயத்திற்குச் சென்று பகவானிடம் முறையிட்டுக்கொண்டார். பகவான், அவர்

தியானத்திலே தோன்றி, "நீ கவலைப்படாதே. நீ எப்போதும் என்னிடமே இருக்கக் கடவாய். அவ்வாறு இருப்பாயானால் மாயா மமதைகள் உன்னை அணுகா. நீ என்னுடைய அம்சமாக வந்தவன். சூரியனும் அதன் கிரணமும் எப்படி வெவ்வேறான இரண்டு பொருள்கள் அல்லவோ, அப்படியே நீயும் நானும் என்று அறிந்துகொள்'' என்றார். நாமதேவர், "பிரபுவே, இந்த ஞானமேன் எனக்குச் சொல்லுகிறீர்? நீர் பிரபு. நான் சேவகன். நீர் சகல ஐசுவரிய சம்பன்னன். நான் தரித்திரன். உம்முடைய திருநாமமே எனக்கு ஐசுவரியம்'' என்றார்.

நாமதேவர் இப்படி பகவானுடைய ஸந்நிதியில் தியான சமாதியிலிருக்கையில், அவர் வீட்டில் அவருடைய மனைவி மாமியாரைப் பார்த்து, "கழுத்திற் கட்டக் கருமணிகூடக் கிடையாது. இடுப்பில் கட்ட இரண்டாந் துணியுமில்லை. தரித்திரத்தை அனுபவிக்கவே உம்முடைய பிள்ளைக்கு நான் வாழ்க்கைப்பட்டேன்'' என்று கூறி நொந்துகொண்டாள். அதைக் கேட்டதும் கோணாயி, வருத்தமுற்று வீட்டைவிட்டு வெளியே போய்விட்டாள். அவ்வேளையில் பகவான் வர்த்தகனைப்போல் அவ்வீட்டிற்குப்போய், இராஜாயியைக் கண்டு, "நான் உன் கணவன் நாமதேவின் நண்பன். அவன் பொருளில்லாமல் கஷ்டப்படுகிறா னல்லவா? அந்தக் கஷ்டத்தைத் தீர்ப்பதற்காகவே நான் வந்தேன். அவன் வெளியே சென்றிருக்கிறான். இருந்து பார்க்க எனக்கு நேரமில்லை. இந்தப் பையில் நிறைய ஸ்வர்ண மிருக்கிறது. இதை அவன் வந்ததும் அவனிடம் கொடுத்துவிடு. 'யார் கொடுத்தது' என்று கேட்டால் 'உனது நண்பன் கேசவன் வந்து கொடுத்துப் போனான்' என்று சொல்லு'' என நவின்று உடனே மறைந்தார்.

இராஜாயி அப்பொழுது பெருமகிழ்ச்சி யடைந்து, அந்தப் பையைத் திறந்து அதிலிருந்து கொஞ்சம் ஸ்வர்ணத்தை எடுத்துக்கொண்டு கடைக்குச் சென்று, வீட்டுக்கு வேண்டிய சகல சாமான்களையும் வாங்கிவந்து, வீட்டில் நிரப்பிவிட்

டுத் தன் அலுவலைக் கவனித்தாள். அச்சமயம் கோணாயி, யார் வீட்டிலோ போய்க் கொஞ்சம் தானியத்தை வாங்கிக் கொண்டு, நாமதேவரைச் சமாதானப்படுத்தி அழைத்துவர எண்ணி ஆலயத்துக்குச் சென்றாள். நாமதேவர் அப்பொழுதுதான் தியான சமாதியிலிருந் தெழுந்தார்; தமது அன்னையைக் கண்டதும் கோவிலின் பின்பக்கம் போய் மறைந்தார். கோணாயி அவ்விடத்தில் தன் பிள்ளை இல்லாதிருக்கவே ஸந்நிதியில் நின்று, "எங்களையெல்லாம் இப்படிக் கஷ்டப்பட வைத்து நாமதேவன் எப்போதும் உம்முடைய நாமத்தையே சொல்லிக்கொண்டு பித்தனைப்போல் காலங் கழிக்கிறான். இதை நீரும் பார்த்துக்கொண் டிருக்கிறீர். குடும்பத்தைக் கவனிக்காத பிள்ளை இருந்தென்ன? இறந்தென்ன?'' என்று கூறி வருந்தி யழுதாள். பகவான் அவள் முன் தோன்றி, "நாமதேவன் என் பிரிய பக்தன். இராக்ஷதரில் பிரஹ்லாதன் பிறந்ததுபோல் உனக்கு நாமதேவன் பிள்ளையாக வந்திருக்கிறான். ஏன் வருந்துகிறாய்?'' என்றார்.

கோணாயி இதில் திருப்தியடையாமல் அம்மன் ஸந்நிதிக்குப் போய்த் தன் குறை கூறி முறையிட்டாள். அங்கே நாமதேவர் இருந்தார். அவரைக் கண்டகோணாயி விரைந்து அவரிடம் சென்று, அவர் கரத்தைப் பிடித்து, "வா வீட்டிற்கு. சதாகாலமும் இங்கென்ன வேலை உனக்கு?'' என்று கூறி அழைத்துக்கொண்டு வீட்டிற்குப் போனாள். வீட்டில் சகல சாமான்களும் நிறைந்திருக்கக் கண்டு, நாமதேவர் தம்முடைய அன்னையைப் பார்த்து, "இந்தப் பொருள்களெல்லாம் நம் வீட்டிற்கு எப்படி வந்தன?'' என்று கேட்டார். கோணாயி "எனக்கொன்றும் தெரியாது. நானும் இவைகளைக் கண்டு ஆச்சரியப்படுகிறேன்!'' என்றாள். அப்பால் நாமதேவர், மனைவியை அழைத்துக் கேட்டார். மனைவி, பொருளிருப்பது தெரிந்தால் தன் நாயகர் பாகவதர்களுக்குப் பங்கிட்டுவிடுவாரென்று பயந்து, உண்மையைச் சொல்லத் தயங்கினாள். அப்பொழுது அங்கே

இருந்த வீட்டு வேலைக்காரி ஒருத்தி, "சுவாமி, யாரோ கேசவ செட்டி என்னும் பெயர்கொண்ட வியாபாரி ஒருவர் இரண்டு நாழிகைக்குமுன் இவ்விடம் வந்தார். அவர், ஒரு பை ஸ்வர்ணம் கொண்டு வந்து இராஜாயி அம்மாளிடம் கொடுத்து, 'நான் நாமதேவின் நண்பன். அவன் பொருளில்லாமல் கஷ்டப்படுவதாகக் கேள்விப்பட்டேன்; அதனால் இந்தப் பொருளைக் கொண்டு வந்து தந்தேன். இங்கே அதிக நேரம் தாமதிக்க எனக்குச் சாவகாசமில்லை' என்று கூறிப் போய்விட்டார். இதுதான் நடந்த சம்பவம்" என்றாள்.

நாமதேவர் இதைக் கேட்டதும் வந்தவர் பகவானென்று நிச்சயமா யறிந்து, ஆநந்த மடைந்து, அவரைத் துதித்துப் பணிந்து, "என்னை ஆட்கொண்ட ஐயனே, கடலில் மழை பெய்தா லென்ன? பெய்யாவிட்டா லென்ன? எனக் கென்னத் திற்கு இந்தத் திரவியமெல்லாம். உம்முடைய திருநாம மென்னும் தனத்தால் அடியேன் திருப்தியடைந் திருக்கிறேன்" என்று கூறி, உடனே பாகவதர்களை வரவழைத்து அவர்களுக்கு அந்தப் பொருளையெல்லாம் வழங்கி மகிழ்ந்தார்.

இப்படி யிருக்கையில், ஒருநாள் ஞானதேவர் என்னும் பக்தரொருவர் நாமதேவரை வந்து பார்த்தார். நாமதேவர் அவரை வணங்கி வரவேற்றுச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்தார். ஞானதேவர், "நாமதேவரே, உம்முடைய பாக்ய விசேஷம் சொல்லுதற்கரிது. பண்டரிநாதரிடம் பக்தியுடையவராய் ஆசாபாசங்களை விட்ட உம்முடைய பெருமையே பெருமை! ஜீவன் முக்தனானாலும், குருசேவை செய்வதையும், தெய்வ வழிபாடு செய்வதையும், தீர்த்தாடனஞ் செய்வதையும், பஜனை புரிவதையும் விடக்கூடாது என்பதை நீர் அறிவீர். ஆதலால், உம்முடன் சகல தீர்த்தங்களையும் சேவிக்க எனக்கு விருப்ப முண்டா யிருக்கிறது. அதன்பொருட்டு உம்மை அழைக்க வந்தேன். என் மனோரதத்தைப் பூர்த்திசெய்ய வேண்டும்" என்றார்.

நாமதேவர் இதைக் கேட்டதும், "என்ன விந்தையிது! பண்டரிக்ஷேத்திரத்தை விட்டுத் தீர்த்தாடனம் ஏன் செய்ய வேண்டும்? விலையுயர்ந்த கஸ்தூரியைத் தள்ளிவிட்டு முட்டைச் சாம்பலை அடைய விரும்புவது போலல்லவா இருக்கிறது இச்செய்கை?'' என்று கருதி, ஞானதேவரை நோக்கி, "சுவாமி, நான் பாண்டுரங்கருக்கு அடிமையா யிருக்கிறேன். அவருடைய உத்தரவின்றி அடியேன் வர இயலாது. அவரிடமிருந்து உத்தரவு பெறுவீரானல் உம்மோடு வரத் தடையில்லை'' என்றார்.

ஞானதேவர் உடனே நாமதேவருடன் பாண்டுரங்கருடைய ஆலயஞ் சென்று, பகவானைப் பணிந்து துதித்து எழுந்து, "என் ஐயனே, நாமதேவரை என்னுடன் தீர்த்தாடனஞ் செய்ய அனுப்பவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். பகவான், "பிர்மஞானத்தை யடைந்த நீ யேன் தீர்த்தாடனம் செய்ய விரும்புகிறாய்?'' என்று கேட்டார். ஞானதேவர், "சத்புருஷரான நாமதேவருடைய பழக்கத்தை அடைந்து, அதனால் தேக சார்த்தகம் செய்துகொள்ள விரும்பியே அவருடன் தீர்த்தாடனம் செய்ய விரும்புகிறேன்'' என்றார்.

பகவான் சந்தோஷமடைந்து, ஞானதேவருடன் தீர்த்தாடனம் செய்து வரும்படி நாமதேவருக்கு அநுமதி தந்தார். பின்னர், இருவரும் பெருமகிழ்ச்சியுடன் புறப்பட்டுச் சந்திரபாகா நதியைத் தாண்டிச் சென்றனர். நாமதேவர் பண்டரிபுரத்தை விட்டுச் செல்ல மனமில்லாதவராய் வழியில் தயங்கித் தயங்கி நின்று, பண்டரிபுரத்தைத் திரும்பித் திரும்பிப் பார்த்தவண்ணம், "ஏ பண்டரிநாதா, உன்னுடைய திருமுக தரிசனம் இனி எனக்கு என்று கிடைக்கப்போகிறது? எளியேனுடைய ஹிருதயத்தில் எப்போதும் எழுந்தருளி யிருக்க வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டே நடந்தார். ஞானதேவர், "ஏன் இப்படி வருந்துகிறீர்? பகவான் உம்

முடைய ஹிருதயத்தில் விளங்குகிறார். பராத்பரரான அவருக்குள் நீர் இருக்கிறீர். நீர் இதைப்பற்றி விசாரியாமல் வருந்துகிறீர்'' என்றார். நாமதேவர், “சுவாமி, தியானிக்கத் தகுந்தவரான பாண்டுரங்கரை எனக்குக் காண்பியும். ஸ்ரீஹரியின் விக்ரக சொரூபத்தையே என் மனம் சேவிக்க விரும்புகிறது. அவரை அன்புடன் பாடவும் பாடி ஆடவும் பாத சேவை செய்யவும் அடியேனுடைய மனம் ஈடுபட்டிருக்கிறது'' என்று கூறினார்.

இவ்வாறு பகவத் விஷயமாக இருவரும் பேசிக்கொண்டு தீர்த்தாடனம் செய்துவருகையில் ஒருநாள், ஞானதேவர், நாமதேவரை நோக்கி, “நீர் எதனால் பகவானை ஸ்வாதீனப் படுத்திக்கொண்டீர்? அந்தப் பக்தி மார்க்கத்தை எனக்குக் கூற வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார். நாமதேவர், அவருடைய திருவடியைப் பிடித்துக்கொண்டு, “அடியேன் அக்ஞானி; ஒன்றுமே தெரியாதவன். அப்படிப்பட்ட என்னை நோக்கி, அத்யாத்மஞான விஷயமாய் வினவியது, கற்பக விருக்ஷம் லோபியினிடம் போய் யாசகம் செய்ததுபோலிருக்கிறது'' என்று கூறினார். ஞானதேவர், “அடியேனிடம் ஐயங்கொள்ளாமல் உமது அநுபவத்தைக் கூறும். அன்பில்லாத ஆத்ம ஞானத்தினால் என்ன பயனுண்டு? சொல்லும்'' என்று கேட்டார்.

நாமதேவர் கூறுகிறார்: “பூர்ண வைராக்கியமும், சகல பூதங்களிடத்து இரக்கமும், நீ நான் என்கிற பேத பாவனை இல்லாமையுமே சுத்த பஜனையாகும். இந்த நிலையில்லாவிடில் சாதனங்கள் வீணாகும். உத்தமம், மத்திமம், அதமம் என்னும் தன்மைகளைக் குறிப்பிடாமலிருப்பதே நமஸ்காரமாகும். இப்படிப்பட்ட தன்மையுடையவனே ஆநந்த புருஷனாயிருப்பான். சர்வேசுவரன் எங்கும் வியாபித்திருக்கிறான் என்னும் ஞானம் மனத்தில் ஸ்திரப்படுவதுதான் தியானமாகும். மனத்தை ஸ்ரீஹரியின் கீர்த்தனத்தில் ஈடுபடச் செய்வதுதான் சிரவண

மாகும். லோபிகள் பொருளைச் சேர்ப்பதன்பொருட்டு விவகாரத்திலே சித்தத்தை வைப்பதுபோல் ஆத்ம ஹிதத்திற்கு விசாரணை யுடைத்தாயிருப்பதே மனனமாகும். சாதக பக்ஷிகள் பூமியிலிருந்தாலும் சதாகாலமும் அவை மேக மண்டலத்திலேயே லக்ஷியம் வைத்திருப்பதுபோல் வெளி நோக்கமாகக் குடும்பத்தைக் கவனித்துக்கொண்டு ஹிருதயத்தில் ஸ்ரீ ஹரியைத் தியானித்து, பக்தியை வகித்திருப்பதுதான் நிதித்யாஸனமாகும். இதுதான் எனது அநுபவமான பக்திமார்க்கம்'' என்று கூறி முடித்தார். ஞானதேவர் இதைக்கேட்டுப் பரமாநந்தமடைந்து, "உமக்கு நிகரான பக்தருண்டாவ தருமை!'' என்று நாமதேவரைப் புகழ்ந்து பகவானைத் தியானித்தார்.

அப்பால் இருவரும் வழி நெடுகலும் பகவானுடைய குணங்களைப்பற்றிப் பேசிக்கொண்டே ஹஸ்தினபுரி போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடத்திலிருந்த பக்தர்கள் நாமதேவரையும், ஞானதேவரையும் ஜய சப்தத்துடனும், வாத்யகோஷத்துடனும் வரவேற்று, ஒரு விடுதிக்கு அழைத்துக்கொண்டு போனர்கள். அந்தக் காலத்தில் ஹஸ்தினபுரியில் முகமதிய அரசனொருவன் அரசனா யிருந்தான். அவன் நாமதேவருக்குப் பக்தர்கள் செய்யும் மரியாதையை வெறுத்து, அரண்மனையை விட்டுப் புறப்பட்டுப் பரிசனங்களுடன் நாமதேவரின் முன்னே போய், வழி மறித்து நின்று, ஒரு பசுவைக் கொண்டுவரச் செய்து, அதை அவர் முன் வெட்டி வீழ்த்தி, "நீர் உண்மையான பக்தரானல் இதனை உயிர் பெற்றெழும்படி செய்யும் ; பார்க்கலாம்; இதனை எழுப்பவில்லையானல் உம்மை உண்மை பக்தரல்லரென்று கருதிக் கொன்று விடுவேன்'' என்றான். நாமதேவர், மரியாதையுடன் அரசனை நோக்கி, "வேந்தே, நான்கு நாள் தவணை வேண்டும். அதற்குள் இப்பசுவை எழுப்புகின்றேன்'' என்றார். அரசன் "அப்படியே தவணை தந்தேன்'' என்று கூறி, அரண்மனை சென்றான்.

அப்பால் நாமதேவர் அவ்விடத்தைவிட்டு அசையாமல் நின்று, பகவானைத் துதித்து மனமுருகிக் கண்ணீர் பெருக்கினர். அவருடனிருந்த பக்தர்களனைவரும் நாமதேவரிடம் இரக்கங்கொண்டு பகவானைத் துதித்து, "அடியார் இடர் அகல அருள்புரியும் அமல மூர்த்தியே, உன் திருவடி மறவாத இந்த அன்பரை நீர்தான் காப்பாற்றவேண்டும்" என்று கூறிப் பிரார்த்தித்துவிட்டுத் தத்தம் வீட்டிற் கேகினர். நாமதேவர் முதல் நாள் முழுவதும் வேறு சிந்தனையின்றிப் பகவானைத் துதித்த வண்ணமே நின்றார்; பின் மறுநாள் பசுவின் கொம்பைப் பிடித்த வண்ணம் அங்கேயே அமர்ந்து, 'அடியேனைக் கைவிடாதாளவேண்டும். பண்டரிநாதா, உன்னுடைய பாதாரவிந்தம் மறவாத ஏழையல்லவா நான்?' என்று கூறிப் பகவானைப் பிரார்த்தித்தார். இவ்வாறு மூன்று நாள் அல்லும் பகலும் வேறு சிந்தனையில்லாமல் பகவானையே துதித்துக்கொண் டிருந்தார். அந்த நகர வாசிகளெல்லாரும் இந்த அதிசயங் கண்டு வியப்படைந்தார்கள்; "இந்த ஆபத்திலிருந்து பகவான் இவரை எவ்வகையில் காப்பாற்றுவாரோ தெரியவில்லையே!" என்று கவலையுற்றார்கள்.

இப்படியிருக்கையில், நான்காவது நாள், பகவான் நாமதேவரின்முன் தோன்றினர்; தோன்றியவளவில், பசு உயிர் பெற்றெழுந்தது. நாமதேவர் பகவானுடைய இரண்டு திருவடிகளையும் பிடித்துக்கொண்டு "சுவாமி, ஏன் இவ்வளவு காலதாமதம்? ஏழை செய்த பிழை ஏதேனு முண்டோ?" என்று கேட்டார். பகவான், "அன்ப, நீயேன் இந்தச் செய்கைக்கு நான்குநாள் தவணை கேட்டாய்? 'இப்பொழுதே எழுப்புவேன்' என்று சொல்லியிருந்தால், நான் அன்றையதினம் அப்பொழுதே பிரசன்னமாயிருப்பேன்! நீ செய்துகொண்ட சங்கற்பப்படி வந்தேன்" என்று கூறினர். நாமதேவர், "ஹா! ஹா! நமக்கு அவ்வளவு மனோதிடமில்லாமற் போயிற்றே!" என்று கருதிப் பகவானைத் துதித்தார். பகவான் அவர் பார்த்

துக்கொண் டிருக்கும்போதே மறைந்து விட்டார். பசு பிழைத் தெழுந்த தென்று ஜனங்கள் அரசனுக்குத் தெரிவித்தார்கள். அரசன் உடனே தன் பரிவாரங்கள் சூழ, அவ்விடம் வந்து பார்த்து, அதிசயமடைந்து நாமதேவரைப் பணிந்து அவர்க் குத் தக்க மரியாதை செய்தனுப்பினுன்.

அப்பால், ஞானதேவரும் நாமதேவரும் அங்கிருந்து புறப் பட்டுக் காசி, துவாரகை, மதுரை முதலிய ஸ்தலங்களுக்குச் சென்று திரும்பினுர்கள். வழியில் ஒரு வனத்தில் வரும்போது தாக உபத்திரவம் ஏற்பட்டமையினுல் இருவரும் அங்கிருந்த ஒரு கிணற்றுக்குச் சென்று பார்த்தார்கள். கிணற்றில் ஜலம் ஆழத்திலிருந்தது மல்லாமல், இறங்கி நீரருந்தப் படிக்கட்டு மில்லே. ஆகவே, நாமதேவர் உடனே பகவானைப் பிரார்த்தித்தார். பிரார்த்தித்த வளவில் அந்தக் கிணற்று ஜலம் மேலே அவர்கள் கைக்கெட்டும்படியான இடத்திற்கு வந்தது. இருவரும் அது கண்டு அதிசய மடைந்து, பகவானுடைய திருவருளே யெண்ணி வியந்தபடியே நீரருந்திப் பெருமகிழ்ச்சியுடன் சென்றனர்.

பின்னர் அவர்கள் பதிரிகாசிரமம் போய், அப்பால் தெற்கு நோக்கி வந்து, சேது தரிசனமும் ஸ்ரீராமலிங்க தரிசனமும் செய்துகொண்டு ஸ்ரீரங்கநாதர், வரதராஜர்களுடைய தரிசன மும் செய்து, பின் கவுண்டாநாகநாதம் என்னும் புண்ணிய க்ஷேத்திரத்தை யடைந்தனர். அது சிறந்த சிவ க்ஷேத்திரம். இவர்கள் போய்ச் சேர்ந்த அன்றைய்தினம் சிவராத்திரியாகையி னுல், அந்த க்ஷேத்திரம் இரண்டாவது கைலாசம்போல் விளங்கி யது. அதுகண்டு இருவரும் மகிழ்ந்து, அந்த க்ஷேத்திரப் புண்ய தீர்த்தத்தில் நீராடி நேமநிஷ்டைகளே முடித்துக்கொண்டு ஆலயஞ் சென்று சிவபெருமானைக் கண்களாரத் தரிசித்துத் துதித்து வணங்கினுர்கள். அப்பால் நாமதேவர் தாள வீணைக ளுக் கிணங்கக் கீர்த்தனங்கள் பாடித் துதித்தார். அவர் பாடிய கீர்த்தனங்களேக் கேட்க அநேகர் வந்து கூடினர். அச் சமயத்தில், கோவில் குருக்களாகிய அந்தணர், பூஜா திரவியங்க

ளுடன் அவ்விடம் வந்து பார்த்து ஜனக் கூட்டத்தை விலக்கி ஞர். அவர்கள் விலகவில்லை. பின் அவ்வந்தனர் நாமதேவரை அழைத்து, "நீர் கோவிலுக்குப் பின்புறம் போய்ப் பாடிக்கொண் டிரும். வழியை அடைத்துக்கொண்டு பாடாதேயும்" என்று கடிந்துகொண்டார். அதன்மேல் நாமதேவர் பகவானைத் தியா னித்துக்கொண்டே கோவிலின் பின்புறம் போய் நின்று மன உருக்கத்துடன் பாடினர். பகவான் பக்தர்க் கிரங்கும் பரம கருணாநிதியாகையினல் கிழக்கு நோக்கி யிருந்த அந்த ஆலயம், நாமதேவர் நின்று பாடுகிற மார்க்கமாய்—அதாவது மேற்குப் பக்கமாய்த் திரும்பிவிட்டது. அதுகண்டு அனைவரும் வியப் படைந்தனர். நாமதேவரும் ஜகதீசனுடைய திருவருட் செயலை எண்ணி மகிழ்ந்தார். எல்லாரும் நாமதேவரையும் ஞான தேவரையும் பரம பக்த சிரோமணிகளென்று கொண்டாடி வணங்கினர்கள்.

அப்பால் அவர்கள் இருவரும் அந்த க்ஷேத்திரத்தை விட் டுப் புறப்பட்டுப் பண்டரிபுரம் வந்து, அங்கே பண்டரிநாத ருடைய திருவருளின் துணைகொண்டு பிராமண போஜனம் செய்வித்து, யாத்திரையைப் பூர்த்திசெய்து சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

---

## 5. விசோபாகேசர் சரித்திரம்

கோரா என்னும் பெயர்கொண்ட ஒரு பக்த ரிருந்தார். அவர் குயவர் குலத்தைச் சேர்ந்தவர். அவர் ஒரு நாள் நாம தேவரையும் ஞானதேவரையும் தமது கிரகத்திற்கு வந்து போஜனஞ்செய்து போகுமாறு வேண்டிக்கொண்டார். அவர்கள் அவருடைய வேண்டுகோளுக் கிணங்கி, அவர் வீட்டிற்கு வந்தனர். கோரா அவர்களுக்கும் இன்னும் சில பக்தர்களுக் கும் ஆசார உபசாரங்களுடன் திவ்ய போஜனம் செய்வித்தனர். அப்பால் பக்தர்களெல்லாரும் அந்த வீட்டில் ஓரிடத்தில்

அமர்ந்து, தாம்பூலந் தரித்துக்கொண்டனர். அச் சமயத்தில் ஞானதேவர் கோராவைப் பார்த்து "ஐயா, பானைகளைப்போ லிருக்கிற எங்களில் வெந்த பானைக ளெவை? வேகாத பானைக ளெவை? பார்த்துச் சொல்லும்!" என்று விநோதமாகக் கேட்டார்.

உடனே கோரா, பானையைத் தட்டும் கட்டையைக் கையில் எடுத்து அங்கிருந்த பக்தர்கள் ஒவ்வொருவருடைய தலையையும் தட்டிக்கொண்டே வந்தார். எல்லாரும் மௌனமாயிருந்தனர். நாமதேவர் மாத்திரம் தமது தலையைத் தட்ட வந்த பொழுது "ஏனடிக்கிறீர்?" என்று கேட்டார். கோரா, "இது தான் வேகாத பானை" என்றார். அதுகேட்ட பக்தர்களனைவரும் நகைத்தார்கள். நாமதேவர் அதிக விசனமும் வெட்கமு மடைந்து, அங்கிருந்து புறப்பட்டுப் பண்டரிநாதரின் ஆலயம் போய் ஸந்நிதியில் நின்று, கண்களிலிருந்து நீர் பெருகத் துக்கத்துடன் பகவானை யழைத்து, "கோரா பக்தர் என்னை மாத்திரம் வேகாத பானை யென்று சொல்லி, அவமானப் படுத்தியதேன்?" என்று முறையிட்டார். பகவான், "நாமதேவ, கோரா பக்தர் உண்மையைத்தான் சொன்னார். உலகத்தில் குருவினுடைய அநுக்ரகத்தை அடையாதவன் எவனோ, அவன் பக்குவி யாகமாட்டான்" என்றார். நாமதேவர், "தேவரீரையே சரணமென் றடைந்து தேவரீருடைய தரிசனங் கண்டு மகிழும் எனக்கு இன்னுமோர் ஆசாரியனும் வேண்டுமோ?" என்று வினவினார். பகவான், "என்னை ஒருவன் பிரத்யக்ஷமாய்க் கண்டாலும் ஆசாரியனுடைய கிருபையின்றி ஆத்மஞானங் கிட்டாது. ஆகையினால், நீ மல்லிகார்ச்சுன தேவாலயத்திலிருக்கும் விசோபாகேசர் என்பவரை ஆசாரியராக அடையக்கடவாய்" என்றாக்ஞை செய்தார்.

நாமதேவர், பின்னர் மல்லிகார்ச்சுன தேவாலயம் போய், விசோபாகேசரிருக்கு மிடத்தை விசாரித்தார். விசோபாகேசர், ஸந்நிதியில் படுத்திருப்பதாகச் சிலர் கூறக் கேட்டு அங்குச்

சென்று பார்க்கையில், அவர் சிவலிங்கத்தின் பக்கமாய்க் காலை நீட்டிக்கொண்டு படுத்திருந்தார். அந்தக் காட்சியைக் கண்டதும் நாமதேவர் "இஃது என்ன விந்தை" என்று வருத்தமுற்று அவரை நோக்கி, "சுவாமி, சந்நிதியின் பக்கமாய்க் காலை நீட்டிக்கொண் டிருக்கிறீரே! இது தகுமா?" என்று கேட்டார்.

அவர் "தேகத்தின்மீது மறதி நேர்ந்தபடியால் தெரியாமல் காலை நீட்டிக்கொண் டிருக்கிறேன். கிழவனானபடியால் காலைப் பெயர்த்து வேறபக்கமாய் நீட்டிக்கொள்ளவும் சக்தியற்றவனா யிருக்கிறேன். நீர் தயவுசெய்து என் காலை வேறு பக்கத்தில் எடுத்து வையும்" என்றார். நாமதேவர், அவர் காலைத் தூக்கி வேறபக்கம் வைத்தார். வைத்தவுடன், அப்பக்கத்திலும் சிவலிங்க ஸந்நிதானம் விளங்கியது. பிறகு நாமதேவர் அவருடைய காலை வேறொரு பக்கமாய் எடுத்து வைத்தார். அந்தப் பக்கத்திலும் சிவ ஸந்நிதானம் விளங்கியது. அதுகண்ட நாமதேவர் ஆச்சரியமடைந்து, விசோபாகேசரைப் பணிந்து, "சுவாமி, தேவரீருடைய பாதசேவை செய்கையில் எங்கும் சிவமயமாய்ப் பிரகாசிக்கக் காண்கிறேன். மகிமை அறியாத என்னை மாணவனாக ஏற்றுக்கொண்டு ஆதரிக்கவேண்டும்" என, விசோபாகேசர், நாமதேவரை அருகிலழைத்து உட்கார வைத்துக்கொண்டு, அவருக்குச் சகல வேத சாஸ்திர ரகஸ்யங்களையும் உணர்த்தியருளினார். அப்பால் அவர் "அடியேன் ஞான தேவருடைய அடிமை!" என்று சொன்னார்.

இதைக் கேட்டதும் நாமதேவர் ஆச்சரியமும் சந்தோஷமுமடைந்து, அவரை வணங்கி அன்பாய் விடைகொண்டு, பண்டரிபுரம் சென்றார். பின்பொரு நாள் துவாதசி யன்று பகவான் நாய் ரூபம் எடுத்துக்கொண்டு வீடுகள் தோறும் சென்று, சமையலறையிற் புகுந்து, சமைத்து வைத்திருந்த உணவைத் தீண்டியது. எல்லோரும் அந்த நாயை அடித்துத் துரத்திவிட்டனர். அந்த நாய் நாமதேவர் வீட்டிற்கு வந்து, அங்கேயும் சமையலறையிற் புகுந்து தின்பண்டங்களையும் உணவையும் வாயினால்

தீண்டத் தொடங்கியது. அதைக்கண்ட நாமதேவர் எழுந்து, வீட்டிற் செய்து வைத்திருந்த பக்ஷணங்களை யெடுத்து அந்த நாய்க்குப் போட்டார். அதைக் கண்ட பாமர ஜனங்கள் நகைத்தார்கள். அப்போது பாண்டுரங்கர் நாமதேவர்முன் தோன்றி, "நீ என்னை எப்படி அறிந்துகொண்டாய்?" என்று கேட்டார். நாமதேவர், அவரை வணங்கி, "தேவரீருடைய குறிப்பை ஆசாரியர் அறிவித்தனர்" என்று கூறினர். பகவான், "நீ இப்போது வெந்த பாண்டமாய்விட்டாய். இனிப் பக்குவ ஜனங்களுடைய மத்தியில் நீ மேன்மை யடைவாய்" என்று கூறி மறைந்தருளினர். பின் நாமதேவரை அனைவரும் கொண்டாடினர்கள்.

நாமதேவர் ஏகாதசி விரதம் அநுஷ்டிப்பதுண்டு. அன்றைய தினம் அவர் ஜலபானங்கூடச் செய்வதில்லை. பகவான் அவருடைய அந்த வீர விரதத்தை உலகத்தாருக்குக் காட்ட எண்ணி, ஓர் ஏகாதசியன்று பிராமணனைப்போல் வேடம் பூண்டு நாமதேவருடைய வீட்டுக்குச் சென்று, "அன்னமளிக்கவேண்டும்; பசி காதடைத்துப்போகிறது" என்று கூறினர். நாமதேவர், "இன்று ஏகாதசி. வீட்டில் சமையல் செய்யவில்லை. பழ வர்க்கங்கள் தருகிறேன், புசிக்கலாம்" என்றார். பகவான், "எனக்கு அன்னந்தான் வேண்டும். இப்பொழுது நீர் அன்னமிடாவிடில் இங்கே என்னுயிர் போய்விடும். பிரமஹத்தி பாபம் உம்மைச் சூழும்" என்றார்.

நாமதேவர், "பாண்டுரங்கருடைய திருவடியை மறவாத மனமுடையவரிடம் அப்படிப்பட்ட பாபமெதுவும் அணுகாது. சகல ஆசைகளையும் விட்ட சற்குண சீலரிடம் திருடருடைய பயம் சேராது" என்றார். பகவான், "நீர் உயிர்களின் மீது கருணை வைக்காமல் ஆத்மஞானம் வகிப்பது வீணாகும். ஆதலின் பசியினால் வருந்தும் எனக்கு அன்னமளியும். இல்லாவிடில் என்னுயிர் போய்விடும்" என்றார். நாமதேவர் "அப்படியே எனக்கும் ஆகக் கடவது" என்று சொன்னர். சொல்லிய

வளவில் பிராமணராக வந்த பகவான் கண்கள் சுழலக் கீழே விழுந்து பிராணனை விட்டவர்போல் படுத்தார். பின் நாமதேவர் அந்தப் பிரேதத்தை எடுப்பித்துப் பீமாநதிக்குக் கொண்டு போய்ச் சுடுகாட்டில் வைத்துத் தாமும் அதனுடன் காஷ்டத்திற் படுத்துக்கொண்டு உறவினரை அழைத்துத் தீ மூட்டும்படி கூறினார். அவர்கள் அப்படியே தீ வைத்தனர். தீ மூண்டெரியத் தொடங்குகையில் பிராமணர் சிதையிலிருந்து சதுர்புஜதாரியாய் எழுந்து நின்று, "நாமதேவ, உன் விரத மகிமையை உலகத்தவர்க்கு உணர்த்தவே இவ்வாறு செய்தேன். முன் காலத்தில் ருக்மாங்கதன் முதலிய பக்தர்கள் ஆசாரியருடைய கடாட்சத்தினால் திடசித்த மடைந்திருந்தனர். அதுபோல் நீயும் அடைந்திருக்கிறாய்! உன்னுடைய வைராக்யம் கண்டு மகிழ்ந்தேன்!" என்று கூறி மறைந்தனர். அப்பால் நாமதேவரை யாவரும் புகழ்ந்து மகிழ்ந்தனர். நாமதேவர் பகவானுடைய பிரபாவத்தைப் பாடித் துதித்துக்கொண்டு வீட்டிற்குச் சென்றார்.

---

## 6. பாகவதன் சரித்திரம்

பண்டரிபுரத்தில் பாகவதன் என்னும் பெயர் கொண்ட ஒரு பிராமணனிருந்தான். அவன் ஸ்ரீருக்மிணி தேவியாரிடம் பக்தியுடையவனாயிருந்து தன்னுடைய தரித்திரத்தை நீக்கியருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். பிராட்டியார், அவன்பா லிரக்கங்கொண்டு, அவன் முன் பிரஸந்நமாய் வந்து, "அன்பனே, நான் உனக்கொரு ஸ்பரிசவேதி தருகிறேன். அதை நீ எந்த இரும்பின்மேல் தேய்த்தாலும் அந்த இரும்பு சொர்ணமாய் விடும். அப்படி யுண்டாகும் சொர்ணத்தை வைத்துக்கொண்டு சுகமாயிரு" என்று கூறி, ஒரு ஸ்பரிசவேதி கொடுத்துவிட்டு மறைந்தார்.

அப்பால் பிராமணன் அந்த ஸ்பரிசவேதியின் உதவியால் வேண்டுமளவு சொர்ணமடைந்து சுகமாயிருந்தான். அப்படி யிருக்கையில், அவனுடைய மனைவி கமலஜை என்பவள், நாம தேவரின் மனைவியாகிய இராஜாயியை ஆற்றங்கரையில் கண்டாள். அவள் நாமதேவரின் மனைவியைக் கண்டதும், "நீங்களேன் மகா தரித்திர தசையிலிருக்கிறீர்கள்? உங்களுடைய கணவர் நாமதேவர் பரம பக்தரல்லவா? தரித்திரத்தை நீக்கும்படி பகவானை யேன் பிரார்த்தனை செய்துகொள்ளக்கூடாது?" என்று கூறிப் பின், தன் நாயகன் ஸ்ரீருக்மிணி தேவியாரின் அனுக்ரகத்தால் ஸ்பரிசவேதி அடைந்து, அதனால் தரித்திரம் நீங்கிச் சுகமாயிருப்பதையும் தெரிவித்தாள்.

அப்பால் இராஜாயி, ஒரு நாள் கமலஜையின் வீட்டிற்குப் போய் அவளிடமிருந்து ஸ்பரிசவேதியைக் கொஞ்சநேரத்திற்கு இரவலாக வாங்கிக்கொண்டு வந்து, தன் வீட்டிலிருந்த இரும்புகளை யெல்லாம் சொர்ணமாக்கிக் கொண்டாள்; பின் வீட்டிற்கு வேண்டிய சாமான்களையும் உணவுப் பதார்த்தங்களையும் வாங்கி வீட்டில் நிரப்பிக்கொண்டு வெகு சந்தோஷமாயிருந்தாள். அதைக் கண்ட நாமதேவர், "இப்படிப்பட்ட ஸம்பத்து நமக்கு எப்படி வந்தது?" என்று கேட்டார். இராஜாயி, ஸம்பத்து வந்த விதத்தைத் தெரிவித்து, ஸ்பரிசவேதியையும் அவரிடம் காட்டினாள். அவர் அதைப் பலாத்காரமாக அவள் கையிலிருந்து பிடுங்கி, அதனை எடுத்துக்கொண்டு சந்திரபாகா நதிக்கு வேகமாய்ச் சென்று, ஆழமான இடத்தில் அதைப் போட்டுவிட்டு ஸ்நானம் செய்து கரையி லுட்கார்ந்து சுகமாகப் பகவானைத் தியானித்துக்கொண் டிருந்தார். இராஜாயி என்ன செய்வாள்? பெருந்துக்கமடைந்து தவித்துக்கொண்டிருந்தாள்.

இப்படி யிருக்கையில், இரண்டு நாள் பொறுத்துக் கமலஜை வந்து ஸ்பரிசவேதியைக் கேட்டாள். இராஜாயி நடந்ததை நடந்தபடி கூறி விசனித்தாள். பின் கமலஜை அதைத் தன் கணவனிடம் சொன்னாள். பாகவதன் கோபத்துடன் நாம

தேவரிடம் வந்து, "நீர் ஸ்ரீ ஹரிதாஸரா யிருந்தும் பிராமண னுடைய சொத்தை இப்படி அபகரிப்பது தகுமா?" என்று கேட்டான்.

நாமதேவர், "நான் உமது சொத்தை அபகரிக்கவில்லை. தபசியாயிருக்கும் உமக்கு இந்தப் பொருள் துக்கத்தைக் கொடுக்குமென் றெண்ணி ஆற்றிலெறிந்து விட்டேன். வேண்டு மானல் இப்போது எடுத்துத் தருகிறேன்" என்று கூறி, அந்தப் பிராமணனையும் பல ஜனங்களுடன் ஆற்றுக் கழைத்துச் சென்று, எல்லாரும் காண ஆற்றில் குதித்து முழுகி, ஒரு பிடி ஸ்பரிசவேதிகளோடு கரையேறினர். ஜனங்கள், அவை உண்மையில் ஸ்பரிசவேதிகள்தானு என்று அறிய இரும்பு களைக் கொண்டுவந்து பரீக்ஷித்து, அவை சொர்ணமானது கண்டு பரமாச்சரிய மடைந்தனர்.

பாகவதன், "ஸ்ரீ ஹரியினிடம் உண்மையான பக்தி யுடையவர்கள் தாங்கள் நினைத்த எந்த வஸ்துவையும் அடை தல் கூடும் என்பது கண்டேன்!" என்று கூறி மகிழ்ந்து அந்த நிமிஷமே நாமதேவருடைய சிஷ்யனுய்ப் பகவானுடைய பக்தியி லீடுபட்டு நின்று நித்திய சுகமடைந்தான்.

பின்னொருநாள் நாமதேவர், தமது அன்னையாரின் இருமல் நோயை நீக்குவதற்காகக் காட்டிற்குச் சென்று, ஒரு மூலி கையை அரிவாளால் அரிந்தார். அந்த மூலிகையிலிருந்து இரத்தம் பெருகியது. அதைக் கண்டதும் நாமதேவர், "ஓ மகாபாபம் செய்துவிட்டேனே! செடியும் உயிருள்ளதென்பதை அறியாமற் போனேனே!" என்று எண்ணிப் பெரு விசன முற்றுத் தம்முடைய கால் விரலி லொன்றை அறுத்து, அதி லிருந்த மாமிசத்தை எடுத்து அந்தச் செடியின் வெட்டுண்ட இடத்தில் வைத்தார். இரத்தம் அப்படியும் நிற்கவில்லை. பின் நாமதேவர் பகவானை ஸ்மரித்தார். ஸ்மரித்த வளவில் பகவான் அங்கே தோன்றி, அவரை நோக்கிப் புன்னகை புரிந்தார். அப் பால் அந்த க்ஷணமே செடியிலிருந்து இரத்தம் பெருகுவது

நின்றது. நாமதேவருடைய காயமும் ஆறியது. பகவானும் மறைந்தார். பின் நாமதேவர் வீட்டிற்கு வந்து பார்க்கையில் அவருடைய அன்னையாரும் இருமல்நோய் நீங்கிச் சுகமாயிருந்தார்.

---

## 7. பிதர் பிராமணன் சரித்திரம்

பிதர் என்னும் பட்டணத்தில் பிராமண னொருவன் பகவானிடம் பக்தியுடையவனா யிருந்தான். அவன் பணக்காரன். ஆயினும் கர்வமில்லாதவனாயும் அடியார்களிடம் அன்புடையவனாயு மிருந்தான். அவன் ஒருநாள் நாமதேவரைத் தன் வீட்டுக்கு வரவேண்டுமென்று அழைத்தான். நாமதேவர், "பண்டரிபுரம் வைகுண்டத்தை விடச் சிறந்தது. ஆகையினால், நான் இந்த ஊரைவிட்டு அங்கெல்லாம் வரமாட்டேன்" என்று சொல்லிவிட்டார். பிதர் பிராமணன் அதனால் வருத்தமடைந்து, பாண்டுரங்கருடைய ஸந்நிதியில் இருபது நாள் உவபாச மிருந்தான். பகவான் அவனிடம் இரக்கங்கொண்டு நாமதேவரின் முன் தோன்றி, "பிதர் பட்டணம் போய்வா. பிராமணன் இருபது நாட்களாய் உபவாசமிருந்து வருந்துகிறான்" என்று கட்டளையிட்டார்.

அப்பால் நாமதேவர் தம்முடன் பல பக்தர்களை அழைத்துக்கொண்டு பிதர் பிராமணனுடன் பிதர் பட்டணம் போனார். போகும்போது வழி நெடுகலும் வாத்திய கோஷங்களுடன் பஜனை செய்துகொண்டு சென்றார். பிதர் பட்டணத்தில் பிரவேசித்துச் செல்லுகையில், அந்நகர வேந்தனாகிய முகமதிய அரசன் "இவ்வளவு ஆடம்பரமாய் நமது பட்டணத்தில் பிரவேசித்தவன் யாவன்? அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் பிடித்துக்கொண்டு வாருங்கள்" என்று ஏவலாளருக்குக் கட்டளை யிட்டான்.

ஏவலாளர் நாமதேவ ரிருக்குமிடம் வந்து பார்த்து, நாமதேவர் பகவானை நோக்கிப் பஜனை செய்பவர் என்பது தெரிந்து கொண்டு, அரசனிடம் போய், "பிரபுவே, அவர் நாமதேவர் என்னும் பக்தர்; தமது கோஷ்டியுடன் பஜனை செய்து கொண்டு போகிறார். அவரைப் பிடிப்பதால் தீமையே உண்டாகும்" என்றனர். அரசன் கேட்கவில்லை. பின் ஏவலாளர் நாமதேவரையும் அவருடன் வந்தவரையும் அரசனிடம் கொண்டு போய் நிறுத்தினர்கள். அரசன் நாமதேவரைப் பார்த்து, "நீர் பக்தராயின், நான் ஒரு பசுவைக் கொன்று இங்கே போடுகிறேன். அதை எழுப்பும் பார்ப்போம்" என்று கூறி, ஒரு பசுவைக் கொன்று அவர்முன் போடும்படி ஏவலாளர்க்கு உத்தரவிட்டான். அவர்களும் அப்படியே செய்தார்கள்.

நாமதேவர் பெருந் துயரத்திலாழ்ந்து பகவானைத் தியானித்துத் துதித்தார். உடனே பசு உயிர்பெற்றெழுந்தது. பின் அந்த நிமிஷமே பட்டணமெங்கும் கணக்கற்ற ஸர்ப்பங்கள் உண்டாய் அநேகரைக் கடித்துக் கொன்றன. இதைக் கேட்ட அரசன், 'பகவானுடைய பக்தர்க்கு இடர் உண்டாக்கியதால் வந்த தீங்கு இது' என்று அறிந்து அவர் முன் போய் நின்று பணிந்து "பிழை பொறுத்தருள வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டான்.

நாமதேவர் அரசனிடம் கருணைகொண்டு பகவானைத் துதித்தார். துதித்தவளவில் ஸர்ப்பங்களெல்லாம் மறைந்தன. இறந்தவர்களெல்லாம் உயிர்பெற்றெழுந்தனர். அரசன் நாமதேவருக்கு வந்தன வழிபாடுகளுடன் அநேக உபசரணைகள் செய்தனுப்பினன். அப்பால் நாமதேவர், பிதர் பிராமணன் வீட்டுக்குப் போய் அவனுடைய உபசரணையையும் அடைந்து சுகமாகப் பண்டரிபுரம் போய்ச் சேர்ந்தார்.

---

# 8. தாதா சவுகார் சரித்திரம்

பண்டரிபுரத்தில் தாதா என்னும் பெயர்கொண்ட ஒரு சவுகார் இருந்தான். அவன் பரம லோபி. நாமதேவரின் தாயார் அவனிடம் ஆயிரம் வராகன் கடனாகக் கேட்டு வாங்கி, நாமதேவரிடம் கொடுத்து, "இந்தப் பொருளை வைத்துக்கொண்டு ஏதேனும் ஒரு வியாபாரம் செய்து பொருளைத் தேடு. 'திரை கடலோடியும் திரவியந்தேடு' என்பது கட்டளை யல்லவா? பொருளில்லாதவனுக்கு இந்த உலகத்தில் என்ன சுகமுண்டு? 'பணமில்லாதவன் பிணம்' என்று பழமொழியும் வழங்குவது கேட்டதில்லையா? எந்த வியாபாரத்தில் நல்ல லாபம் வருமோ அதனை ஆலோசித்துச் செய். இந்த ஆயிரம் வராகனையும் நாம் ஆறு மாதத்தில் சவுகாருக்குத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும்" என்று கூறினாள்.

நாமதேவர் அன்னையை வணங்கி, "இத்தனை நாள் மூலதன மில்லாமலிருந்தபடியால் நான் ஒரு வியாபாரத்திலும் இறங்கவில்லை. இனி நான் தக்க வியாபாரஞ்செய்து பொருள் தேடுகிறேன்" என்று கூறி யனுப்பிவிட்டுத் தனித்து ஓரிடத்திலிருந்துகொண்டு, என்ன வியாபாரம் செய்வதென்று ஆலோசனை செய்தார்.

"ஒரு புருஷன் உலகத்தில் நல்ல பிள்ளையை அடைய வேண்டுமென்று தவம் புரிகிறான். தவத்தின் பயனாக ஒரு குமாரனை அவன் அடைந்தால், அவன் காலனுக்கு இரையாய் விடுகிறான். அதனால், தந்தை துயரத்தில் ஆழ்ந்து தவிக்கிறான்; யாகங்களைச் செய்தால் தேவனாகிறான்; ஆனால், முடிவில் வானுலகத்திலிருந்து தலைகீழாய் விழுகிறான். ஆதலின், ஒரு கோரிக்கையு மில்லாமல் பாகவதர்களுக்கு அன்னமளித்தால் சர்வேச்வரன் திருப்தியடைகிறான். இதுதான் லாபகரமான வியாபாரம். ஆனால் இந்த வியாபாரத்தை இந்த ஊரிலிருந்து செய்வது கூடாது; செய்தால் அன்னைக்குக் கோபம் வரும்"

என்றெண்ணி "அம்மா, தூரதேசத்திற்குப் போய் வர்த்தகம் செய்கிறேன். விடை கொடுங்கள்" என்று வணங்கினர்.

தாயார், "அப்பா, சுகமாய்ப் போய்வா. புத்திசாலித்தன மாய் வியாபாரம் செய். முதலுக்கு மோசம் வராமற் பார்த்துக் கொள்" என்று கூறி அனுப்பினள்.

நாமதேவர் இவ்வாறு அன்னையினிடம் விடை பெற்றதும் சில பிராமணர்களுடன் பண்டரிபுரத்தைவிட்டுப் புறப்பட்டு இராக்ஷசபுவனம் என்னும் க்ஷேத்திரத்திற்குப் போய், விசால மான ஒரு பெரிய வீட்டிலிருந்துகொண்டு நாடோறும் கணக் கற்ற சாதுக்களுக்குப் பக்ஷண பாயஸத்துடன் திருப்திகர மாகப் போஜனம் செய்வித்து வந்தார்.

நாமதேவர், இவ்வாறு பணத்தைச் செலவழிப்பதைப் பார்த்த ஒருவன், பண்டரிபுரம் போய் அவருடைய தாயாரிடம் சொல்லி விட்டான். அந்த அம்மாள் அதைக் கேட்டதும் "அந்தோ! இதுவும் விதியோ! இந்தப் பிள்ளை பிறக்கவில்லை யென்று விசனப்பட்டது யார்?" என்றெண்ணிப் பெருந் துயர மடைந்தாள். அப்பால், தாதா சவுகாருக்கும் இச்செய்தி தெரிந்துவிட்டது. அவன் "ஐயோ! பணம் போய்விட்டதே!" என்று வயிற்றி லடித்துக்கொண்டு, இராக்ஷசபுவனம் போய் நாமதேவரைக் கண்டு, "அடா நாமா, என்ன காரியம் செய் தாய்! இது தகுமா? மோசமல்லவா இது? மோசக்காரனுகிய உனக்கு உன் தெய்வம் துணை செய்யுமா?" என்று சினந்து கொண்டான்.

அப்பொழுது சாதுக்கள் பலர் போஜனம் செய்யப் போகும் சமயமா யிருந்தபடியால், நாமதேவர், சாதுக்களைப் பார்த்து, "இந்தக் கைங்கரியத்திற்கு இவர்தான் கர்த்தராவர். இவர் கையினுல் உதகத்தைச் சங்கற்ப பூர்வமாக விடுவித்துப் போஜனம் செய்யுங்கள்; சமயத்துக்கு வந்து சேர்ந்தார்!" என் ருர். சாதுக்கள் "நல்லது" என்று கூறிச் சவுகார் கையில் உதகத்தை விடப் போயினர். அப்பொழுது சவுகார், 'சங்கல்ப

பூர்வமாக நீரைவிட்டால் சகல தனமும் தனக்குச் சொந்த மாகாமல் போய்விடும்,' என்று பயந்து, "நான் என் தந்தைக் குக் கூடச் சிராத்தம் செய்வதில்லை. அப்படிப்பட்ட நான் இதன் பொருட்டுப் பொருள் செலவழிக்க விரும்பேன்" என்று கூறி, விவாதம் செய்தான். சாதுக்கள், "போஜனசமயத்தில் வீண் விவாதம் செய்யாதேயும்; செய்தால் அழிவு நேரிடும்" என்று கூறினார்கள். சவுகார் உடனே எழுந்திருந்து, "இது நாம தேவர் செய்துவைக்கும் சந்தர்ப்பனை" என்று தன் கையினு லுதகத்தை விட்டான். பின் சாதுக்களனைவரும் சுகமாகப் புசித்தெழுந்தனர்.

அப்பால் நாமதேவர் சவுகாரைப் போஜனத்துக்கு அழைத்தார். சவுகார் போஜனஞ் செய்ய மறுத்து, "என் பொருளை இன்றுவரையில் கூடிய வட்டியுடன் கீழே எண்ணி வை. என் பணம் என் கையில் வந்து சேர்ந்தால்தான் நான் அன்னம் புசிப்பேன்; இல்லாவிட்டால் இங்கேயே பிராணனை விடுவேன்" என்றான்.

நாமதேவர் உடனே பகவானை நினைத்துத் துதித்து, "முகுந்தா, நான் லாபகரமான வியாபாரம் செய்தேன். அதனை அறியாமல் இவன் துயரப்படுகிறான். இச்சமயம் ஆப்தராகிய நீர் அடியேனைக் காப்பாற்றவேண்டும்" என்று பிரார்த்தித்தார். பகவான் நாமதேவர்முன் தோன்றி, "இந்தச் சவுகாரை நதியில் மூழ்கும்படி செய். இவன் ஜலத்திற்குள் ஆச்சரியமான மகிமை யைக் காண்பான்" என்று கூறி மறைந்தார். பிறகு நாமதேவர் சவுகாருக்குத் தக்க உபசாரம் சொல்லி, அவனை ஆற்றிற்கு அழைத்துப்போய் மூழ்கும்படி சொன்னார். சவுகார், "ஐயோ! என்னை ஜலத்தில் ஆழ்த்திக் கொல்லப் பார்க்கிறாயா? அடபாவி! பணங்கொடுத்து உதவிசெய்ததற்குப் பயனு இது?" என்றான். நாமதேவர், "நீர் இதில் ஸ்நானஞ் செய்யும். பிறகு உமக்குப் பணம் கிடைக்கும்" என்றார். சவுகார், "நான் முழுகும் சமயம் பார்த்து என்னை ஜலத்தில் அழுத்திவிடப் பார்க்கிறாய்

போலும்; உன் யுக்தி எனக்குத் தெரிகிறது'' என்று கூறி மயங்கினன். நாமதேவர் "நீர் சிறிதும் அஞ்சாமல் மூழ்கும்; தடை சொல்லாதேயும். உமக்குப் பகவானுடைய கிருபை யுண்டாகும்'' எனச் சவுகார் மூழ்கினன். மூழ்கியதும், பாதாளத்துக்குப் போனதுபோல் அவனுக்குத் தோன்றியது. அங்கே திவ்ய தேஜோமயமான வீடொன்று காணப்பட்டது. அந்த வீட்டைத் தேவதா சம்பந்தமான கற்பக விருக்ஷங்கள் சூழ்ந்திருந்தன. காமதேனுவும் சிந்தாமணியும் அவ்விட மிருந்தன.

இப்படிப் பிர்மானந்தமான காட்சியைக் கண்டு சவுகார் வியப்புற்றிருக்கையில் இரண்டு முகம்மதியர் அவன்முன் வந்து, "மகாராஜா மாளிகைக்குள் இருக்கிறார்; உம்மை அழைத்து வரச் சொன்னார்'' என்றழைத்தனர். சவுகார், "அந்தோ! இஃது என்ன விபரீதம்!'' என அஞ்சி மறுப்பதற்கு வழியில்லாமல் அவர்களுடன் அந்த மாளிகைக்குள் போனன். அங்கே அழகிய ஒரு சிங்காதனத்தில் முகம்மதிய வேந்தன் வீற்றிருக்கவும் அவனைச் சூழ அநேக முகம்மதியர் இருக்கவும் கண்டான். கண்டதும் பயந்து, அந்த இடத்திலிருந்து ஓடித் தப்பப் பார்த்தான். அப்போது நாமதேவர் அவர் அருகே நிற்கக் கண்டான். கண்டதும், சற்று மனந்தேர்ந்து "நாமதேவா!'' என, நாமதேவர், "தாதா சவுகார், வாரும்; விருந்துண்ணலாம் இங்கே'' என்றார். தாதா சவுகார், "இது முகம்மதிய கிரகம். இங்கே நாமெப்படிப் புசிப்பது?'' என, நாமதேவர், "இங்கே பிரபுவா யிருப்பவர் பண்டரிநாதர்; முகம்மதியரல்ல'' என்றழைத்தார்.

தாதா சவுகார், "நீ பயங்கரமான சேஷ்டைகளைச் செய்கிறாய். என்னை இங்கிருந்து அப்புறம் அழைத்துச்செல்; நான் உனக்குக் கொடுத்த பணத்தைக் கேட்கவில்லை'' என்றான். நாமதேவர், "அது இருக்கட்டும். சந்தேகமில்லாமல் போஜனம் செய்யும். நமது விவகாரத்தைப்பற்றிப் பிறகு பேசிக்கொள்வோம்'' என்று கூறினர். சவுகார் 'நான் இங்கே புசியேன்!

எனக்கு அமுதுபடி கொடு. நான் சமையல் செய்து சாப்பிடுகிறேன். நீ இந்த உபகாரம் செய்வாயானால் எனக்குத் தர வேண்டிய பணத்தை நான் கேட்பதில்லை; விட்டு விடுகிறேன்'' என்றான்.

இந்தச் சமயத்தில் தாதா சவுகாருக்கு நித்திரை மயக்கமுண்டாயிற்று. உடனே அவன் கண்களை மூடினான். மூடியவளவில் அவன் பண்டரிபுரத்தில் தன் வீட்டிலிருந்தான். அவன் பக்கத்தில் ஒரு மூட்டையு மிருந்தது. அதைக் கண்டு வியப்படைந்த சவுகார், அம்மூட்டையை அவிழ்த்துப் பார்த்தான். அதில் மதிப்பிடற்கரிய தங்க நாணயங்கள் பல இருந்தன. சவுகார் அதைக் கண்டு பெருவியப்படைந்து, நாமதேவர் பரம தெய்வபக்த சிரோமணியென்பதையும் அவருக்குப் பகவானுடைய திருவருட்செல்வம் பரிபூர்ணமாயிருக்கிற தென்பதையும் உணர்ந்தவனாய்த் தான் கண்ட அதிசயத்தையும் நாமதேவரின் மகிமையையும் எல்லாருக்கும் சொல்லிப் புகழத் தொடங்கினான்.

அப்பால் சில நாட்களுக் கெல்லாம் ஞானதேவர் சமாதியடைந்தார். அதனை அறிந்த நாமதேவர் பண்டரிபுரம் வந்து பகவானைத் துதித்து, "நாங்களிருவரும் இணைபிரியாதிருந்தோம். அப்படியிருந்த எங்களைப் பிரித்துவிட்டீரே! அடியேனுக்கு ஞானதேவருடைய தரிசனம் காட்டவேண்டும்'' என்று பிரார்த்தித்தார். பகவான் உடனே, கருட பகவானை அனுப்பி வைகுண்டத்திலிருந்து ஞானதேவரை வரவழைத்து, நாமதேவருக்கு அவருடைய தரிசனம் செய்வித்தார். நாமதேவரும் ஞானதேவரும் ஏகாந்த ஸ்தலத்திலிருந்து வெகுநேரம் சம்பாஷணை செய்துகொண் டிருந்தார்கள். பிறகு ஞானதேவர் மறைந்தார்.

---

## 9. ஞானதேவர் சரித்திரம்

கோதாவரி தீரத்தில் ஆபேகாம் என்னும் கிராமத்தில் கோவிந்தபட்டர் என்னும் பெயர்கொண்ட ஒரு பக்தரிருந்தார். அவருக்கு விட்டலபந்து என்று ஒரு புதல்வ னிருந்தான். அவன் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து தெய்வ பக்தியி லீடுபட்டுச் சிறுவயதிலேயே ஸ்தலயாத்திரை சென்றான். நெடு கலும் போய் அநேக ஸ்தலங்களைத் தரிசித்தபின், அவன் அளகாவதி என்கிற க்ஷேத்திரத்திற்குப் போய், அங்கே பரம பக்த சிரோமணியாய் விளங்கிய சிந்தோபந்து என்னும் அந்த ணான் வீட்டில் தங்கினான். சிந்தோபந்து விட்டலபந்துவுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்து சகல சௌகரியங் களையும் ஏற்படுத்திக் கொடுத்தான்.

அன்றிரவில் பகவான் சிந்தோபந்துவின் கனவிலே தோன்றி, அவனுடைய பெண்ணை விட்டலபந்துவுக்கு விவாகம் செய்து கொடுக்கும்படி சொல்லிவிட்டு மறைந்தார். மறுநாள் காலையில் சிந்தோபந்து விட்டலபந்துவிடம் விஷயத்தைக் கூறித் தன் புதல்வியை மணஞ் செய்துகொள்ள வேண்டினான். விட்டலபந்து, “அந்தப் பண்டரிநாதர் என்னுடைய கனவில் வந்து ‘விவாகம் செய்துகொள்’ என்று கட்டளைசெய் தருளட் டும்; அப்பால் நான் அப்படியே செய்கிறேன்” என்றான். அன் றிரவே விட்டலபந்துவின் கனவில் பகவான் தோன்றி, “அன்ப, நீ சிந்தோபந்துவின் குமாரத்தியை விவாகம் செய்துகொள்” என்று கட்டளையிட்டு மறைந்தார். பின், விட்டலபந்து சிந்தோபந்துவின் புதல்வியை ஒரு நாள் நல்ல முகூர்த்தத்தில் விவாகம் செய்துகொண்டு, தன் மனைவியுடன் தன் ஊருக்குப் போய்த் தாய் தந்தையர்க்கு நடந்த வரலாற்றைச் சொல்லி, அவர்களுக்குக் கீழ்ப்படிந்திருந்து இல்லறம் நடத்திவந்தான்.

அப்படி யிருக்கையில் சில வருஷங்களுக் கெல்லாம் விட் டல பந்துவின் தாய் தந்தையர் இறந்தனர். பின் விட்டலபந்து

ஒரு நாள் தன் மனைவியை அழைத்து "நான் ஸந்யாஸியாய்ப் போக விரும்புகிறேன். உன் இஷ்டம் எப்படி?" என்று கேட்டான். அந்த மாது அதற்கு விடை கொடாமலிருந்து விட்டாள். அன்று அவ்வூருக்கு வந்திருந்த விட்டலபந்து வின் மாமன், "ஸந்ததி யில்லாதிருக்க ஸந்யாஸங்கொள்வது சரியல்ல" என்று கூறித் தடுத்துவிட்டான். சில நாட் கழிந்த பின் ஒருநாள் விட்டலபந்து, தன் மனைவி வீட்டு வேலையில் கவனமாயிருக்கும்போது, அவளை அழைத்து, "நான் காசிக் குப் போய்வருகிறேன்" என்றான். அந்த அம்மாள், பராமுகமா யிருந்தபடியால், "நல்லது; செய்யுங்கள்" என்று கூறி விட்டாள்.

விட்டலபந்து, இதுதான் சமயமென்று சந்தோஷ மடைந்து வீட்டைவிட்டு உடனே புறப்பட்டுக் காசிக்குப்போய் அங்கே தீர்த்தபாத ரென்னும் ஆசாரியரை அடுத்து, அவரிடம் ஸந்யாஸம் வாங்கிக்கொண்டான். விட்டலபந்து இப்படி ஸந்யாஸம் ஏற்றுக்கொண்டதை அவன் மனைவி கேட்டுப் பெருந்துயர மடைந்தாள். அவள் தந்தை அவளுக்குத் தக்க படி சமாதானங் கூறித் தேற்றி, "நீ அரசப் பிரதக்ஷிணம் செய்துவா! உனக்கு நற்கதி ஏற்படும்" என்று கூறினார். அம்மாது தந்தையின் கட்டளைப்படி அரசப் பிரதக்ஷிணம் செய்து வரலானாள்.

இப்படி யிருக்கையில், காசிபட்டணத்திலிருந்து, சேது தரிசனம் செய்வதற்காகப் புறப்பட்டுவந்த தீர்த்தபாத ஸ்வாமி கள், அளகாவதி நகரத்திற்குள் பிரவேசித்து, விட்டலபந்துவின் மனைவி பிரதக்ஷிணம் செய்துவரும் அரச விருக்ஷத்தின் அடி யில் உட்கார்ந்தார். விட்டலபந்துவின் மனைவி பெரியவரைக் கண்டதும் அவர் அருகே வந்து பணிந்தாள். தீர்த்தபாதர், "புத்ரவதீ பவ! புண்யவதீ பவ!" என்று ஆசீர்வாதம் செய்தார்.

அதைக்கேட்டதும் விட்டலபந்துவின் மனைவி நகைத்து, "என் கணவர் காசிக்குப்போய் ஸந்யாஸியாய் விட்டார். இனி

நான் எப்படிப் புத்திரனை அடைவது? ஸ்வாமிகளுடைய வாக்குப் பொய்யாகாதே! இஃது எப்படி?'' என்று வினவினாள். தீர்த்தபாதர் "உன் பர்த்தாவுக்கு ஸந்யாஸம் கொடுத்தவன் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டும். இளமை வயதுடைய மனைவி யிருக்கையில் ஒருவன் ஸந்யாஸம் வாங்கிக் கொள்ள விரும்புவதும் அவனுக்கு ஸந்யாஸம் கொடுப்பதும் தவறாகும். இருக்கட்டும். உன் நாயகன் எப்படியிருப்பான்? சில அடையாளங்கள் சொல்லு'' என்றார்.

அந்த மாது தன் கணவனுடைய அடையாளங்களில் சிலவற்றைத் தெரிவித்தாள். உடனே ஸ்வாமிகள், "உன் கணவனுக்கு ஸந்யாசங் கொடுத்தவன் நான்தான். இருக்கட்டும். வீட்டிற்குப்போய் உன் தந்தையை அழைத்து வா'' என்று கூற, அம்மாது உடனே வீட்டிற்குச் சென்று, தன் தந்தையை அழைத்து வந்தாள். சித்தோபந்து பெரியவரைக் கண்டதும் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, கைகூப்பியவண்ணம் நின்றான். தீர்த்தபாதர், "உம்முடைய மருமகனுக்கு ஸந்யாஸம் கொடுத்தவன் நான் தான். அது தவறு; அறியாமற் செய்த காரியம். ஆதலின், நான் இப்போதே காசிக்குப் போகவேண்டும். நீரும் உம்முடைய புதல்வியுடன் வாரும்'' என்று கூறி, அவர்களை அழைத்துக்கொண்டு காசிக்குப்போய் விட்டல பந்துவைக் கண்டு, அவனுக்கு அவன் மனைவியைக் காட்டி, "இளம் வயதினளான மனைவி யிருக்கையில் நீயேன் என்னிடம் பொய் சொல்லி ஸந்யாஸம் பெற்றுக்கொண்டாய்? இது தகுமா?'' என்று கேட்டார்.

விட்டலபந்து, ஆசாரியரைப் பணிந்து, "பிழை பொறுத்தருளவேண்டும் ஸந்யாஸத்தின்மேல் கொண்ட ஆவலால் செய்த பிழை இது!'' என்று கூறி வணங்கினான். தீர்த்தபாதர் "நீ என்னிடம் பொய்யுரைத்து என்னை நரகத்திற் காளாக்கினாய்! போகட்டும். உன்னை மன்னித்தேன். உன் மனைவியை

யேற்றுக்கொள். இதனால் நீ மேன்மையே யடைவாய்" என்று கூறி யனுப்பினர்.

விட்டலபந்து ஆசாரியர் உத்தரவின்படி தன் மனைவியை ஏற்றுக்கொண்டு அளகாவதிக்கு வந்து சேர்ந்தான். அங்கே பிராமணர்கள், "ஸந்யாஸம் பெற்றபின் கிருகஸ்த தர்மத்தை மேற்கொள்வது சாஸ்திர விரோதம்" என்று கூறி, விட்டல பந்துவைப் பஹிஷ்காரம் செய்துவிட்டார்கள். பின் விட்டல பந்து அந்த ஊருக்குள் வசிக்காமல் ஒரு காட்டிலே போய் வசித்துக்கொண் டிருந்தார். சில வருஷங்களுக் கெல்லாம் அவருக்கு மூன்று பிள்ளைகளும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தனர். மூன்று பிள்ளைகளும் பிர்மா, விஷ்ணு, ருத்ரர்க ளின் அம்சமாக விளங்கினர். அப்பெண் குழந்தை, யோக மாயையின் அம்சமாக விளங்கியது. ருத்ராம்சமான பிள்ளைக்கு நிவிருத்தி என்றும் விஷ்ணு அம்சமாகப் பிறந்தவர்க்கு ஞான தேவரென்றும் பிரமதேவரின் அம்சமாகப் பிறந்த பிள்ளைக்குச் சோபானர் என்றும் யோகமாயையின் அம்சமாகப் பிறந்த குழந்தைக்கு முக்தாபாய் என்றும் பெயரிட்டனர்.

பின் பிராமணர்கள் அவர்களுக்கு உபநயனம் செய்விக்க மறுத்தனர்; ஸந்யாஸின் பிள்ளைகளுக்குக் கர்ம நிபந்தனைகள் கிடையாவென்று சொல்லிவிட்டனர். பின் சில நாட்களுக் கெல்லாம் விட்டலபந்துவும் அவர் மனைவியும் காலமாய்விட்ட னர். அப்பால் அந்த மூன்று பிள்ளைகளும் ஸந்யாஸியின் பிள்ளைக்கு ஜாதிகோத்திரங்களுடன் செய்யத்தக்க கருமங்கள் இல்லை யென்பதைத் தெரிந்துகொண்டு ஸ்ரீஹரிநாம ஸங்கீர்த்த னம் செய்வதிலேயே சித்தஞ் செலுத்துவாராயினர்.

அப்படி யிருக்கையில், ஒரு பிராமணன் ஞானதேவரை நோக்கி, "ஞான சாஸ்திரங்க ளொன்றையும் அறியாத உனக்கு ஞானதேவன் என்று பெயரிட்டவன் யாவன்? ஓர் எருமைக் கடாவுக்கு ஞானதேவன் என்று பெயரிட்டால் பொருந்துமா? அதுபோலிருக்கிறது உனக்குப் பெயர்வைத்திருப்பது" என்று

அவமதிப்பாய்ப் பேசினன். ஞானதேவர், "நீர் சொன்ன எருமைக்கடாவுக்கும் எனக்கும் பேதமில்லை. சைதன்யம் எவ்விடத்திலும் ஓரே தன்மையி லிருக்கிறதன்றோ?" என, பிராமணன், "இது வெளி வார்த்தை!" என்று கூறி அந்த எருமைக்கடாவின் முதுகில் தடியினல் ஓர் அடி அடித்தான். அந்த அடி ஞானதேவரின்மீதும் பட்டது. அது கண்டு பிராமணன் வியப்புற்றான். ஆயினும், அவன் ஞானதேவரைப் பார்த்து, "உனக்கும் அதற்கும் பேதமில்லை யானல் அதற்கு நீ வேதம் சொல்லிவை பார்ப்போம்" என்றான். ஞானதேவர், தமது கரத்தை அந்த எருமைக்கடாவின் தலையின்மேல் வைத்து, "ருக்வேதத்தைச் சொல்" என்றார். அந்தக் கடா உடனே ருக்வேதத்தைச் சொல்லியது. அப்பால் ஞான தேவரை எல்லோரும் தெய்வாம்ச முடையவ ரென்று புகழ்ந்து வணங்கி மரியாதை செய்து மகிழ்ந்தார்கள். ஞான தேவரும் அவர் சகோதர ரிருவரும் இப்படிப்பட்ட அற்புதங் கள் பல செய்து ஈச்வரனுடைய திருவருட் பிரபாவத்தை விளக்கிக்கொண்டு உலக முழுவதும் சஞ்சரித்தார்கள்.

---

## 10. விசோபாசாடி சரித்திரம்

**ப**ண்டரிபுரத்தில் விசோபாசாடி என்றொரு பிராமண னிருந்தான். அவன் எப்போதும் ஞானதேவர்க்கும் அவ ருடைய சகோதரர்களுக்கும் சகோதரி முக்தாபாய்க்கும் விரோதமாய் நடந்துவந்தான்.

தீபாவளிப் பண்டிகையன்று நிவிருத்திநாதர் பகவானுக் குப் பிட்டுச்செய்து நிவேதனம் செய்ய விரும்பித் தன் சகோதரி முக்தாபாயை அழைத்துப் பிட்டுச் செய்யும்படி கூறினர். முக்தா பாய் அதற்காகப் புதுச்சட்டி வாங்கிவரக் குயவன் வீட்டிற்குச் சென்றாள். வழியில் அந்த மாதை விசோபாசாடி கண்டான். கண்டவன் சும்மா போகாமல் அந்த மாதை அவமதிப்பாய்ப்

பேசிப் பின் குயவன் வீட்டிற்குப் போய், "ஸந்யாஸியின் பெண்ணாகிய இவளுக்கு நீ சட்டி கொடுக்கக் கூடாது. கொடுத்தால், எனக்குக் கொடுக்கவேண்டிய கடனைக் கொடுக்கும்படி உன்னை நிர்ப்பந்தப் படுத்துவேன்'' என்று கூறிவிட்டான்.

முக்தாபாய் சட்டி வாங்காமல் அழுதுகொண்டே வீட்டுக்குத் திரும்பி வந்து, ஞானதேவரிடம் நடந்ததைச் சொன்னாள். ஞானதேவர் உடனே தமக்குள்ளிருக்கும் யோகாக்கினியைக் கிளப்பிக் கண்களிலும் மூக்கிலும் ஜ்வாலை வரும்படி செய்து, குப்புறப் படுத்துக்கொண்டு, தம்முடைய முதுகில் பிட்டுச் சுடும்படி முக்தாபாய்க்குச் சொன்னார். அந்த அம்மாள் அப்படியே செய்தாள். ஞானதேவர் உடனே யோகாக்கினியைத் தணித்துக்கொண்டார். பின் நிவிருத்திநாதர் அந்தப் பிட்டைப் பகவானுக்கு நிவேதனம் செய்து மகிழ்ந்தார்.

ஞானதேவரின் இந்த அற்புத மகிமை விசோபாசாடிக்குத் தெரிந்தது. அவன் உடனே ஓடிவந்து ஞானதேவருடைய திருவடியில் சரணாகதியாக விழுந்து, தப்பிதத்தை மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டு அவருடைய திருவருள் பெற்று அவர்க்கு மாணவனானான்.

ஞானதேவரின் இத்தகைய மகிமையைக் கேட்ட சாங்கதேவர் என்னும் யோகி, அவரிடம் ஞானோபதேசம் பெற விரும்பி, ஒரு புலியின் மேல் ஏறிக்கொண்டு வந்தார். அவர் வருகையை முன்பே அறிந்த ஞானதேவர், ஒரு குட்டிச்சுவரின் மேல் ஏறி அமர்ந்திருந்தார். சாங்கதேவர் தாம் வந்திருப்பதை ஒரு சிஷ்யன் மூலமாய் ஞானதேவருக்கு அறிவித்தார். ஞானதேவர், உடனே குட்டிச் சுவரை நோக்கி, "நீ யோகியை எதிர்கொண்டு வரவேற்பதற்காகச் செல்'' என்று கட்டளையிட்டார்.

குட்டிச்சுவர் உடனே நகர்ந்து சென்று சாங்கதேவர் முன் போய் நின்றது. அந்த அதிசயத்தைக் கண்டதும் சாங்கதேவர் 'அசேதனமான சுவரை நடக்கும்படி செய்த இவர்முன் நாம்

சேதனமான புலியின்மீது தோன்றுவது சரியல்ல' என்று இறங்கி, அவரை வணங்கினர். ஞானதேவர், சுவரைவிட்டிறங்கி அவரை வரவேற்றுத் தமது வீட்டிற்குள் அழைத்துப் போய் அவர்க்குத் தாரக மந்திர உபதேசஞ் செய்து அனுப்பினர். பிறகு சாங்க்தேவர் ஆத்மலக்ஷணத்தில் நின்று பகவதநுபவத்தைப் பெற்று, பிரபத்தி நிஷ்டையில் நின்று விச்ராந்தியடைந்தார்.

---

## 11. கூர்மதாஸர் சரித்திரம்

பைடன் என்னும் பட்டணத்தில் ஒரு பிராமணனிருந்தான். அவனுக்குக் கை கால்கள் முதலிய அவயவங்களில்லாத ஒரு புதல்வர் பிறந்தார். அந்தப் பிள்ளைக்கு அவன் கூர்மதாஸர் என்று பெயரிட்டு வளர்த்து வந்தான். அவருக்கு வயது வளர வளரப் பகவானிடத்தில் பக்தியும் வளர்ந்து வந்தது.

இப்படிப் பக்தியிலும் வயதிலும் பெரியவரான கூர்மதாஸர் பண்டரிபுரம்போய்ப் பகவானுடைய தரிசனஞ் செய்ய விரும்பி வீட்டை விட்டுப் புறப்பட்டு நகர்ந்துகொண்டே ஒரு குரோசதூரம் போனர். சூரியன் அஸ்தமித்து விட்டபடியால், கூர்மதாஸர் அங்கிருந்த ஓர் ஆஞ்சநேயருடைய கோவிலையடைந்து, அதில் தங்கிப் பகவானைத் தியானித்துக்கொண்டிருந்தார். அங்கே பகவான் பிராமண வர்த்தகராக அவர் முன் தோன்றி, ஊரும் பேரும் விசாரித்து, "நீர் எங்கே போகிறீர்?" என்று கேட்டார். கூர்மதாஸர், "நான் பண்டரிபுரம் போகிறேன்" என்றார். பகவான், "நானும் அங்கேதான் போகிறேன். நான் பண்டரிபுரியில் கடை வைத்துள்ள ஒரு வர்த்தகன். என் பெயர் கிஸ்திவிடோபா. வழிப்போக்கர்களில் ஏழையாயிருப்பவர்களைக் கண்டால் அவர்களுக்குப் பசி தாகங்களைப் போக்கி என்னாலியன்ற உதவி செய்துவருவதை

நான் வழக்கமாகக் கொண்டுள்ளேன்'' என்று பரிவுடன் பேசி, உடனே சமையல் செய்து, அவருக்குப் போட்டுத் தாமும் உண்டு மறுநாள் அவருக்கு மார்க்கத்தைக் காட்டிவிட்டு மறைந் தார்.

பின் பகவான், கூர்மதாஸர் வழியில் தங்குமிடங்களி லெல்லாம் வேண்டிய உதவிகளைச் செய்துகொண் டிருந்தார். அப்பால் ஒருநாள் கூர்மதாஸர் லகுன் என்னும் கிராமத்திற்குப் போய்த் தங்கினர். பண்டரிபுரம் அந்த ஊரிலிருந்து ஏழு குரோச தூரத்தி லிருக்கிறது. அந்த ஊரில் ஒரு மடம் உண்டு. அங்கே அநேக யாத்திரிகர் வந்து தங்குவது வழக்கம். அப் படியே அன்றையதினமும் அநேக யாத்திரிகர் வந்து தங்கி யிருந்தனர். அவர்கள் கூர்மதாஸரிடம் சம்பாஷித்தனர். அப் பொழுது அவர்கள் "நாளையதினம் கார்த்திகை சுத்த ஏகாதசி. இவ்வேகாதசியில் பாண்டுரங்கருடைய சேவை செய்பவர் நற்கதி யடைவார்கள்'' என்று கூறினர்கள். கூர்மதாஸர் அந்த வார்த்தை கேட்டதுமுதல் "ஐயோ! நான் எப்படி நாளைக்குள் பகவானைத் தரிசிப்பேன்!'' என்றெண்ணி வருத்தப்பட்டுக் கொண்டு பகவானைத் தியானித்த வண்ணமிருந்தார்.

---

## 12. சாவதாமாலி என்னும் தோட்டக்காரன் சரித்திரம்

கூர்மதாஸர் லகுன் என்னும் கிராமத்திலிருந்து தம் முடைய தரிசனம் செய்ய விரும்பி வருந்திப் பிரார்த்திப்பதை யறிந்த பகவான், ஞானதேவருடனும் நாமதேவருடனும் பண் டரிபுரத்திலிருந்து புறப்பட்டு வந்தார். வழியில் ஒரு தோட்ட மிருந்தது. அதன் காவலாளி சாவதாமாலி என்பவன். அவன் பகவானிடம் பக்திகொண்டு சதாகாலமும் தன்னை மறந்து அவரைத் தியானித்துவரும் உத்தம பக்த சிரோமணியாக விளங்கினன். பகவான் அவனுக்குக் காட்சிதரத் திருவுளங்

கொண்டு, நாமதேவரையும் ஞானதேவரையும் பார்த்து, "நான் இந்தத் தோட்டத்திற்குள்ளே போய்வருகிறேன். நீங்கள் இங்கேயே இருங்கள்" என்று கூறிவிட்டுத் தாம் மாத்திரம் தோட்டத்திற்குள் போய்ச் சாவதாமாலிக்குத் தரிசனம் தந்தார். சாவதாமாலி பகவானைக் கண்டதும் பரமானந்த பரிதனாய் அவரை வணங்கி மலர்கொண்டு அவர் திருவடியை அர்ச்சிக்கத் தொடங்கினான். பகவான், "நான் பூஜையை அடைகிறதற்கு இது சமயமல்ல. தோட்டத்திற்கு வெளியே என்னைத் தொடர்ந்து வந்த இரண்டு திருடர்கள் காத்துக்கொண் டிருக்கிறார்கள். என்னை இப்போது உசிதமான ஸ்தானத்தில் ஒளித்துவை" என்றார்.

இதைக் கேட்டதும் சாவதாமாலி ஆச்சரியமடைந்து, "சுவாமி, தேவரீர் சர்வ வியாபியா யிருக்க உம்மை நான் எங்கே ஒளித்து வைப்பது?" என, பகவான், "இப்போது பிர்மஞானம் பயன்படாது. என்னை விரைவில் எங்கே யாவது ஒளித்துவை" என்றார். சாவதாமாலி, தன் கைக் கத்தியினால் தன் வயிற்றைக் கீறிக் காட்டி "என் வயிற்றில் ஒளிந்துகொள்ளுங்கள்" என்றான். பகவான் சந்தோஷத்துடன் அந்த பக்தனுடைய வயிற்றிலே போய் ஒளிந்துகொண்டார். சாவதாமாலி பெருவியப்புடனும் பரம பக்தியுடனும் தன் வயிற்றிலிருக்கும் பகவானைத் தியானித்தவண்ணம் ஓரிடத்தில் உட்கார்ந்துவிட்டான்.

பகவான் போய் வெகு நேரமாயும் வராமலிருக்கவே, ஞானதேவரும் நாமதேவரும் தோட்டத்திற்குள் பிரவேசித்து, நெடுகலும் தேடிப் பின் சாவதாமாலியைக் கண்டார்கள். சாவதாமாலியின் தேககாந்தி இவர்களுடைய மனதைக் கவர்ந்தது. நாமதேவர் அது கண்டு, 'இவன் வயிற்றிற்குள் பகவான் இருக்கிறார்' என்று தெரிந்துகொண்டார். உடனே பகவானை வணங்கித் துதித்துத் தம்மை மறந்து நின்றார். ஞானதேவரும் அவ்வாறே நின்றார். பகவான், 'விளையாட்டுப் போதும்'

என்று கருதிச் சாவதாமாலியின் வயிற்றிலிருந்து வெளியே வந்து, அவர்களுக்குக் காட்சி தந்து அவர்களை மகிழ்வித்தார்.

அப்பால், சாவதாமாலியினிடம் விடைகொண்டு, மூவரும் கூர்மதாஸரிடம் சென்றார்கள். வழி நெடுகலும் பகவான் அவர்களுக்குச் சாவதாமாலியின் பக்தியை விளக்கிக்கொண்டே சென்றார்; லகுன் என்னும் கிராமம் சென்றதும், தம்மை மறந்து தியான நிலையிலிருக்கும் கூர்மதாஸரைத் தமது கரங்களால் தழுவித் தரிசனம் தந்து மகிழ்வித்து, "நீ வேண்டும் வரமென்ன?" என்று கேட்க, கூர்மதாஸர், "தேவரீர் எப்போதும் என்னிடமே இருக்கத் திருவுளம் பற்றவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். பகவான், "அப்படியே செய்வேன்!" என்று வரந்தந்து லகுன் என்னும் அந்தக் கிராமத்தில் தமது சொரூபத்தை நிறுத்தினர். அன்று முதல் இன்றைக்கும் அந்தக் கிராமத்தில் ஆஷாட மாசத்திலும் கார்த்திகை மாசத்திலும் உற்சவம் நடந்தேறி வருகிறது.

---

## 13. ராகா குயவர் சரித்திரம்

பண்டரிபுரத்தில் ராகா என்னும் பெயர் கொண்ட குயவர் ஒருவர் இருந்தார். அவருக்குப் பங்கா என்னும் பெயர் கொண்ட மனைவியும், வங்கா என்னும் பெயர் கொண்ட புதல்வியும் இருந்தனர். ராகா என்பவர் ஜாதியில் குயவராயிருந்த போதிலும் ஸ்ரீஹரியினிடம் சிறந்த பக்தியுடையவர். அவர் நாடோறும் பகவானைத் தியானஞ் செய்துகொண்டே சட்டி பானைகளைச் செய்து அடுக்குவார். அப்படி அடுக்கி வைத்திருந்த சட்டி பானைகளுள் ஒரு பானையில் ஒரு பூனை குட்டி போட்டிருந்தது. ராகா அந்தப் பானைகளை வழக்கம் போல் சூளையில் வைத்து அடுக்கி நெருப்பு வைத்து விட்டார். சூளை நன்றாய் எரியுந் தருணத்தில், தாய்ப்பூனை குட்டியைத் தேடித் தேடிப் பார்த்துக் கத்திக் கத்தி இங்குமங்கு மோடி

அலேந்தது. அதுகண்ட குயவர், தமது மனைவியை அழைத்து, "சூளேபோட்டு அடுக்கியிருந்த பானைகளுள் ஒன்றில் பூனை குட்டி போட்டிருந்ததல்லவா? அது எனக்கு ஞாபகத்தி லில்லை. ஆகையினால் நான் வழக்கம்போல் பானைகளைச் சூளே யில் வைத்துச் சுட்டுவிட்டேன். என்ன செய்வது? எப்படி ஒழிப்பதிந்தப் பாபத்தை?" என்று கூறி வருந்திக் கண் கலங்கினார்; "ஸ்ரீஹரி, ஸ்ரீஹரி!" என்று பெருமூச் செறிந்தார். மனைவியும் அது கேட்டு வருந்திக் கண்ணீர் விட்டாள்.

இருவரும் அன்னபானுதிகளின்றி மூன்று நாள் பகவானைத் தியானித்த வண்ணமிருந்தனர். இதற்குள் சூளையில் தீ அவிந் தது. பின் அவர்களிருவரும் சட்டிபானைகளை எடுத்து வேறி டத்தில் அடுக்கினார்கள். அப்பொழுது முன் எந்தப் பானையில் பூனைக்குட்டிக ளிருந்தனவோ அந்தப் பானையில் அவை சுகமா யிருக்கக் கண்டார்கள். ஆகா! அவர்கள் அடைந்த ஆநந்தத்தை என்னவென்று சொல்வது? ராகா தம்முடைய மனைவியை நோக்கி, "நாம் ஸ்ரீஹரியின் பரம கருணையை யடைந்தோம். பிரார்த்தனை கைகூடியது! இனி நாம் குடும்பத்தை விட்டு விட வேண்டும்" என்று சொல்லி உடனே எல்லாப் பற்றையும் விட்டுக் கோவண மாத்திரம் தரித்துத் தமது மனைவியுடனும் மகளுடனும் காட்டிற்குச் சென்றார்.

காட்டில் மூவரும் விறகுகளைப் பொறுக்கி, நாட்டில் விற்று அந்த வருவாய்கொண்டு ஜீவனஞ்செய்து வந்தனர். வர வர, ராகா குயவருக்கு விரக்தியும் பக்தியும் மேலிட்டபடியால் ஒன்றிலும் சிந்தையற்றவரா யிருந்தார். அவர் சில சமயம் எச்சிலேகளைக் கூடக் கோவணமாகத் தரித்துக்கொண் டமர்ந் தார். அவரை அநேகர் பயித்தியம் என்று கூறிப் பரிகசிக்க வும் தொடங்கினர்.

இப்படியிருக்கும் அவர்க்குப் பகவான் அநுக்கிரகிக்கத் திருவுளங்கொண்டு, ஒரு நாள் நாமதேவருடனும் ஸ்ரீ ருக்மிணி

பிராட்டியுடனும் வனஞ்சென்று, மறைவிலிருந்துகொண்டு, ஸ்ரீ ருக்மிணியைப் பார்த்து, "இவர்கள் இப்போது இவ்வழியே வருவார்கள். இங்கே உன்னுடைய கைக் கங்கணத்தைக் கழற்றிப் போட்டுவை. இவர்கள் என்ன செய்கிறார்களென்று பார்ப்போம்" என்று கூறினர். ஸ்ரீ ருக்மிணி அப்படியே தன் கைக் கங்கணத்தைக் கழற்றி வழியில் போட்டுவைத்தார்.

பின் ராகா குயவர் தமது மனைவியுடனும் மகளுடனும் அவ்வழியே வந்து, அந்தக் கங்கணத்தைக் கண்டனர். கண்டதும் அதைக் காத்தாற்கூட எடாமல், "மகத்தான விக்கினங்களைக் கொடுக்கும் இந்தப் பொருளைக் கண்ணாலும் பார்ப்பது கூடாது" என்று அப்பால் விலகிச் சென்றனர்.

இவ்வாறு நிராசையாயிருக்கும் அவர்களுக்குப் பகவான் அக்கணமே காட்சி தந்து, அவர்களை ஆசீர்வதித்துத் திரும்பினர். இந்த அதிசயங் கண்ட நாமதேவர் பரமானந்த பரிதரானர். அப்பால் ராகா குயவர் தம் மனைவியுடனும் மகளுடனும் பண்டரிபுரத்திலிருந்து பக்தி செய்துகொண்டு பரம சுகமாய் வாழ்ந்துவந்தார்.

---

## 14. கோரா குயவர் சரித்திரம்

பண்டரிபுரத்திற்கு அருகே தாடோகி என்றொரு கிராம முண்டு. அந்தக் கிராமத்தில் கோரா என்னும் பெயர் கொண்ட ஒரு பக்தரிருந்தார். அவர் இருக்கும் வேளையிலும், நடக்கும் வேளையிலும், படுக்கும் வேளையிலும், உண்ணும் வேளையிலும்—எப்போதும்—ஸ்ரீ ஹரி திருநாமத் தியானமே செய்துகொண் டிருப்பார்.

அந்தப் பக்தருக்கு ஒரு குழந்தை இருந்தது. அந்தக் குழந்தையை வாசலில் விளையாட விட்டுவிட்டு, அவர் மனைவி ஜலந்திரட்ட ஆற்றுக்குச் சென்றிருந்தாள். அந்த வேளையில் கோரா பானை செய்வதற்காக மண்ணை வெட்டிச் சேர்த்துக்

காலால் மிதித்துக்கொண் டிருந்தார். அப்பொழுதும், அவர் வழக்கம்போல் ஒரு நினைவு மில்லாமல் பகவத் தியானபரரா யிருந்தார்.

விளையாடிய குழந்தையானது தவழ்ந்துகொண்டே கோராவினுடைய காலடிக்கு வந்தது. அதைக் கோரா கவனிக்கவில்லை. அவர் எப்படிக் கவனிப்பதற்காகும்? அவர் விழித்துக்கொண்டே தூங்குகிறவர்போல் ஒன்றிலும் நினைவில்லாமல் தெய்வத் தியானத்தி லிருக்கிறாரல்லவா? என்ன செய்வார்? அவர் தமது நெஞ்சகத்தில் விளங்கும் பரமாத்மாவைத் தவிர வேறொன்றையும் பார்க்கவில்லை. யாதலால், காலடியின் கீழ் வந்த குழந்தையையும் மண்ணோடு மண்ணாய்ச் சேர்த்து மிதித்துவிட்டார்.

அப்பால், அவர் மனைவி ஜலங் திரட்டிக்கொண்டு வந்து குழந்தையைத் தேடிப் பார்த்துக் காணாமல் தன் நாயகரைக் கேட்டாள். அவர் ஆநந்த தரிசனத்தி லிருந்தமையினால் ஒன்றும் பேசவில்லை. அந்த அம்மாள், 'ஐயோ! குழந்தையைக் காணோமே!' என்று அலறி அழுதுகொண்டே கோரா மிதித்துக் கொண்டிருந்த மண்ணைப் பார்த்தாள். மண்ணில் மாமிசமும் இரத்தமுங் கலந்திருக்கக் கண்டு, 'குழந்தையை இவர் மிதித்துக் கொன்றுவிட்டார்' என்று தீர்மானித்து "ஐயோ, குழந்தையை மண்ணோடு மண்ணாய் மிதித்துக் கொன்று விட்டீர்களே! வீட்டைச் சாம்பராக்கினீரே!" என்றலறி அடித்துக் கொண்டு புரண்டு புரண்டு அழுதாள்.

அதனால் கோரா வெளி நோக்க மடைந்து, தம் நாயகியைக் கோபத்துடன் பார்த்து, "பாவி, பெருமாள் என்னுடைய ஹிருதயத்தில் பேரின்பத்தைக் கொடுத்துக்கொண் டிருந்தார். அந்த ஆநந்தத்திலிருந்த என்னைக் கெடுத்தாயே!" என்று கடிந்து பேசிக் கையில் ஒரு தண்டத்தை யெடுத்துக்கொண்டு அந்த அம்மாளை அடிக்கப் போனார். அந்த அம்மாள் சற்று

விலகி நின்று "என்னைத் தீண்டினால் பாண்டுரங்கர்மேல் ஆணை" என்றாள்.

இப்படி மனைவி கூறக் கேட்டதும், கோரா விலகி நின்று, பகவானைத் துதிக்கத் தொடங்கினார். பின் அவர், வீட்டு விஷயங்களொன்றையும் கவனிப்பதே இல்லை. நினைத்த இடத்தில் சாப்பிடுவதும், கண்ட விடத்தில் படுப்பதும், உன்மத்தர்போல் ஓரிடத்தில் உட்காருவதுமா யிருந்தார்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் அவர் மனைவி ஜலத்தை விட்டு அவருடைய காலை அலம்பப் போனாள். கோரா, "பாண்டுரங்கர்மேல் ஆணை; என்னைத் தீண்டாதே" என்றார். அதைக் கேட்டதும் அந்த அம்மாள் உயிரற்றவளாய்ச் சற்று நேரம் திகைத்து நின்று பின், "ஆ நாதா, நான் குழந்தையின் நிமித்தம் அன்று அவ்வாறு கூறிவிட்டேன். அது பேதைமையினால் கூறிய வார்த்தை. அதைப் பொருட்படுத்தாமல் என்னை ஆதரிக்கவேண்டும்" என்று பாதத்தில் வீழ்ந்து பணிந்து அழுதாள்.

கோரா, "பெருமாள்மேல் வைத்த ஆணையினின்றும் நான் ஒரு நாளும் தவறமாட்டேன். கிழக்குத் திக்கில் உதிக்கும் சூரியன் மேற்கில் உதயமானாலும், நான் என்னுடைய உறுதியை விடமாட்டேன்" என்று கூறிவிட்டார். பின் அந்த அம்மாள் பெருந்துக்கத்துடன் தன் தந்தை வீடு சென்று, அவருடைய பாதம் பணிந்து, நடந்ததை நவின்று, "என்னை என் நாதர் தீண்டுவதில்லை யாகையினால் வம்ச விருத்திக்குரிய புத்திரனில்லாமற் போகிறார். வம்சத்தை நிலை நிறுத்த ஒரு புதல்வன் வேண்டும். ஆகையினால் என் தங்கையை என் நாதருக்கு மணஞ்செய்து கொடுத்து என்னைக் காப்பாற்றவேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள்.

அவர் அதற் கிணங்கி, அப்படியே கோரா குயவருக்குத் தம்முடைய இரண்டாவது பெண்ணை விவாகம் செய்வித்தார்; விவாக தினங்களில் நான்காவது நாள், உறவினரும் ஊரினரும்

கூடியிருக்கும் தருணத்தில், மாமனூர் தமது மாப்பிள்ளையை அழைத்து, 'உம்முடைய மனைவிமார்களாகிய எனது புதல்வியரிருவரையும், நீர் பாரபக்ஷமில்லாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். என்னுடைய விண்ணப்பத்திற்கு வேருக நடப்பீராயின் விடோபாமேல் ஆணையிருக்கிறது'' என்ருர்.

கோரா, அதைக்கேட்டு, "பகவானுடைய கிருபை பூர்ணமாக விருந்தால், பந்தங்கள் தமக்குத் தாமே போய்விடும்'' என்று கூறிச் சந்தோஷத்துடன் "அப்படியே நடப்பேன்'' என்று கூறினர். பிறகு யாவரும் தத்தம் ஊருக்குச் சென்றனர்.

இப்படி விவாகம் நிறைவேறியபின், கோரா தமது இரு மனைவியரையும் ஒரு தன்மையில் கவனித்து வந்தார். சகல வஸ்துக்களையும் இருவருக்கும் சமமாகக் கொடுத்துக்கொண்டு முன்போல் பகவத் தியானபரரா யிருந்தார்.

அப்படி யிருக்கையில், ஒரு நாள் கோராவின் இளைய மனைவி, படுக்கை அறையில் அவருடைய கரத்தை ஸ்பரிசித்தாள். கோரா உடனே எழுந்து கோபத்துடன், "நீ யேன் என்னைத் தொட்டாய்? நான் உன் தமக்கையை ஸ்பரிசிப்பதில்லை. அவளும் என்னை ஸ்பரிசிப்பதில்லை. அதுபோல் நீயும் என்னை ஸ்பரிசிப்பது கூடாது. நானும் உன்னைத் தீண்டுவதில்லை. தீண்டினல் ஆணையைக் கடந்த பாவம் சம்பவிக்கும். உன் தந்தையார் உங்களிருவரையும் சமமாய்ப் பாவிக்கும்படி எனக்குக் கூறியிருக்கிருர். ஆகையினல் இனித் தீண்டாதே!'' என்று கூறி, உடனே ஒரு கத்தியை எடுத்து ஸ்திரீ ஸ்பரிசம் பட்ட கரத்தைத் துண்டித்து விட்டார்.

இதைக்கண்டு அவருடைய மனைவிமா ரிருவரும் நடுங்கிப் போய்விட்டனர்; "நாம் செய்த பூஜாபலன் இவ்வளவுதான்'' என்று வருந்திப் பின் அவர்களும் பகவத் தியானபரரா யிருந்து வீட்டு வேலைகளைக் கவனித்துக்கொண் டிருந்தனர்.

அப்பால் ஒரு நாள் கோரா தமது இரண்டு மனைவிமாருடன் பண்டரிபுரத்திற்குப் போனார். அங்கே பகவானுடைய ஸந்நிதியில் நாமதேவர் பல பக்தருடன் கூடி நின்று, பாடிப் பஜனை செய்துகொண் டிருந்தார். அதைக் கண்ட கோரா குயவரும் அங்கே நின்று பாடினார். ஆனால், 'தாளம் போடக் கையில்லையே!' என்று விசனப்பட்டார். உடனே அவருடைய கை முன்போல் வளர்ந்தது. அது கண்டு எல்லோரும் ஆச்சரியப் பட்டனர்.

இப்படி யிருக்கையில், அவருடைய மூத்த பத்தினி, பண்டரிநாதரை நோக்கி "என் குழந்தையை எனக்கு எழுப்பித் தரவேண்டும்'' என்று பிரார்த்தித்தனள். பிரார்த்தித்த அளவில், பகவானுடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு குழந்தை ஒரு பக்கமிருந்து ஓடி வந்தது. அது கண்ட அன்னை ஓடி யெடுத்து மார்போடணைத்து முத்தமிட்டு மகிழ்ந்தாள். பக்தர்களெல்லோரும், பகவான் பக்தர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றி வைக்கும் திருவருளுடையவ ரென்பதை அறிந்து, பரம சந்தோஷ மடைந்து, அவரிடம் இன்னும் உறுதியான பக்தி செலுத்தலாயினர்.

அப்பொழுது, "கோரா, இன்று முதல் உன் ஆணை தீர்ந்து விட்டது. இனி நீ உன் மனைவிமா ரிருவருடன் குறைவில்லாமல் வாழ்ந்துவரக் கடவாய்!'' என்று அசரீரி வாக்குண்டாயிற்று. அதைக் கேட்ட கோரா பரமானந்தமடைந்து பகவானைப் பாடித் துதித்து வணங்கி, விடைகொண்டு தம்முடைய ஊருக்குப் போய்ச் சுகமாயிருந்தார்.

---

## 15. கபீர்தாஸர் சரித்திரம்

ஸ்ரீஹரியினுடைய ஆக்ஞையினால் சுகப்ரம்ம ரிஷியின் அம்சமான ஒரு சிசு, ஒரு கிளிஞ்சலில் அடங்கி மழைத் துளிகளுடன் கங்காநதியில் விழுந்தது. பின் அது மிதந்து

கொண்டு மணிகர்ணிகை என்னும் கட்டத்திற்கு வந்தது. அதனைப் பஞ்சுகொட்டி முகமதிய னொருவன் கண்டெடுத்துத் திறந்து பார்த்தான்; அதில் ஒரு குழந்தை யிருக்கக் கண்டு ஆச்சரியப்பட்டு வீட்டிற்கு எடுத்துக்கொண்டு போய்த் தன் மனைவியிடம் கொடுத்தான். பின் இருவரும் அக்குழந்தையை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துக் கபீர் என்னும் திருநாம மிட்டார்கள்.

கபீர் விவேக தசை அடைந்தவுடன், தாய் தந்தையர் அவருக்குத் தங்கள் குலத் தொழிலான நெசவுத் தொழிலில் பழக்கம் செய்வித்தார்கள். கபீர் அந்தச் சிறுவயது முதல் ஸ்ரீராமபிரானையே தியானிப்பதும், அவருடைய திருநாமத் தையே உச்சரித்து மகிழ்வதுமா யிருந்தார். ஆகையினால், அவர் நெசவுத் தொழிலில் அதிகமாய்க் கவனம் செலுத்துவ தில்லை. அதைக் கண்டு அவர் தாய் தந்தையர் அவரைக் கண்டிக்கத் தலைப்பட்டனர்.

இப்படியிருக்கையில், ஒரு நாள் கபீரின் தாயார் அவரைப் பார்த்து, "நான் வெளியேபோய் வருவதற்குள் இந்தத் துணியை நெய்து முடிக்கவேண்டும். இல்லையேல் நான் உனக்குக் கடுமையான தண்டனை விதிப்பேன்" என்று கூறி வெளியே சென்றாள். பின் கபீர் தமது அன்னை சொன்ன படி துணியை நெய்யத் தொடங்கினாரென்றாலும், அவர் இடையில் ஸ்ரீராமத் தியானத்தில் ஆழ்ந்து, தம்மையே மறந்து இருந்து விட்டார். அப்போது பகவான், அவர்மீது அன்புகூர்ந்து, அந்த ஆடையைத் தாமே நெய்து முடித்துவிட்டுப் போகும் போது கபீருக்கு வெளிநோக்க முண்டாகும்படி செய்துவிட்டுச் சென்றார்.

வெளிநோக்கமடைந்த கபீர், ஆடை முழுவதும் நெய்யப் பட்டிருப்பதைக் கண்டு, 'பகவானுடைய திருவருள் இது' என்று மகிழ்ந்து, தாயார் வந்ததும் அந்த ஆடையை எடுத்து அந்த அம்மாள் வசம் கொடுத்தார். அந்த ஆடையைக்

கபீரிடம் அந்த அம்மாள் மீண்டும் கொடுத்து, "மைந்த, இதனைக் கடைவீதிக்குக் கொண்டுபோய் விற்றுவா" என்று கூறியனுப்பினாள்.

கபீர் கடைவீதியிற் சென்று ஒரு பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு வஸ்திரத்தைப் பலருக்கும் காட்டி விலை கூறினார். ஆனால், அவர் சித்தம் ஸ்ரீராமத் தியானத்திலேயே இருந்தது. அந்த வஸ்திரம் ஸ்ரீ ராமமூர்த்தி நெய்ததாகையினாலே விலை மதித்திடற் கரியதா யிருந்தது. அதனால், அதனை அநேகர் கண்ணாலே பார்த்துவிட்டுச் சென்றனர். சிலர் "இந்த வஸ்திரத்தின் விலை யென்ன?" என்று கபீரைக் கேட்டனர். கபீர் "நான்குபேர் கூறும் விலையை நீங்கள் கொடுங்கள்" என்றார். ஒருவர் கூறியபடி ஒருவர் விலை கூறவில்லை. இப்படி யிருக்கையில் பொழுதுபோயிற்று. அதனால், கபீர் தாஸர் "இனி இங்கிருந்தென்ன பயன்? யாரிதை வாங்குவார்கள்?" என்றெண்ணி வருந்தினர். அந்தச் சமயத்தில், ஸ்ரீ ராமபிரான் ஒரு பிராமணரைப்போல் அவரிடம் வந்து "குளிர் தாங்கமுடியவில்லை. நான் பரம ஏழை. எனக்கு உமது கையிலிருக்கும் வஸ்திரத்தைக் கொடுப்பீரானால், உம்முடைய பெயர் சொல்லிப் போர்த்துக் கொள்வேன்" என்று யாசித்தார். கபீர்தாஸர் அவரிடம் இரக்கங்கொண்டு தம்மிடமிருந்த வஸ்திரத்தில் பாதி கிழித்துக் கொடுத்தார். பிராமணர் சந்தோஷமாய்ப் பெற்றுக்கொண்டு கபீரை "நீர் சுகமாக வாழக் கடவீர்!" என்று ஆசீர்வாதம் செய்து சென்றனர்.

பின் கபீர் தாஸர் வீட்டுக்குப்போனால் தம்முடைய அன்னை, வஸ்திரத்தைப்பற்றிக் கேட்பாளென்று பயந்து, வீட்டுக்குப் போகாமல் அங்கிருந்து புறப்பட்டு வழியிலேயுள்ள ஒரு பாழும் வீட்டைக் கண்டு, அதனுள் சென்று ஓரிடத்தி லுட்கார்ந்து ஸ்ரீராமரைத் தியானித்துக்கொண் டிருந்தார். ஸ்ரீராமபிரான் அங்கே கபீர் முன் ஒரு பகீரைப் போல் வேஷம் போட்டுக்கொண்டு போய், "நான் உடுக்க

உடையில்லாமல் கஷ்டப்படுகிறேன். எனக்கு உமது கையி லிருக்கும் ஆடையைக் கொடும்'' என்று இரந்தார். கபீர் உடனே தம்மிட மிருந்த அந்தப் பாதி ஆடையையும் பகீரிடம் கொடுத்துவிட்டார். பகீராக வந்தவர் அதை மன மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டு, கபீரை வாழ்த்திவிட்டு, நேரே கபீரின் வீட்டிற்குப் போய், அவருடைய அன்னையைக் கண்டு, "உன்னுடைய குமாரன் கபீர், ஒரு பாழும் வீட்டி லுட்கார்ந்துகொண் டிருக்கின்றான். அவன் கையிலிருந்த வஸ்திரத்தை எவனோ பிடுங்கிக்கொண்டு போய்விட்டான். நீ போய்ப் பார் அவனிருக்கும் நிலைமையை'' என்றார்.

இதைக் கேட்டதும் கபீரின் அன்னைக்குக் கோபம் வந்து விட்டது. அவள் உடனே, கையில் ஒரு பிரம்பெடுத்துக் கொண்டு, வீட்டைவிட்டுப் புறப்பட்டு "எங்கே அந்த வீட் டைக் காட்டும் பார்க்கலாம்'' என்றாள். பகீர், "வா காட்டு கின்றேன்'' என்று கபீரிருக்கும் வீட்டிற்கு அந்த அம்மாளை அழைத்துக்கொண்டு சென்று, "அதோ பார் உன்னுடைய மகன் கபீர்'' என்று ஸ்ரீராமத் தியானத்திலிருக்கும் கபீரைக் காட்டினார்.

அந்த அம்மாள் கபீரின் அருகே சென்று பார்த்தாள். கபீர் கையில் வஸ்திரமில்லாமல் கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந் திருப்பதைக் கண்டதும், கடுங்கோபங் கொண்டு, "மூடா, வஸ்திர மெங்கே? ஏன் இந்தப் பாழும் வீட்டில் வந்து இப்படிப் பைத்தியக்காரனைப்போல் உட்கார்ந்துகொண் டிருக்கிறாய்?'' என்று கேட்டாள். கபீர், ஸ்ரீராம தியானபர ராய்த் தம்மை மறந்திருந்தபடியால் அன்னை கேட்ட கேள்விக்கு அவர் விடை தரவில்லை. ஆகையினால் அவள் அதிகக் கோபங் கொண்டு "என்னடா, நான் கேட்கிறேன்! விடை யொன்றும் சொல்லாமல் மரமாய் உட்கார்ந்திருக்கிறாய்!'' என்று அதட்டித் தன் கைப்பிரம்பால் கபீரின் முதுகில் ஓர் அடி அடித்தாள்.

அடித்த வுடன் கபீர் திடுக்கிட் டெழுந்தார். அப்போது அருகே பகிராயிருந்த பகவான் சீதா சமேதராய்த் தமது சொரூப தரிசனந் தந்து, கபீரின் அன்னையை நோக்கி, "நீ என்னைச் சிக்ஷித்தது போதும்" என்று தமது முதுகைக் காட்டினர். கபீர் ஸ்ரீராம தரிசனம் கண்டதும் பரமானந்த மடைந்து, அநேகமுறை சாஷ்டாங்கமாகப் பணிந்து துதித்துக் கரங்குவித்துக் கண்களிலிருந்து ஆநந்த பாஷ்பம் பெருக நின்ருர். பகவான், "கபீர், எம்முடைய பரீக்ஷைக்கு நீ பொறுத்திருந்தாய்! ஆகையினுல், நாம் இனி உனதருகிலேயே இருப்போம். எம்மை நீ மறவாதே" என்று கூறி, அவருடைய அன்னையை நோக்கி, "நீ மகா பாக்யவதி! உன் இருதயத்தில் என்னை நிலையாக நிறுத்திக்கொள்" என்று கூறி மறைந்தார்.

அப்பால், கபீரின் தாய் கபீரைக் கட்டியணைத்து உச்சி மோந்து மகிழ்ந்து, "அப்பா, நீ ஸ்ரீராம பஜனையைக் கற்றுச் சுகமுற்ருய்! உன்னுல் அந்தப் பகவானுடைய தரிசனம் எனக்கும் கிடைத்தது. நான் பரிசுத்தமடைந்தேன். நமது குலமும் பரிசுத்தமடைந்தது" என்று கூறிக் கபீரை வீட்டிற் கழைத்துப்போனுள். கபீர் எப்போதும் ஸ்ரீராமத் தியானமே செய்துகொண்டு சுகமாயிருந்தார். அவருடைய அன்னையும் அவரிஷ்டப்படி நடந்துவந்தாள்.

இப்படியிருக்கையில் கபீருக்குக் கல்யாணம் நடந்தது. கபீர் தமது மனைவியுடன், ஸம்பத்து, தரித்திரம் என்னும் வேற்றுமையை எண்ணுமல் இல்லற வாழ்வை நடத்திவந்தார். அப்பால் அவருக்கு ஒரு பிள்ளை பிறந்தது. கபீர் அப்பிள்ளைக்குக் கமால் என்று நாமகரணம் செய்தார். கமால் வளர்ந்து தம் உணர்வுபெற்ற நாள்முதல் அன்னை தந்தையர்க் கடங்கியவராயிருந்து நாளடைவில் தந்தையாரைப் போலவே தாமும் பரம பக்தராஞர்.

அப்பால் கமால் தம்முடைய தந்தையாரைப் பணிந்து, "நான் துவாரகை போய்வர விரும்புகிறேன். விடையளித்

தருள்வீராக'' என்று கபீரை வணங்கிக் கேட்டார். கபீர், "இவ்வளவு சிறுவயதில் நீ யாத்திரையில் விருப்பங்கொண்டது பற்றிச் சந்தோஷமடைகிறேன். ஸ்ரீராமத்யானத்தையே துணையாகக்கொண்டு சுகமாய்ப் போய்வா'' என்று விடை தந்தார். கமால், உடனே தம் அன்னை தந்தையரைப் பணிந்து, ஸ்ரீராமத்யானம் செய்துகொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டுச் சென்றார். வழியில் அவர் அநேக க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டே துவாரகை போய்ச் சேர்ந்து, கிருஷ்ண பகவானுடைய திவ்யதரிசனம் செய்து திரும்பினார்; வருகிற வழியில் அவர் ஓர் ஊரில் தங்கினார். அங்கே விஷ்ணுதாஸன் என்னும் வியாபாரி ஒருவன், கமாலைத் தன் வீட்டிற் கழைத்துப் போய் வந்தன உபசாரங்களுடன் அன்னமளித்தான். கமால் போஜனம் செய்தவுடன் அங்கொரு பக்கமிருந்து, பகவான் பேரில் சில கீர்த்தனங்களை வேடிக்கையாகப் பாடினார். அந்தக் கீர்த்தனங்களைக் கேட்ட வர்த்தகன் பரமானந்தமடைந்து, காசு பணங்களைக் கமால் தீண்டாராகையினால், ஒரு மாணிக்கத்தைக் கொண்டுவந்து அவர்முன் வைத்து, "அங்கீகரித்தருளல் வேண்டும். இது இரவில் வெளிச்சந்தரும்'' என்று கரங்குவித்து வேண்டினான்.

கமால் "நான் இதை என் கரத்தினால் தீண்டேன். இரத்தின முதலியவைகளை நாங்கள் கற்களாகப் பாவிப்போம். நான் இதைக் கொண்டுபோனால் என் தந்தையார் என்மேல் கோபங்கொண்டு தண்டிப்பார்'' என்று கூறி அதை அங்கீகரியாமல் அப்படியே ஸ்ரீ ராமத்யானபரராய்ப் படுக்கையிலே படுத்து நித்திரை போய்விட்டார். அப்பால் வர்த்தகன் அந்த மாணிக்கத்தை அவருடைய கௌபீனத்தில் முடிந்துவிட்டான். கமால் காலையிலெழுந்து வர்த்தகனிடம் விடைகொண்டு புறப்பட்டு, வழியிலெங்கும் தங்காமல் ஊர்வந்து சேர்ந்து, தந்தையாரைப் பணிந்தார். பணிந்தெழுந்திருக்குந் தருணத்தில் தமது கௌபீனத்தில் முடியொன்றிருப்பது அவர்க்குப் புலப்பட,

அவர் அதை அவிழ்த்துப் பார்த்து, வர்த்தகன் முடிந்திருக்கிறான் என்றறிந்து, உடனே தமது தந்தையாரிடம் வர்த்தகனுக்கும் தமக்கும் நடந்த செய்தியைக் கூறினார். அதைக் கேட்டதும் கபீர்தாஸர் அப்படியே மூர்ச்சையாய்க் கீழே விழுந்துவிட்டார். பின் சற்று நேரத்திற்கெல்லாம் எழுந்து, கமாலைப் பார்த்து, "நீ என் முன் நில்லாதே! ஸ்ரீ ராம கீர்த்தனங்களைப் பாடி இந்த இரத்தினத்தைக் கொண்டுவந்தா யல்லவா? ஸ்ரீ ராம நாமத்தை விற்றது கொடிய அபராதமாகும். ஆகையினால், நான் பெருந்துக்கத்துக் காளானேன். நீ போ. என் முன் நில்லாதே" என்று மகனை வெறுத்தார்.

பின் கமால் ஒரு நிமிஷங்கூடத் தந்தையின் எதிரில் நில்லாமல், உடனே புறப்பட்டு அந்த வர்த்தகனுடைய ஊருக்குப் போய், அவனைக் கண்டு அவனுடைய மாணிக்கத்தை அவனிடம் கொடுத்துவிட்டுப் பெருமகிழ்ச்சியுடன் வீட்டிற்கு வந்து தந்தையாரைப் பணிந்தார். கபீர் சந்தோஷமடைந்து, தம் புதல்வரை நோக்கி "உன் மன நிலைமை எப்போதும் இந்தச் சுத்த சுபாவத்துடனிருக்கக் கடவது!" என்று வாழ்த்தினார்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் கபீர் தாஸர், 'ஆசாரியரின் அருளை அடையாதவனுடைய ஆயுள் வியர்த்தமாகும்' என்றுகருதி ஸ்ரீராமாநந்தர் என்னும் ஒரு ஸந்யாசியினுடைய ஸந்நிதிக்குப் போய் அவரைப் பணிந்து, "என்னை ஆட்கொண்டருளவேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். ஸ்ரீராமாநந்தர், "நீர் மகம்மதிய வம்சத்திலே பிறந்தவராகையினால் உபதேசம் செய்வதற்கில்லை" என்றார். கபீர், "சுவாமி, அடியேன் அதீனன்; தேவரீர் திருவருளையே நாடி நிற்பவன். அடியேனைக் கடைத்தேறச் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

ஸ்ரீராமாநந்தர், பிறகு கபீருடைய பேச்சுக்குச் செவி கொடாமல் தமது ஆசார அநுஷ்டானங்களைக் கவனிக்கலாயினர். அது கண்ட கபீர், தம்முடைய வீட்டுக்குப் போய்

அவருடைய திருவடி தமது முடியின் மேலே படும்படியான உபாயத்தை நாடலானார். அப்பால் ஒரு நாள் கபீர், கங்கையில் ஸ்ரீராமாநந்தர் வழக்கமாய் ஸ்நானம் செய்ய வரும் படித் துறையில் அருணோதயத்திற்கு முன்பே போய் முக்காடிட்டுப் படுத்துக்கொண் டிருந்தார். வழக்கம்போல் அன்றைய தினமும் ஸ்நானம் செய்ய வந்த ஸ்ரீராமாநந்தர், தெரியாமல் கபீரின் தலையின்மேல் காலை வைத்து விட்டார்; வைத்ததும் "ஸ்ரீராமா! ஸ்ரீராமா! யாருடைய தலையிலேயோ காலை வைத்துவிட்டேனே" என்று கூறியவாறே விலகி நின்றார். அச்சமயம் கபீர் "ஸ்வாமி, தேவரீருடைய கிருபையை அடைந்தேன். அநாயாஸமாகத் தேவரீருடைய சரணங்கள் அடியேன் தலைமீது வைக்கப்பட்டன வன்றோ! அதனுடன் ஸ்ரீராம மந்திர சிரவணமு மடையப் பெற்றேன். அநேக பிறவிகளில் செய்த சுகிருதம் இன்று பலித்தது" என்று கூறிப் பணிந்தார்; பலமுறை பணிந்தெழுந்து குருவின் பிரபாவத்தைப் பற்றிப் பாடிக்கொண்டே வீடு சென்றார்.

ஸ்ரீராமாநந்தர் கபீரினுடைய பரிபக்குவ நிலையைக் கண்டு மனமுவந்தா ராயினும், அதை வெளிக் காட்டாமல் ஒரு நாள் அவரைப் பரீக்ஷிக்கவேண்டு மென்று தீர்மானங்கொண்டார். கபீர் நாடோறும் தமது குருவாகிய ஸ்ரீராமாநந்தரைத் துதித்துப் பாடி மகிழ்ந்துகொண் டிருந்தார். ஒரு நாள் கபீர் தமது குருவைத் துதித்துப் பாடிக்கொண்டே தெருவழியே சென்றார். அப்பொழுது அவ்வழியே தமது மாணவர்களுடன் சென்ற ஸ்ரீராமாநந்தர், கபீரை அழைத்து, "நீ என்னுடைய மாணவனென்று சொல்லிக் கொள்கிறாயே! நான் உனக்கு எப்போது எந்த இடத்தில் எந்த மந்திரம் உபதேசம் செய்தேன்? அதற்குச் சாட்சி யார்? வீணிலேன் பிதற்றிக்கொண் டிருக்கிறாய்?" என்று கோபங்கொண்டு, தமது பாதக் குறட்டைக் கழற்றி அவர்மே லெறிந்தார். அந்தக் குறடு கபீரின் நெற்றியிற் படவே, இரத்தம் வரத் தொடங்கியது. அதைக் கண்ட

கபீர் சந்தோஷ மடைந்தவராய் "தேவரீர் அப்பொழுது செய்த உபதேசம் இரகஸ்யமா யிருந்தது. இப்பொழுது நாலுபேர் அறியத் தேவரீரின் பாதுகை அடியேன் சிரசின்மீது வைக்கப் பட்டது. ஐந்து பூதங்களையும் சாக்ஷி வைத்துத் தேவரீருடைய பாதமலரைப் பிடித்தேன். தேவரீர் செய்தருளிய உபதேசத் திற்கு ஸ்ரீஹரியே சாக்ஷி'' என்றனர்.

இதைக் கேட்டதும் ஸ்ரீராமாநந்தர் கிருபைகூர்ந்து, கபீ ரிடம் சென்று, தமது திருக்கரத்தை அவருடைய சிரசின் மேலே வைத்து, அவ்விடத்திலேயே தாரக மந்திரோபதேசம் செய்தருளினர். பின் கபீர் பரமாநந்தமடைந்து, குருநாதரை வணங்கி, ஸ்ரீராமபிரானைத் துதித்துப் பாடி, "நான் தன்ய னனேன். என் பிறவி பயனெய்தியது!'' என்று கூறிக் குரு நாதரிடம் விடைகொண்டார்.

இவ்வாறு குருவின் உபதேசம் பெற்றபின் கபீர்தாஸர் உலகம் புகழத்தக்க பிரபல பக்தராய் விளங்கினர். அதைக் கண்டு பொறாமைகொண்ட சில துஷ்டர்கள், ஒன்று கூடிக் கபீரைப் பரிகசிக்க எண்ணி, இரகஸ்யமாய் அநேக இடங்களி லிருந்து அநேக சாதுக்களை ஏக காலத்தில் வரவழைத்துக் கபீரின் வீட்டிற்கு அனுப்பினர்கள். கபீர் தாஸர், துஷ்டர் களுடைய சேஷ்டையினல் இப்படிச் சாதுக்கள் வந்திருக்கிறர் கள் என்பதை அறியாதவராய்ப் பரம சந்தோஷத்துடன் வழக் கம்போல் அவர்களை வரவேற்ருர். ஆனல், அவர்களுக்குச் செய்யவேண்டிய மற்ற உபசரணைகளை எப்படிச் செய்வதென்று மயங்கி நின்று, ஸ்ரீராமபிரானைத் தியானித்தார். ஸ்ரீராமபிரான் பக்தபராதீன ராகையால், அங்கே வந்திருக்கும் ஒவ்வொரு சாதுவினிடமும் ஒவ்வொரு கபீராகத் தோன்றி நின்று, அவ ரவர்களுக்கு வேண்டிய உபசரணைகளைச் செய்தார். அது கண்டு கபீர் பரமானந்த மடைந்தார். துஷ்டர்கள் "என்ன அதிசய மிது! கபீர் பரம பக்தர் என்பதி லையமில்லை. அவருக்கு நாம் தீங்கு செய்தது பெரிய தவறு. நாம் செய்த தீங்கே அவருக்குப்

பெரும் கீர்த்தியைக் கொடுத்தது. கபீர் சர்வேச்வரருடைய உண்மையான அடிமையாகையினால், அவரைப் பகவான் கைவிடாமல் காப்பாற்றினார்" என்று கூறி, எல்லோரும் ஒன்று கூடி வந்து, கபீருடைய திருவடி பணிந்து, "நாங்கள் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். கபீர் அவர்களிடம் இரக்கங்கொண்டு அவர்களுக்கு ஸ்ரீராம மந்திரத்தை உபதேசித்து அவர்களெல்லோரையும் பக்தி மார்க்கத்தில் திருப்பினார்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் இரவில் சில பாகவதர்கள் கபீர்தாஸருடைய வீட்டிற்கு வந்தார்கள். கபீர்தாஸர் அவர்களைக் கண்டதும் பெரு மகிழ்ச்சியுடன் வரவேற்று உட்காரச் செய்து பிரியமாய்ச் சற்று நேரம் பேசிக்கொண்டிருந்து, பின் மனைவியினிடம் சென்று, "இவர்களுக்கு அன்னமிட வேண்டுமே? என்ன செய்யலாம்?" என்று வினவினார். அவ்வுத்தமி என்ன செய்வாள்! "நாதா! வீட்டில் கொஞ்சங்கூட அரிசி கிடையாது. கடன் கேட்பதற்கு மிடமில்லை. இந்நேரத்தில் கடன் கேட்டாலும் ஒருவருங் கொடுக்கமாட்டார்கள். என்ன செய்வதென்று தெரியவில்லையே!" என்றாள்.

அதன் பிறகு கபீர் தாஸர், தம் மைந்தர் கமாலை அழைத்து, "அப்பா, இன்று பாகவதர்கள் வந்திருக்கிறார்கள். வீட்டில் கொஞ்சங்கூட அரிசி முதலியன இல்லை. கடன் கொடுப்பாரும் யாருமில்லை. நானொரு வேலை செய்ய நிச்சயித்திருக்கிறேன்: கடைத் தெருவிலுள்ள மளிகைக் கடைக் கோமட்டி வீட்டிற் கன்னம் வைத்து நமக்கு, எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு அரிசி முதலிய சாமான்களை அபகரித்துக் கொண்டுவந்து பாகவத கைங்கரியத்தை நிறைவேற்ற நினைக்கிறேன். நீ இதற்கு என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டார். கமால் "அப்படியே செய்வோம். எப்படியாவது பாகவத கைங்கரியம் நிறைவேறட்டும்" என்று புறப்பட்டார்.

இருவரும் புறப்பட்டுப் போய்ச் செட்டியின் கடையில் கன்னம் வைத்தனர். அப்பால், கமால் கன்ன வாசலின் வழியே உள்ளே பிரவேசித்து, வேண்டிய அரிசி, பருப்பு, புளி முதலிய சாமான்களை அபகரித்து மூட்டையாகக் கட்டிக்கொண்டு, கன்ன வாசலின் வழியே அதனைத் தந்தையாரிடம் கொடுத்தார். கபீர் அதனைச் சந்தோஷமாய்ப் பெற்றுக் கொண்டு, "அப்பா, நாம் ஒரு காரியம் செய்யவேண்டும். இந்த வீட்டுச் செட்டியை எழுப்பிவிட்டுப் பின் தப்பிப் போய்விட வேண்டும். நாம் அவனை எழுப்பாமல் சென்றுவிடுவோமானால், இந்த வாசலின் வழியே கள்ளர்கள் எவரேனும் உள்ளே நுழைந்து, தங்களுக்கு வேண்டிய பொருள்களைக் கொண்டு போய்விடுவார்கள். அதனால் நமக்குப் பாபம் வந்து சேரும். ஆதலால், செட்டியை எழுப்பிவிட்டுப் பின் நீ வெளியே வா" என்று கூறினார்.

உடனே கமால், "ஐயா! இரண்டு திருடர்கள் உம்முடைய வீட்டில் திருடிக்கொண்டு செல்கிறார்கள். எழுந்திரும்! எழுந்திரும்!" என்று உரத்துக் கூவிச் செட்டியை எழுப்பிவிட்டு, அப்பால் துரிதமாய் ஓடிவந்து, வெளியே வரக் கன்ன வாசலில் நுழைந்தார். கமால் வயிறளவு வெளிவருவதற்குள் செட்டி ஓடி வந்து கமாலின் காலைப் பிடித்துக் கொண்டான். கமால், உடனே தகப்பனாரை அழைத்து, "வர்த்தகன் என் காலைப் பிடித்துக்கொண்டிருக்கிறான். நான் வெளியே வர முடியவில்லை. சற்று நேரம் இவ்விடமிருந்தால் ஊர் ஜனங்கள் கூடிவிடுவார்கள். பின் நம்மைத் திருடர்களென்று பிடித்துத் துன்பப்படுத்துவார்கள். அதனால், பாகவதர்களுக்கு அன்னமிடுவது கெட்டுவிடும். ஆகையினால், என்னுடைய சிரசைக் கைக் கத்தியினால் சேதித்துக்கொண்டு போய்விடும். இச்சமயத்தில் மாயா மமதைகளை மனதில் வைக்கவேண்டாம்" என்றார்.

இதைக் கேட்டதும் கபீர் சந்தோஷத்துடனே கமாலின் தலையைச் சேதித்து எடுத்துக்கொண்டு தம் வீட்டிற்குப் போய் நடந்த செய்தியை மனைவிக்குத் தெரிவித்துக் கமாலின் தலையையும் சாமக்கிரியைகளையும் கொடுத்தார். மனைவி, மகனுடைய சிரசை நோக்கிக் கண்ணீர் பெருக நின்று, "அப்பா, சாதுக்களுக்காகவே சரீரத்தை வளர்த்து வந்தாயோ!'' என்றும், இன்னும் பலவும் சொல்லிப் புலம்பிப் பின் மனந்தேறி அச் சிரசை ஒரு பக்கத்தில் வைத்துவிட்டு, கொஞ்ச நேரத்தில் சமையல் செய்து முடித்துப் பாகவதர்களுக்குத் திருப்தியாகப் போஜனம் செய்வித்தாள். கபீர்தாஸர், "நமக்கு இன்றே சுதினம்! சாது சேவை நிறைவேறிற்று!'' என்று சந்தோஷங் கொண்டார்.

இங்கிப்படி யிருக்க, வர்த்தகன், "வீட்டில் திருடன் புகுந்துவிட்டான்! திருடன் புகுந்துவிட்டான்'' என்று பெருங் கூச்சலிட்டான். அதன்மேல் ஊரார் கூடினர். தலையில்லா முண்டம் கன்ன வாசலிலே கிடக்கக் கண்டு, அவர்கள் வியப்புற்று, "திருடர்கள் அகப்பட்டவனைக் காட்டிக்கொடுக்கக் கூடாதென்று கருதி அவன் தலையையும் கொண்டுபோய்விட்டார்கள். இந்த முண்டத்தைக் கொண்டு நாம் திருடனைக் கண்டுபிடிப்பதற்கில்லை. ஆதலின், நீ அரசனிடஞ் சென்று நடந்ததைச் சொல்லிவிடு'' என்று செட்டிக்குக் கூறிச் சென்றார்கள். வர்த்தகன் அவ்வாறே அரசனிடஞ் சென்று முறை யிட்டான். அரசன் விசாரணையொன்றும் செய்யாமல் அந்தத் திருடன் சரீரத்தைச் சூலத்திலிடும்படி அமைச்சனுக்கு உத்தரவிட்டான். அமைச்சன் கமாலின் சரீரத்தை மூன்று தெருக்கள் கூடுமிடத்தில் சூலத்தில் மாட்டி, 'இது திருடர்களுக்கு விதிக்கும் தண்டனை' யென்று உலகத்தவர் உணரும்படி செய்தான்.

இவ்வாறு நடந்தபின், கபீர் வீட்டிற்கு வந்திருந்த பாகவதர்கள், மற்றோர் ஊருக்குப் போக எண்ணிக் கபீரிடம் விடைகொண்டு புறப்பட்டுச் சென்றார்கள். கபீரும் அவர் மனைவியும் அவர்களை வழி கூட்டி யனுப்பக் கொஞ்ச தூரம்

அவர்களுடன் பேசிக்கொண்டே சென்றனர். எல்லோரும் கமாலின் சரீரம் சூலத்தி லிடப்பட்டிருக்கும் இடத்தை நெருங்கினவுடனே பாகவதர்கள் அந்தச் சரீரத்தைக் கண்டு அதிசயித்து நின்றனர். அப்பொழுது அந்தச் சரீரம் தன் இரண்டு கரங்களையும் குவித்துச் சாதுக்களைக் கும்பிட்டது. சாதுக்கள் அதுகண்டு வியப்படைந்து, கபீரை நோக்கி, "இந்த முண்டம் இப்படி எம்மைச் சேவிப்பதேன்?" என்று கேட்க, கபீர் நடந்ததை நவின்றார். பாகவதர்கள், "ஓகோ! இப்படியும் ஒரு பக்தனிருக்கின்றானா?" என்று அதிசயித்து, உடனே கமாலின் சிரசைக் கொண்டுவரச் செய்து, அதனை அவர் சரீரத்தில் பொருத்தி, ஸ்ரீராமத்தியானம் செய்தார்கள். செய்தவளவில் கமால் உயிர் பெற்றெழுந்து சாதுக்களுக்கு வந்தனம் செய்து நின்றார். சாதுக்கள் அவரையும் கபீரையும் கபீரின் மனைவியையும் புகழ்ந்து, அவர்களுக்குப் பரிபூர்ணமான மனதுடன் ஆசிர்வாதம் செய்து சென்றார்கள். இந்த அதிசயத்தை ஊராரும் அரசனும் அறிந்து கபீரின் பக்தி விசேஷத்தைக் கொண்டாடி, அவரைப் பெருமைப்படுத்தத் தலைப்பட்டனர்.

---

## 16. நரஹரி சரித்திரம்

**ப**ண்டரிபுரத்திலே தட்டார் குலத்திலே நரஹரி என்னும் பெயர்கொண்ட சிவபக்தனொருவ னிருந்தான். அவன் சிவபெருமானிடத்தில் மாறாத அன்பு பூண்டு தன் குல ஒழுக்கந் தவறாதவனாயும் தருமகுண சீலனாயும் விளங்கினான். ஆனால், அவன் பாண்டுரங்கருடைய கோவிலுக்குப் போவதுமில்லை; அவரைத் தரிசிப்பதுமில்லை. எப்போதும் சிவபெருமானையே தியானிப்பதும் அவருடைய ஆலயங்களுக்குப் போய் அர்ச்சனை செய்வதும் அவர் புகழ் பாடி மகிழ்வதுமாகவே இருந்தான்.

இப்படி யிருக்கையில், விஷ்ணுபக்தனான வர்த்தகனொருவன், தான் ஒரு சமயம் செய்துகொண்ட பிரார்த்தனையின்படி

அரைஞாண் செய்து பாண்டுரங்கருக்குப் பூட்ட எண்ணி அவ்வூருக்கு வந்தான். நரஹரி பொன் நகைகள் செய்வதில் கைதேர்ந்தவனாதலால், வர்த்தகன் அவனிடம் பொன்னைக் கொடுத்து, பாண்டுரங்கருடைய இடுப்பிற்குச் சரியாய் ஓர் அரைஞாண் செய்ய உத்தரவிட்டான்.

நரஹரி பாண்டுரங்கருடைய இடுப்பின் அளவை அவ்வர்த்தகனைக்கொண்டே தெரிந்துகொண்டு, அந்த அளவுக்குத் தக்கபடி ஓர் அரைஞாணைச் செய்து கொடுத்தான். வர்த்தகன் அந்த அரைஞாணைக் கொண்டுபோய்ப் பாண்டுரங்கருக்குப் பூட்டிப் பார்த்தான். அது அவர் இடுப்பினளவுக்குச் சற்றுச் சிறிதாயிருந்தது. பின் வர்த்தகன் அதை யெடுத்துக்கொண்டு தட்டானிடம் வந்து, "இது கொஞ்சம் சிறிதாயிருக்கிறது. ஓர் அங்குலம் பெரிதாய் வேண்டும்" என்றான்.

நரஹரி ஆச்சரியத்துடன் அந்த அரைஞாணைக் கொஞ்சம் பெரிதாக்கித் தந்தான். வர்த்தகன் அதை எடுத்துக்கொண்டு சென்று பகவானுக்குப் பூட்ட, அது கொஞ்சம் பெரிதாயிருந்தது. அது கண்டு வர்த்தகன் வியப்படைந்து, மீண்டும் அரைஞாணை எடுத்துக்கொண்டு நரஹரியினிடம் வந்து "ஐயா, இது கொஞ்சம் பெரிதாயிருக்கிறது. சிறிதாக்கித் தாரும்" என்று கேட்டான்.

நரஹரி, "என்ன விந்தை இது!" என்றெண்ணியவாறே அந்த அரைஞாணை வாங்கிச் சற்றுச் சிறிதாக்கித் தந்தான். வர்த்தகன் அதை யெடுத்துக்கொண்டு போய்ப் பெருமாளுக்கு அணிந்தான். அரைஞாண் இடுப்பிற்குப் பிடிக்காமலிருந்தது. என்ன செய்வான் வர்த்தகன்! பெருங் கவலையுடன் தட்டானிடம் வந்து, "ஐயா, இந்த அரைஞாண் பகவானுக்கு அணிவதற் கேற்றதாயில்லை. நீரே சற்று ஸந்நிதிவரையில் வந்து, இந்த அரைஞாணைப் பகவானுக்கு உம்முடைய கையினால் அணிந்துவிட்டுத் திரும்பவேண்டும்; மறுக்கலாகாது" என்று கேட்டுக்கொண்டான்.

நரஹரி, "நான் சிவபெருமானுடைய திருவுருவத்தைத் தவிர வேறு எந்தத் தெய்வத்தின் உருவத்தையும் கண்ணால் பார்ப்பதில்லை என்கிற விரதங்கொண்டவன். ஆதலால், நான் அங்கே வரமுடியாது" என்று கூறினான். வர்த்தகன், "ஐயா, அப்படியானால் ஒன்று செய்யும்: நான் உமது கண்ணைத் துணியினால் கட்டி அழைத்துக்கொண்டு போகிறேன். நீர் பெருமாளைப் பாராமல் அவர் இடுப்பில் இந்த அரைஞாணை அணிந்து விடும். உமக்கு இன்னும் சிறிது கூலியும் சேர்த்துத் தருகிறேன்" என்று வேண்டிக்கொண்டான்.

நரஹரி அப்படிச் செய்ய இணங்கினான். வர்த்தகன் அவனுடைய கண்ணைத் துணியினால் கட்டிக் கோவிலுக்கழைத்துக்கொண்டுபோய்ப் பெருமாளுக்கு அரைஞாணை அணியச் சொன்னான். நரஹரி பகவானுடைய இடுப்பைத் தன் இரண்டு கரங்களாலும் தழுவியபடி அரைஞாணைப் பூட்ட யத்தனித்தான்.

அப்பொழுது அந்த விக்ரகம், ஐந்து முகங்களும் பத்துக் கரங்களும் பன்னக பூஷணமும் சடை முடியும் புலித்தோல் ஆடையுமுடைய சிவ சொரூபமாய் அவனுக்குத் தோன்றியது. அது கண்ட நரஹரி சந்தோஷ மடைந்து, தன் கண்ணிலே கட்டியிருந்த துணியை அவிழ்த்துவிட்டு, "பன்னக பூஷணா! பரமகாருண்ய சீலா" என்று கை கூப்பினான். அப்போது பகவான் சங்கு சக்ர பீதாம்பரதாரியான விஷ்ணு சொரூபமாய் விளங்கினர். நரஹரி அதைக் கண்டதும் வியப்படைந்து, "ஆ!" என்று பின் நகர்ந்து, கண்களில் துணியைக் கட்டிக் கொண்டு, அரைஞாணைப் பூட்டப் பகவானைத் தொட்டான். அந்த விக்ரகம் முன்போல் சிவ சொரூபமாய் விளங்கக் கண்டான். நரஹரி, உடனே அதி விநோதத்துடன் கண்ணைத் திறந்து பார்த்தான். பகவான் மீண்டும் விஷ்ணு சொரூபமாய் விளங்கினர்.

அப்பால் நரஹரி கண்களை மூடிக்கொள்வதை விட்டு, பகவானுடைய பாதாரவிந்தத்தில் சாஷ்டாங்கமாக வணங்கி நின்று துதித்தான். பகவான், "நரஹரி, உன்னுடைய வைராக்யம் சிறந்தது. ஆயினும், நீ பேத புத்திகொண்டது தவறு. இனி அவ்வாறு பேத புத்தி கொள்ளாமல் பகவத் பக்தி செய்தல் வேண்டுமென்றே நாம் இந்தத் திருவிளையாடலைச் செய்தோம். பேத புத்தி யுடையவன் எமது கருணைக்குப் பாத்திரவானாகான்" என்று திருவாய் மலர்ந்தருளி, நரஹரிக்கு நல்ல புத்தியை ஊட்டினர்.

பின் நரஹரி அந்த அரைஞாணை வர்த்தகன் கையில் கொடுத்து, "இப்போது இதனைப் பகவானுக்குப் பூட்டும். பகவான் உகந்து ஏற்றுக்கொள்வார்" என்று கூறினன். வர்த்தகன் பெருமகிழ்ச்சியுடன் அந்த அரைஞாணைப் பகவானுக்குப் பூட்டிப் பிரார்த்தனையை நிறைவேற்றிச் சென்றான்.

---

## 17. மச்சேந்திர கோரக்ஷகர் சரித்திரம்

மச்சேந்திரர் என்னும் பெயர் கொண்ட ஒரு மகானிருந்தார். அவரை உலகமெல்லாம் புகழ்ந்து போற்றிக் கொண்டாடின. அவர் ஒரு சமயம் ஓர் ஊருக்குப் போய் ஒரு வீட்டில் பிக்ஷை கேட்டார். அந்த வீட்டு மாது அவருக்குப் பிக்ஷை யிட்டு வணங்கி, "ஸ்வாமி, எனக்குப் புத்ரபாக்யமுண்டாகும்படி ஆசீர்வாதம் செய்யவேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள். மச்சேந்திரர், உடனே மந்திர விபூதியிற் கொஞ்சம் கொடுத்து, "மாதே, நீ புத்திரனை அடைவாய். நான் உனக்கு விபூதி தந்ததை ஒருவருடனும் சொல்லாதே! சொன்னால் பலிக்காது" என்று கூறிச் சென்றார். அம்மாது உடனே தன்னுடைய தோழியின் வீட்டிற்குப் போய், "ஒரு ஸந்யாஸி பிக்ஷைக்கு வந்தார். அவர் எனக்குப் பிள்ளை பிறக்கும் என்று சொல்லி விபூதி தந்தார். இந்த விபூதியை

என்னடி செய்யட்டும்?'' என்று கேட்டாள். அவள், "இந்த விபூதியை நீ தரித்துக் கொள்ளாதே! ஸந்யாஸியைப்போல் சில ஜோகிகள் வருகிறார்கள். அவர்கள் இம்மாதிரி விபூதி தந்து ஸ்திரீகளை மயக்கிக் கொண்டுபோய்விடுகிறார்கள். அதுபோல் நீ கண்ட ஸந்யாஸியும் ஒரு மோசக்காரனு யிருக்கலாம். ஆகையினுல், அந்த விபூதியை எங்கேயாவது எறிந்து விடு'' என்றாள். தோழி இப்படிச் சொல்லவே, விபூதிகொண்ட மாது உடனே தன் வீட்டிற்கு வந்து, அந்த விபூதியை அடுப்பில் போட்டு விட்டாள்.

இந்த விஷயம் நடந்த பன்னிரண்டு வருஷத்திற்கப்பால் மச்சேந்திர கோரக்ஷகர் மீண்டும் அவ்வீட்டிற்கு வந்து, அந்த மாதைப் பிக்ஷை கேட்டார். அவள் பிக்ஷை போட வந்தாள். அப்பொழுது மச்சேந்திரர், "நான் பன்னிரண்டு வருஷத்திற்கு முன் உனக்கு மைந்தனுண்டாகும்படி விபூதி தந்தேனல்லவா? அதன்படி உனக்குப் புத்திரனுண்டா யிருக்கவேண்டுமே? அவன் எங்கே? அவனை இங்கே அழைத்து வா. நான் பார்க்க வேண்டும்'' என்றார்.

இதைக் கேட்டதும் அந்த மாது திடுக்கிட்டுப் பயந்து, நடந்ததைச் சொல்லிவிட்டாள். மச்சேந்திரர், "நீ கபட மில்லாதவள். ஆயினும், 'பிறரிடம் சொல்லாதே' என்று நான் கூறிப் போனதை நீ மீறி நடந்தாய்! ஸ்திரீகள் எந்த இரகஸ்யத்தையும் மனத்தில் வைத்துக்கொள்வது இல்லை. அது அவர்களுக்கு இயற்கை'' என்று கூறிப் பின் "இருக்கட்டும். விபூதியை அடுப்பில் போட்டாயல்லவா? அந்த அடுப்புச் சாம்பலை எங்கே கொட்டினாய்? அந்த இடத்தை எனக்குக் காட்டு'' என்று கேட்டார்.

அந்த மாது குப்பை மேட்டைக் காட்டி, "இங்கேதான் நான் அடுப்புச் சாம்பலைக் கொட்டுவது வழக்கம்'' என்றாள். மச்சேந்திரர், அந்தக் குப்பை மேட்டின் மேலேறி, "ஆலக்'' என்று கூப்பிட்டார். அதற்கு மறுமொழியாக அக்குப்பை மேட்டிற்

குள்ளிருந்து "ஆதேஸ்" என்று ஒரு சத்தம் கிளம்பியது. அங்கிருந்தவர்கள் அதைக் கேட்டு ஆச்சரியப்பட்டுக் குப்பை மேட்டைக் கிளறினார்கள். அதனுள்ளே பன்னிரண்டு வயது நிறைந்த ஒரு பாலகர் சாது வேஷத்துடன் தவம் புரிந்து கொண்டிருந்தார். அவர்மீது ஒரு சிறிதும் மண் ஒட்டாம லிருந்தது. அது கண்டு எல்லோரும் வியப்புற்று, மச்சேந் திரரைக் கொண்டாடினார்கள்.

மச்சேந்திரர் அந்தப் பாலகருக்கு அருகே சென்றதும், அவர் தவ நிலையினின்று எழுந்து மச்சேந்திரரை வணங்கி னார். மச்சேந்திரர் அந்தப் பாலகருக்குக் **கோரக்ஷகர்** என்று பெயர் தந்து, அவரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு போய் விட்டார்.

சில காலஞ் சென்றபின் கோரக்ஷகர் மச்சேந்திரரைப் பணிந்து, "ஸ்வாமி, எனக்கு உபதேசம் செய்தருளவேண்டும்" என்று கேட்டார். மச்சேந்திரர், "நீ இப்போது பணிவிடை செய்துவா; பிறகு உபதேசம் செய்கிறேன். பரீக்ஷை செய்யாமல் பெரியோர் மாணவர்களுக்கு உபதேசம் செய்வதில்லை" என்றார். கோரக்ஷகர், "அப்படியே" என்று கூறி, அவரை வணங்கி, அன்று முதல் குருவுக்குப் பயபக்தியுடன் பணிவிடை புரிந்து வந்தார்.

அப்படி யிருக்கையில் ஒரு நாள் மச்சேந்திரர் ஓர் ஊரில் ஒரு மரத்தடியி லிருந்துகொண்டு, கோரக்ஷகரை ஊருக் குள்ளே போய்ப் பிக்ஷை வாங்கிவரும்படி அனுப்பினார். கோரக்ஷகர், வீடு வீடாய்ச் சென்று பிக்ஷை எடுத்தார். அப்போது ஒரு பிராமண ஸ்திரீ பிக்ஷையுடன் சில வடை களையும் போட்டாள். கோரக்ஷகர் கிடைத்த பிக்ஷையைக் கொண்டு வந்து தம்முடைய குருவின் முன் வைத்தார். குரு பிக்ஷையையும் வடைகளையும் புசித்துக் கோரக்ஷகரைப் பார்த்து, "இந்த வடை நன்றாயிருக்கிறது. நாளைக்கும் இதே மாதிரி வடை கொண்டு வா" என்றார். கோரக்ஷகர், "அப்

சிவமயம்



படியே செய்கிறேன்" என்று கூறி, மறு நாளும் ஊருக்குள் பிக்ஷைக்குச் சென்று முதல் நாள் வடை போட்ட பிராமண ஸ்திரீயின் வீட்டு வெளியில் நின்று, "பிக்ஷையுடன் நேற்றைய தினம்போல் வடைகளையும் போடும்" என்று கேட்டார். அந்த அம்மாள், "நேற்று எங்கள் வீட்டில் சமாராதனையாகையால் வடை இருந்தது. உமக்குப் போட்டேன். இன்றைக்கு எப்படி வடை கிடைக்கும்?" என்றாள்.

கோரக்ஷகர், "நான் வடையில்லாமல் இன்றையதினம் பிக்ஷை கொள்ளேன். என் குருநாதருக்கு வேண்டும் அது. ஆதலால், அவருடைய விருப்பத்தை நிறைவேற்றி வையும்" என்றார். அம்மாது, "அது முடியாத காரியம்" என்று கூறி வீட்டிற்குள் செல்லப் பார்த்தாள். கோரக்ஷகர், "நான் கேட்கிற படி வடை போட்டாலொழிய நான் இந்த வீட்டு வாசலை விட்டு அப்பாற் செல்லேன்" என்றார்.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த அந்தத் தெருவினரிற் சிலர், "இவன் வேஷதாரி. நாய்க்கு ஒரு நாள் சர்க்கரைப் பொங்கல் போட்டால், அது மறு நாளும் அதையே கேட்கும். அதுபோ லிருக்கிறது இவன் செய்கை. இவன் நாயினும் கடை கெட்டவன்" என்று கூறி வெறுத்தனர். கோரக்ஷகர், "நான் நாயினும் கடையானவன்தான்! எப்படியும் வடை கொள்ளாமல் இந்த இடத்தைவிட்டு அடி பெயர்த்துச் செல்லேன்" என்றார். அந்த மாது கோபங்கொண்டு "இப்போது நான் எப்படி வடை தரமுடியும்? நீர் இப்போது உமது கண்களைக் கேட்டால் கொடுப்பீரா?" என்று கூறினாள். உடனே கோரக்ஷகர், "இதோ கொடுக்கிறேன் என் கண்ணை" என்று கூறித் தமது கண்களில் ஒன்றைப் பிடுங்கி "இதோ என் கண்" என்று அம் மாதுக்கு முன் நீட்டினார்.

பிராமண ஸ்திரீ அது கண்டு அஞ்சி நடுங்கி, "ஸ்வாமி! ஏழையை மன்னித்தல் வேண்டும்! மன்னித்தல் வேண்டும்!" என்று அவர் காலில் விழுந்து பணிந்தாள். கோரக்ஷகர்

"பயப்படாதே எழுந்திரு! போய் வடை கொண்டுவா" என்ருர். அந்த மாது எழுந்து வீட்டிற்குள் சென்று, பரபரப்புடன் மாவரைத்து, வெகு விரைவில் வடைகளைச் சுட்டுக் கொண்டுவந்து போட்டுக் கோரக்ஷகரை வந்தனத்துடன் அனுப்பினுள்.

கோரக்ஷகர் இழந்த கண்ணை ஒரு சிறு துணியினுல் கட்டிக்கொண்டு பிக்ஷையுடன் குரு ஸந்நிதானத்திற்குச் சென்று, "ஸ்வாமி, தம்முடைய விருப்பப்படி வடையும் பிக்ஷையும் கொண்டு வந்தேன்" என்று கூறிப் பிக்ஷையை அவர் முன் வைத்துக் கரங் குவித்து நின்ருர். மச்சேந்திரர், "இவ்வளவு தாமசமாகக் காரணமென்ன?" என்று கேட்டார். கோரக்ஷகர், "வடைகளுக்காக விழியைக் கொடுத்தேன்" என்று கூறி நடந்ததைத் தெரிவித்தார். குரு, "அப்படியானுல் உன்னுடைய இன்னெரு நேத்திரத்தை எனக்குக் கொடு" என்று கேட்டார். கோரக்ஷகர், "இதோ தந்தேன்" என்று கூறித் தம்முடைய இரண்டாவது நேத்திரத்தையும் பிடுங்கிக் குருவின் திருக்கரத்தில் வைத்துப் பணிந்தார். குரு அவரிடம் பரம சந்தோஷ மடைந்து, அவருக்குத் தாரக மந்திரோபதேசஞ் செய்தருளினுர். உடனே கோரக்ஷகருக்கு முன் போல் கண்க ளுண்டாயின.

இப்படிப்பட்ட மகான்களாகிய இவர்கள் பின்னர்ச் சில காலத்திற் கெல்லாம் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து யாத்திரை செய்யலாயினர். யாத்திரையில் பன்னிரண்டு வருஷம் கழிந்தன. பின் கோரக்ஷகர் தமது குருவைத் தரிசிக்க அவாவுற்று நெடுகலும் தேடிக்கொண்டு தேசங்கடோறுஞ் சென்ருர். அப்பொழுது அவரைக் கண்டு அவரிடம் நட்புக்கொண்ட கானீபா நாதரென்னும் சத்புருஷர் ஒருவர், "மச்சேந்திரர் ஸ்திரீ ராஜ்யத்தி லிருக்கிருர். அங்கே நீர் போவதற் காகாது. அங்குள்ளவர்கள் சாதுக்களையும் யோகிகளையுங் கண்டால் அந்த இடத்திலேயே கொன்றுவிடுகிருர்கள். பிரேமளா

என்னும் ஒரு மாது அந்த நகரை ஆண்டு வருகிருள்" என்று கூறினர். அப்படி அவர் எச்சரிக்கை செய்தும் குருவைக் காணவேண்டுமென்கிற அவாவினல் கோரக்ஷகர் "நான் எப்படியாவது அந்நகர் சென்று குருவைத் தரிசித்தாகவேண்டும்; துணிகரமாய்ச் செல்கிறேன். வருவது வரட்டும்" என்று கூறி, அவரிடம் விடை கொண்டு புறப்பட்டு, நெடுந்தூரம் நடந்து, அந்நகரை யடைந்தார்.

அந்த நகரத்திற்குச் சமீபத்தில் ஒரு வழியின் ஓரத்தில் ஒரு மரத்தடியில் சில பகல் வேஷக்காரர்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைக் கண்ட கோரக்ஷகர், "நீங்கள் யார்? எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார். அவர்கள், "நாங்கள் பகல் வேஷக்காரர்கள். இந் நகரத்திற்குள்ளே சென்று பிரேமளா ராணியைக் கண்டு பரிசு பெறப் போகிறோம். ஆனல் எங்களுடன் வந்த மிருதங்கக் காரனுக்குக் காய்ச்சல் வந்துவிட்டதால், இன்றைக்குச் செல்வதற்கில்லை. நாளைய தினந்தான் போவோம்" என்றார்கள்.

கோரக்ஷகர், "நான் மிருதங்கம் நன்ருய் வாசிப்பேன். அவனுக்குப் பதிலாக நான் வருகிறேன். இன்றே புறப்படுங்கள். இராணியைப் பார்ப்போம்" என்றார். அவர்கள் மிருதங்கத்தை அவர் கையிலே கொடுத்து வாசிக்கச் சொன்னார்கள். கோரக்ஷகர் தாளந் தவருமல் வெகு நன்ருய் வாசித்தார். அதைக் கண்டு அவர்கள் சந்தோஷமடைந்து, உடனே கோரக்ஷகருடன் புறப்பட்டு நகரத்துக்குள் சென்றார்கள். கோரக்ஷகர் தம்முடைய ஆசாரியரைக் காண அவாக்கொண் டிருந்தமையினல் மிருதங்கக்காரரைப்போல் வேஷம் பூண்டு, அந்த வேஷதாரிகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதைச் சிறுமையாய் எண்ணவில்லை.

பிறகு அவர்கள் அந்நகர இராணியைக் கண்டு தங்கள் வித்வத் சாமர்த்தியத்தைக் காட்டினர்கள். அப்பொழுது பிரேமளா ராணியை அவளுடைய பரிஜனங்கள் சூழ்ந்திருந்தார்கள்.

அவளுக் கருகே மச்சேந்திரரும் வீற்றிருந்தார். கோரக்ஷகர் மச்சேந்திரரைக் கண்டுகொண்டு, மனத்திற்குள் பரமானந்த மடைந்தவராய் வெகு சாதுரியமாய் மிருதங்கம் வாசித்தார். அப்படி வாசிக்கும் போது அந்த மிருதங்கம், "கோரக்ஷகன் இவ்விடம் வந்திருக்கிறான்! வந்திருக்கிறான்!" என்று தொனிக் கும்படி கைலாகவத்தைத் திருப்பினர். அதை யறிந்த மச்சேந்திரர், "ஓ என்னுடைய மாணவன் வந்திருக்கிறான்!" என்று கூறிக்கொண்டே இருப்பிடத்தை விட்டெழுந்து கோரக்ஷகரைத் தேடினர். சற்றுத் தேடியதும் மிருதங்க மடிப்பவனாய் வந்திருக்கும் சுந்தர புருஷரே கோரக்ஷகர் என்று கண்டு கொண்டு கோரக்ஷகரிடம் சென்று, அவரை அணைத்துத் தழுவிக்கொண்டார்.

கோரக்ஷகர் உடனே மிருதங்கத்தைக் கீழே வைத்து விட்டுத் தம் குரு நாதரைப் பணிந்தார். பிறகு இருவரும் ஏகாந்த ஸ்தலத்திற்கு எழுந்தருளி வெகுநேரம் பேசிக்கொண் டிருந்தனர். அப்பொழுது மச்சேந்திரர், "நான் உலக முழு தும் யாத்திரை செய்து திரும்புகையில் இந்தப் பிரேமளா ராணியைக் காண நேரிட்டது. இவள் என்னைத் தன் வசப் படுத்திக்கொண்டமையால், நான் இவ்விடத்தை விட்டுச் செல்ல இயலாமல் இங்கிருந் துழல்கின்றேன். இவள் ஒரு புத்திரனை அடைந்திருக்கிறாள். நான் 'என் மாணவன் வரும் வரையில் தான் இவ்விடமிருப்பேன். வந்தபின் இவ்விடம் நான் இருக்க மாட்டேன்' என்று இவளிடம் கூறினேன். இவளும் சம்மதித் தாள். அதன் பிறகே இவள் இந்த ராஜ்யத்துக்குள் சாதுக்கள் எவரேனும் பிரவேசித்தால் அவர்களைக் கொல்லும்படி ஆக்ஞை செய்திருக்கிறாள். நீ இவ்விடம் எப்படி வந்தாய்?" என்று கேட்டார்.

கோரக்ஷகர், தாம் அவ்விடத்திற்கு வந்த விதத்தைக் கூறி, "ஸ்வாமி, நான் தன்யனானேன்" என்றார். அப்பால் மச்சேந்திரர் சபைக்கு வந்து வேஷதாரிகளுக்கு வெகுமதி தந்

தனுப்பும்படி இராணிக்குச் சொல்ல அவளும் அப்படியே செய் தாள். அவளுக்கு மச்சேந்திரர் தமது சிஷ்யருடைய பெரு மையை எடுத்துக் கூறி, "நாம் இவனை நமது பணி விடைக்கு வைத்துக் கொள்வோம்'' என்று தெரிவித் தார். அதற்கு இராணி அரை மனதாய்ச் சம்மதந் தந்தாள். 'கோரக்ஷகர் வந்ததும் உன்னை விட்டுப் பிரிவேன்' என்று இராணியிடம் கூறிய மச்சேந்திரர், இப்பொழுது அவளையும் தமது புத்திரனையும் விட்டுப் பிரிய மனமில்லாதவரா யிருந்தார். இந்த எண்ணத்தை யறிந்த கோரக்ஷகர், அவரை எப்படியாவது அந்த இடத்தைவிட்டுப் பிரிக்கத் தீர்மானித்துச் சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு அவர் செய்யச் சொல்லும் பணிவிடை களைச் செய்துகொண் டிருந்தார்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் இரவில் குருவின் புத் திரன் மலோபாதைக்கு வருகிறதென்று கூறினான். குரு கோரக்ஷகரை அழைத்து, "இவனை மல விசர்ஜனம் செய்யக் கொண்டுபோய் விட்டு மறுபடியும் அழைத்து வா'' என்றார். கோரக்ஷகர் உடனே அந்தப் பிள்ளையை வெளியே அழைத்துக் கொண்டுபோய் உட்காரவைத்து, "அடே, நீ ஜல விசர்ஜனம் செய்யாமல் மல விசர்ஜனம் செய்யவேண்டும். அப்படிச் செய்ய வில்லை யானால் உன் காதை அறுப்பேன்'' என்று பயமுறுத்தி னார். பையன் பயந்து மல விசர்ஜனம் செய்யாமல் எழுந்துவிட் டான். கோரக்ஷகர் அவனைக் கொண்டுபோய் மச்சேந்திரரிடம் விட, அவன் அழுதுகொண்டே பயத்தினால் அவருடைய அறையில் மல விசர்ஜனம் செய்துவிட்டான். மச்சேந்திரர் கோரக்ஷகரை அழைத்து, "இவன் இங்கே மல விசர்ஜனம் செய்துவிட்டான். இவனைக் கொண்டுபோய் நன்றாய்க் கால் கழுவி அழைத்து வா'' என்றார்.

கோரக்ஷகர் அந்தப் பையனைத் தூக்கிக்கொண்டு போய் ஜலத்திலே நனைத்து ஒரு பாறையில் அடித்துக் கொன்று அவ னுடைய சர்மத்தை ஒரு பக்கத்தில் உலர்த்திவிட்டு மச்சேந்

திரரிடம் வந்தார். மச்சேந்திரர் "பைய னெங்கே?" என்று கேட்க, கோரக்ஷகர் "அவனை ஜலத்திற் போட்டு நன்றாய்க் கழுவி அழுக்ககலப் பாறையில் தோய்த்து உலர்த்தி யிருக் கிறேன்" என்றார்.

இதைக் கேட்டதும் மச்சேந்திரரும் அவர் மனைவியாகிய இராணியும் "ஆ!" என்றலறிக் கீழேவிழுந்து மூர்ச்சையாயினர். பின் அவர்கள் சற்று நேரத்திற்கெல்லாம் மூர்ச்சைதெளிந்தனர். அதற்குள் கோரக்ஷகர் அந்தப் பிள்ளையைப்போல் நூற்றெட்டுப் பிள்ளைகளைத் தமது தபோ மகிமையினால் சிருஷ்டித்துத் தமது மகிமையைக் காட்டினார். அந்த அற்புதத்தைக் கண்ட இராணி கோரக்ஷகரை வணங்கி, "ஐயா, உமது மேலான வித்தையை மறைத்து என்னுடைய பிள்ளையை எனக்குக் கொடும்" என்று வேண்டிக்கொண்டாள். கோரக்ஷகர் அவ ளுடைய வேண்டுகோளுக் கிரங்கி நூற்றேழு பிள்ளைகளையும் மறைத்து ஒரு பிள்ளையை இராணிக்குக் கொடுத்தருளினார்.

அப்பால் கோரக்ஷகர் மச்சேந்திரரை அவ்விடத்தை விட் டுப் புறப்படும்படி அழைத்தார். மச்சேந்திரர், தமக்கு விடை தரும்படி இராணியைக் கேட்டார். இராணி, "ஐயோ! நான் எப்படி உம்மை விட்டுப் பிரிந்து இங்கு உயிரோடிருப்பேன்!" என்று கதறினாள். மச்சேந்திரர், அவளுக்கு வேண்டிய தேறு தல்களைக் கூறி, அவ்விடம் விட்டுப் புறப்பட்டார். இராணி அவருடைய ஜோல்னாவில் அவருக்குத் தெரியாமல் சில சொர்ணக் கட்டிகளை வைத்து வணங்கிப் பெருந்துயரத்துடன் விடைகொடுத் தனுப்பினாள்.

கோரக்ஷகரும் மச்சேந்திரரும் அந்த ஊரை விட்டுப் புறப்பட்டு வெகுதூரம் நடந்து சென்றபின், ஒரு கானகத்தை அடைந்தார்கள். அங்கே போய்ச் சேர்ந்ததும் மச்சேந்திரர், "இங்கே திருட்டுப் பயமுண்டோ?" என்று கேட்டார். கோரக்ஷகர், "ஸ்வாமி, எல்லாவற்றையும் துறந்து வெளிப்

பட்டுள்ள நமக்கு இந்த இடத்தில் பயமென்ன?'' என்று கூறிப் பெருமகிழ்ச்சியுடன் நடந்தார்.

பின் இருவரும் ஒரு குளக் கரையை அடைந்தனர். அங்கே போனதும் மச்சேந்திரர் தமது ஜோல்னுவைக் கரையின் மீது வைத்துவிட்டுக் கை கால் கழுவி, நீரருந்திவரக் குளத்தில் இறங்கினர். அப்பொழுது கோரக்ஷகர் அவருடைய ஜோல்னுவைத் திறந்து அதிலிருந்த சொர்ணக் கட்டிகளை எடுத்துக் குளத்தி லெறிந்துவிட்டு, அவற்றிற்குப் பதிலாகக் கற்களை அதிற் போட்டுக் கட்டிவிட்டார். இந்தச் சூழ்ச்சியை யறியாத மச்சேந்திரர் நீரருந்தி மேலே வந்ததும் ஜோல்னுவைத் தூக்கி மேலே போட்டுக் கொண்டு, கோரக்ஷகருடன் நடந்து வெகு தூரம் சென்ரூர். மனித சஞ்சாரமே இல்லாத ஒரு காட்டிற்குள் இருவரும் பிரவேசிக்கையில் மச்சேந்திரர், "இங்கே திருடரிருப்பார்களோ?'' என்று கூறிப் பயந்தார். அதைக்கேட்ட கோரக்ஷகர் "ஸ்வாமி, அந்தப் பயம் குளத்தங் கரையிலேயே போய்விட்டது'' என்ரூர். பின் மச்சேந்திரர், தமது ஜோல்னுவைத் திறந்து பார்த்தார். அதில் சொர்ணக் கட்டிகளுக்குப் பதிலாகக் கற்களிருக்கக் கண்டு "அடே கோரக்ஷகா! என்ன காரியமடா செய்தாய்? வழிச் செலவிற்கு என்ன செய்வது?'' என்று கூறி வருந்தினர்.

கோரக்ஷகர் உடனே தம்முடைய கையினுல் அங்கிருந்த ஒரு பெரிய கல்லைத் தடவினர். தடவிய மாத்திரத்தில் அது அப்படியே பெரிய பொன்கட்டியாய் விட்டது. மச்சேந்திரர் அது கண்டு ஆச்சரியமடைந்தார். கோரக்ஷகர், "ஸ்வாமி, இது தேவரீருடைய திருவடிப் பிரபாவமாகும்'' என்று வணங்கினர்.

மச்சேந்திரர் வணங்கிய மாணவனை ஆசிர்வதித்து, "உன்னுடைய அற்புத மகிமைகளை உலகத்தாரறியவே இவ்வாறெல்லாம் செய்தோம்'' என்று கூறினர். பின் இருவரும் சுயேச்சையாய் நெடுகலும் சென்று தம்மை அடுத்தவர்க்கு ஆன்ம

லாபத்திற்குரிய உபதேசங்களைச் செய்துகொண்டு சுகமா யிருந்து முடிவில் பகவானுடைய திருவடி நீழலை யடைந்தனர்.

---

## 18. சமர்த்த ராமதாஸர் சரித்திரம்

கோதாவரி நதிக்கு அருகே குருஜாம்ப க்ஷேத்திர மென்று ஒரு க்ஷேத்திரமுண்டு. அந்த க்ஷேத்திரத்தில் ஒரு பிராமணரிருந்தார். அவர் மகாவிஷ்ணுவினிடம் இடைவிடாத பக்தி செலுத்தும் உத்தமராயிருந்தது மல்லாமல் கிராமக் கணக்கு வேலையும் பார்த்து வந்தார். பகவானுடைய கிருபை யால் அவருக்கு இரண்டு புதல்வர்கள் பிறந்தார்கள். மூத்தவனுக் குக் கங்காதரன் என்று பெயர்; இளையவனுக்கு நாராயணன் என்று பெயர். மூத்தவன் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியினிடம் பக்தி செலுத்தும் பாகவத சிரோமணியானன். இளையவன் ஏழு வயதாவதற்குள் சகல கலைகளையுங் கற்று மகா மேதாவியா னன். ஆனல் அவன் குரங்கைப்போல் சேஷ்டைகள் பல செய்து வந்தான். அதற்கேற்பப் பின்புறம் அவனுக்குச் சிறு வாலு மிருந்தது.

இப்படியிருந்த அவன் ஒரு நாள் தானியக் குதிரி னுள்ளே ஒளிந்துகொண்டான். அவனை அவன் தாய் தந்தை யர் நெடு நேரம் வரையில் வீட்டிலும் வெளியிலும் தேடிப் பார்த் துக் கடைசியில் குதிரிலிருக்கக் கண்டு கோபித்துக்கொண்டு "வெளியே வா" என்றனர். அவன், "நான் வெளியே வர மாட் டேன். ஸம்ஸார ஜனங்களைப் பார்க்க எனக்குப் பிரியமில்லை" என்றான். அவனுடைய தந்தை அதைக் கேட்டதும், "இவன் பெரியவனானல் வெகு சமர்த்தனாவான்" என்றார். நாராயணன், "சமர்த்தனாவா னென்றால் என்ன?" என்று அன்னையைக் கேட்டான். அந்த அம்மாள், "விசேஷமாகத் தானியத்தை எவன் தேடி வீட்டிற்குக் கொண்டுவருவானே அவனே சமர்த் தன்" என்றாள்.

இதைக் கேட்டதும் அந்தப் பையன் குதிரிலிருந்து வெளிக்கிளம்பி "இதோ ஓடிப் போய்த் தானியம் கொண்டு வருகிறேன்" என்று கூறிக்கொண்டே வெளியே ஓடி ஒரு நெற்களத்தை யடைந்து, அங்கே ஒருவன் சாக்கில் கட்டிப் போட்டிருந்த நெல் மூட்டைகளில் ஒரு மூட்டையைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு வீட்டிற்கு வந்தான். சிறு பையன் பெரிய சாக்கு மூட்டையைத் தூக்கிச் செல்வதைக் கண்டு எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். தானியத்திற்குச் சொந்தக்காரன் மாத்திரம் ஆச்சரியத்துடன் அவனைத் தொடர்ந்தே சென்றான்.

நாராயணன் வேகமாக வந்து வீட்டில் மூட்டையைப் போட்டு விட்டு, "அம்மா, தானிய மூட்டை கொண்டுவந்தேன். பாருங்கள்" என்று கூறிக் குதித்து ஆநந்தமடைந்தான். மூட்டைக்காரன், நாராயணனுடைய தாயாரிடம் நடந்ததைச் சொல்லி மூட்டையைக் கேட்டு வாங்கிப் போய்விட்டான். அவன் மூட்டையைக் கேட்டு வாங்கிப் போனதும் மறு நிமிஷமே அங்கே அதேபோல் வேறொரு மூட்டை யிருக்கக் கண்டு யாவரும் ஆச்சரியப்பட்டு நாராயணனைப் புகழ்ந்தார்கள்.

இப்படியிருந்த நாராயணனுக்கு விவாக நிச்சயமாயிற்று. அப்பொழுது சில பிள்ளைகள் "உனக்கு இனி ஸம்ஸார பந்த மென்கிற விலங்கு பூட்டப்படும்" என்று கூறி நாராயணனைப் பரிகசித்தார்கள். அதனால் நாராயணன் வெட்கமுற்று ஒருவருடனும் சொல்லாமல் வீட்டைவிட்டுப் புறப்பட்டு எங்கேயோ ஓடிப்போய் விட்டான். தாய் தந்தையர் அவனை நெடுகலும் தேடினார்கள்; ஆள் வைத்தும் தேடிப் பார்த்தார்கள். அவன் எங்கும் அகப்படவில்லை. அதனால் அவர்கள் பெருந் துயரத்திற்குள்ளாய்த் தவித்தார்கள். கங்காதரன் அவர்களை நோக்கி, "தம்பி மாருதியின் அம்சமாய் வந்தவன். இது நிச்சயம். அதனாலேதான் அவன் விவாகத்தை வெறுக்கிறான். அவனுக்காக நீங்கள் விசனப்பட வேண்டாம். அவன் உலகத்

தில் வேறெவரும் செய்தற்கரிய செய்கைகளைச் செய்து சிறப் படைவான். அவனுக்கு அநேக மாணவர்கள் ஏற்படுவார்கள். அவன் நித்தியானந்த புருஷனுய் விளங்குவான்" என்று கூறித் தேற்றினுன்.

அப்பால் அவர்கள் கவலையின்றி "ஸ்ரீ ராமபிரானே குழந் தையைக் காப்பாற்றக் கடவர்!" என்று வாழ்த்தி மனச் சமா தானத்துட னிருந்தார்கள். வீட்டைவிட்டு ஓடின நாராயணன் ஜன சஞ்சாரமே யில்லாத காட்டிற்குச் சென்று ஓரிடத்தில் அமர்ந்து மாருதியைத் தியானித்தான். மாருதி அவன் முன்னே தோன்றி, அவனைப் பஞ்சவடிக் கழைத்துச் சென்று, அங்கே ஸ்ரீராமபிரா னுடைய தரிசனம் செய்து வைத்தார். ஸ்ரீராம பிரான் அவனுக்குத் தாரக மந்திரோபதேசம் செய்து "உனக்கு இனி ஸ்ரீராமதாஸர் என்று பெயர் வழங்கக்கடவது. நீ உலகத் திற்கு இதஞ்செய்து பேரும் புகழும் பெறுவாய்" என்று வர மளித்து மறைந்தார்.

அப்பால் ஸ்ரீராமதாஸர் ஸ்ரீராமபிரானைத் துதித்துக் கொண்டே மாருதியுடன் சென்றுர். மாருதி அவரை டாகிலி என்னும் கிராமத்திற்கு அழைத்துக்கொண்டு போய் அங்கே ஸ்ரீராமதாஸருக்கு ஸ்ரீராம சரித்திரத்தை விளக்கமாகக் கூறி மகிழ்வித்துப் பின் மறைந்தார். அது ஹநுமத் ராமாயண மென்று பெயர் பெற்றது. ஸ்ரீராமதாஸர் அதனைப் பகற் காலத் திலே வாசிப்பார்; இரவில் கதா ரூபமாக ஜனங்களுக்கு விளக்கி யருள்வார்.

ஸ்ரீராமதாஸர் இப்படி ஸ்ரீராம மகிமைகளை அவ்வூரார்க் குப் போதித்துக்கொண் டிருந்து, அப்பால் வனத்திற்குச் சென்று பிசாசைப்போல் அலைந்துகொண் டிருந்தார். அப் பொழுது அவர் அநேக துஷ்ட மிருகங்களுக்கு நடுவில் அஞ்சா மலிருந்து ஆநந்தக் கூத்தாடுவார். மிருகங்களும் அவரை ஒன் றுஞ் செய்யாமல் அவரைச் சூழ்ந்து நின்றுகொண் டிருக்கும். அடிக்கடி அவர், "ஸ்ரீ ராமா, நீயே என் தந்தை! என் தாய்!

என் சுற்றம்! என் நாதான்! என் குரு! என் நண்பன்'' என்று பாடி மகிழ்வார்; வேறெதிலும் சிந்தையற் றிருப்பார்.

இப்படியிருக்கும் ஸ்ரீராமதாஸரை அக்காட்டிற்கு வேட்டையாட வந்த சிவாஜி மகாராஜன் கண்டு, அவரைச் சரண மடைந்து "என்னைப் பகவானுடைய திருவருளுக்குப் பாத்திர வானுக்கவேண்டும். அடியேனுடைய இராஜ்யம் தேவரீருடைய தே!'' என்றான். ஸ்ரீராமதாஸர் அவ்வரசனுடைய மனோ நிலையை அறிந்து, அவனுக்கு ஸ்ரீராம தாரக மந்திர உபதேசம் செய்து ஸங்மார்க்கத்தி லிருக்கப் பணித்தார்.

அரசன் நாடோறும் நகரத்திலிருந்து வந்து அவரை வணங்கி, அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துவிட்டுச் செல்வான். இப்படி அரசனிருப்பதை அறிந்த நகரத்து ஜனங்களும் ஸ்ரீராமதாஸரைத் தரிசிக்கத் தினந்தோறும் ஏராளமாக வரத் தலைப்பட்டனர். பின் ஸ்ரீராமதாஸர் அந்த வனத்தை விட்டு வேறொரு வனத்திற்குச் சென்று, அங்கே பிசாச விருத்தியை அவலம்பித்து மரத்தின் மேலேறிக் குதிப்பதும் தாவுவதுமா யிருந்து விநோதமான கிரீடைகள் செய்து சில காலங் கழித்தார்; அப்பால் ஊருக்கருகே வந்து சிறு பிள்ளைகளுடன் கூடி விளையாடினர். அப்பொழுது ஒரு நாள் ஒரு பையன் அடித்த புள் ஸ்ரீராமதாஸரின் நெற்றியிலே பட அதனால் அவர் கீழே விழுந்து இறந்துபோனவர் போலப் படுத்திருந்தார். பிள்ளைகள் அவர் இறந்துவிட்டதாகவே யெண்ணி "இதனை இதரர் அறிந்தால் நம்மைத் தண்டிப்பார்கள்'' என்று பயந்து அங்கேயே ஒரு பள்ளந் தோண்டி அதில் அவரைப் புதைத்து விட்டுத் தங்கள் வீட்டிற்குப் போய்விட்டார்கள்.

ஸ்ரீராமதாஸர் இவ்வாறு புதையுண்டதை அறியாத சிவாஜி அவரை ஆரண்யங்கடோறும் ஆட்களைவிட்டுத் தேடித் தேடி அலுத்துப் பெருந்துயருமுற்று, "என் குரு நாதரைத் தரிசித்த பின்புதான் நான் புசிப்பேன்'' என்று வைராக்கியங் கொண்டு ஒன்றிலும் பற்றற்றிருந்தான்.

அரசன் அப்படி விரத மேற்கொண்ட மூன்று நாட்களுக்கெல்லாம், ஒரு பையன் அவ்வூரான் ஒருவனிடம் ஸ்ரீராமதாஸர் புதைக்கப்பட்டதை விவரமாய்த் தெரிவித்துவிட்டான்; அவன் ஆச்சரிய முற்று அதனைப் பிறகு பலருக்கும் வெளியிட்டான். அப்படியே அச்செய்தி நகரமெங்கும் பரவவே, அவர்களிலே சிலர் ஒன்று கூடி "இச்செய்தி அரசனுக்குத் தெரியப்படாது. தெரிந்தால் அரசன் நம்முடைய பிள்ளைகள் செய்ததைக் குற்றமா யெண்ணி நம்மைத் தண்டிப்பான்" என்று அஞ்சி, ஸ்ரீராமதாஸரைத் தகனஞ் செய்துவிடத் தீர்மானித்து, அவரைப் புதைத்திருந்த இடத்திற்கேகி மண்ணை வெட்டி எடுத்தார்கள். எடுத்தவளவில், ஸ்ரீராமதாஸர் எல்லோரும் திடுக்கிட எழுந்திருந்து, வனத்தை நோக்கி ஓடிவிட்டார்.

இச்செய்தி யறிந்த அரசன் அவரைத் தேடிக்கொண்டு வனஞ் சென்றான். ஸ்ரீராமதாஸர் வனத்தில் அரசனுக்குமுன் தாமே தோன்றி நின்று, அவன் பயபக்தியுடன் செய்த உபசரணைகளைப் பெற்றுக்கொண்டு அவனைச் சந்தோஷப்படுத்தி யனுப்பினர்.

அப்பால் ஸ்ரீராமதாஸருடைய மகிமையை அறிந்த ஜயராமர் என்னும் பாகவதர் அவரைச் சரணமடைந்து அவருடன் சிலகாலம் வசித்து அவர்தம் கருணைக்குப் பாத்திரராய் உபதேசம் பெற்றார். அதன்பின் அவரை ஒரு நாவிதன் வந்தடுத்து அவருக்குப் பணிவிடைகள் புரிந்துகொண் டிருந்து அவருடைய அநுக்ரகம் பெற்றான்.

இப்படிச் சில வருஷகாலங் கழிந்தபின் ஒரு நாள் ஸ்ரீராமதாஸர் தம்முடைய நாவித மாணவனுடன் புறப்பட்டுச் சிவாஜி மன்னனைக் காண நகரத்தை நோக்கி வந்துகொண் டிருந்தார். வழியில் ஒரு காட்டில் சோளம் செழிப்பாய் வளர்ந்து நல்ல கதிர்கள் விட்டிருந்தன. அதைக் கண்ட நாவிதன், ஸ்ரீராமதாஸரை நோக்கி, "இந்தச் சோளக் கதிரில் நான்கு கொண்டு

வருகிறேன்; புசிக்கலாம்'' என்று கூற, ஸ்ரீராமதாஸர், "வேண்டாம். சீக்கிரத்தில் அரண்மனையை அடைந்துவிடுவோம். அங்கே போய் உணவெடுத்துக் கொள்ளலாம்'' என்று கூறித் தடுத்தார்.

நாவிதன் அவர் தடுத்தும் கேளாமல் காட்டில் நுழைந்து நான்கு கதிர்களைப் பறித்தெடுத்துக்கொண்டு ஸ்ரீராமதாஸரிடம் வந்தான். அது கண்ட அந்தக் காட்டுக் காவலாளி ஓடி வந்து நாவிதனை அடித்ததுமல்லாமல், ஸ்ரீராமதாஸரையும் அடித்துவிட்டான். ஸ்ரீராமதாஸர் தம் முதுகில் அடிபட்ட போது நகைத்தார். அதைக் கண்ட காவலாளி, "யாரோ பக்தரை அடித்துவிட்டோம்'' என்று கருதி வருத்தமுற்று ஸ்ரீராமதாஸரை வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு சென்றான். தன்னால் அப்படிப்பட்ட தண்டனை தன் குருவாகிய ஸ்ரீராமதாஸருக்கு ஏற்பட்டதை யெண்ணி நாவிதன் வருந்தினான்.

ஸ்ரீராமதாஸர், "சிஷ்ய, ஸ்ரீராம பக்தர்கள் மான அவமானங்களைப் பாராட்டமாட்டார்கள். ஒருவன் தம்மை அடித்தாலும் வைதாலும் அவை தமக்கல்லவென் றிருப்பார்கள்'' என்று கூறி அவனுடைய வருத்தத்தை மாற்றினார்; அப்பால் அவனுடன் வழி நடந்து அரசனுடைய அரண்மனை போய்ச் சேர்ந்தார். அரசன் அவருக்குச் செய்யவேண்டிய ஆசார உபசாரங்களைப் பயபக்தியுடன் செய்து பணிந்தான்.

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், நாவிதன் மெதுவாய் அரசனிடம் சோளக் கொல்லைக் காவல்காரன் வழியில் தங்களை அடித்ததைச் சொல்லிவிட்டான். அரசன் சோளக் கொல்லைக் காவலாளியின்மீது சினங்கொண்டு அவனை உடனே சபைக்கு வரவழைத்தான். ஸ்ரீராமதாஸர், அப்போது அரசனைப் பார்த்து "இவன் என்னை அடித்தது குற்றமல்ல; எனக்குப் பொறுமையிருக்கிறதா இல்லையா என்று பார்த்தான். ஆதலினால், இவனுக்கு இவன் உழுது பயரிடும் பூமியை இனாம் பூமியாக்கி விட வேண்டும்'' என்று கூறினார். அரசன் அது கேட்டு ஆச்

சரியமடைந்து அவ்வாறே காவலாளிக்குப் பூமியை இனமாய் அளித்து அவனை மகிழ்வித்தான்.

இதன்பின் ஸ்ரீராமதாஸர் சில நாட்கள் அரசனரண்மனையிலிருந்து அப்பால் நாவிதனுடன் ஆரண்யத்திற்குப் புறப்பட்டார். அரசன் அவரைப் பல்லக்கில் ஏற்றிவைத்து அழைத்துக்கொண்டு போய் அவர் விரும்புமிடத்தில் அவரை விட்டு அவருடன் அன்றிரவு தங்கினன். மறு நாள் பொழுது புலர்ந்ததும் எழுந்து பார்க்கையில் ஸ்ரீராமதாஸரை அவ்விடம் காணாமல் அரசன் வருத்தமுற்று நெடுகலுந் தேடி அவரைக் கண்டு பிடித்து அவர்க்குச் சேனைகளையும் பொருள்களையும் ஏராளமாகக் கொடுத்து, "தேவரீர் புண்ணிய ஸ்தலங்களில் தான தருமங்களைச் செய்வதற்கும் உலகம் தேவரீருடைய மேன்மையைக் கொண்டாடி நல்வழிப் படுவதற்கும் இவைகளைத் தந்தேன்! அங்கீகரித்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தான். ஸ்ரீராமதாஸர் "அப்படியானல் உன் இஷ்டம்" என்று கூறி அரசனை விடைதந் தனுப்பி அவ்விடம் விட்டுப் புறப்பட்டார்.

ஸ்ரீராமதாஸர் வழி நெடுக அநேக சாதுக்களுக்கு அன்னமிட்டுக்கொண்டும் தான தருமங்களைச் செய்து கொண்டும் மனம்போனபடி சஞ்சரித்துக்கொண் டிருந்தார். ஒரு நாள் அவர் தமது வழக்கப்படி கையில் வில்லை எடுத்துக்கொண்டு வில்லில் மண்ணுருண்டை வைத்து ஒரு மரத்திலிருந்து இலைகளை அடித்து வீழ்த்தி அதில் மகிழ்ந்துகொண் டிருந்தார். அப்பொழுது ஓர் உருண்டை ஒரு குருவியின்மேல் பட, அது சிறகை உதறிக்கொண்டு கீழே விழுந்து இறந்துவிட்டது. அது கண்ட ஸ்ரீராமதாஸர் துக்கப்பட்டு அதனைக் கரத்தில் எடுத்து ஸ்ரீராமா என்று தடவினர். தடவிய வளவில் அது உயிர் பெற்று யாவரும் ஆச்சரியப்படப் பறந்து ஓடிப் போயிற்று.

இப்படி ஸ்ரீராம நாம மகிமையை உலகுக்கு உணர்த்தியருளிய ஸ்ரீராமதாஸர், பின் அநேக புண்ய ஸ்தலங்களுக்குச்

சென்று அப்பால் தம்முடைய தாய் தந்தையர் வசிக்கும் ஊருக்குப் போய்ச் சேனைகளுடனும் ஆடம்பரங்களுடனும் இறங்கினர். அவர், தங்களூர்க் கணக்கப்பிள்ளையின் மகன் என்றறிந்த சிலர் ஆச்சரியப்பட்டு ஓடி, "உம்முடைய பிள்ளை, ஸ்ரீராமதாஸர் என்னும் பெயருடன் வேந்தனுக்குக் குருவாக விளங்குகிறன். இங்கு வந்திருப்பவன் அவன்தான்" என்று சொல்லத் தாய் தந்தையர் மகனைப் பார்க்க ஆவல் கொண்டனர். அதையறிந்த ஸ்ரீராமதாஸர் அவர்கள் புறப்பட்டுத் தம்மிடம் வருமுன் தாமே பாதசாரியாக அவர்களிருக்கும் வீட்டிற்குச் சென்று அவர்களுடைய பாதம் பணிந்து அவரைப் பூஜித்து அவர்தம் ஆசீர்வாதம் பெற்று, அவர்களுடன் மூன்று நாட்களிருந்து, பின் அவர்களையுமழைத்துக்கொண்டு அவ்விடமிருந்து புறப்பட்டுச் சத்ரா நகரம் போய் அங்கே வேந்தனைக் கண்டு தமது தாய் தந்தையர்களை அவனுக்குக் காட்டினர்.

வேந்தன், தன் குருவின் தாய் தந்தையர்களைக் கண்டதும் தன் தாய் தந்தையர்களைக் கண்டதுபோலவே எண்ணி, அவர்களை வணங்கி வேண்டிய உபசரணைகளைச் செய்து, பொன்னும் பூஷணமும் ஏராளமாகக்கொடுத்து மகிழ்வித்தான். ஸ்ரீராமதாஸர் அரசனுடைய வேண்டுகோளுக் கிணங்கிச் சில நாட்கள் அங்கேயே இருந்து பின் வனத்திற்கேகத் தமது தாய் தந்தையரிடமும் அரசனிடமும் விடை கொண்டார். தாய் தந்தையர் அவரை மனமார்ந்த அன்புடன் விடைகொடுத் தனுப்பித் தங்களிருப்பிடம் சென்றனர். அரசன் அவர்களுக்குச் சகல சௌகரியங்களையும் செய்து வந்தான்.

ஸ்ரீராமதாஸர் வழக்கம்போல் வனத்திற்கேகி அங்கே ஸ்ரீராமபிரானைத் தியானித்தபடி சஞ்சரித்துக்கொண் டிருந்தார். அப்பொழுது தம்மிடம் மாணவனாக வந்த ஒருவன் கிணற்றில் விழுந்து இறந்துவிட்டான். அவனை அவர் ஏழாவது நாள் பிழைத்தெழும்படி செய்தார். அப்பால் இன்னொரு

மாணவனுக்கு ஞான உபதேசஞ் செய்து அவனை ஸம்ஸார பந்தத்தினின்றும் விடுவித்தார்.

இப்படி ஸ்ரீராமதாஸர், ஸ்ரீராம பிரபுவின் மகிமையை எங்கும் பரவச் செய்துகொண்டு தம்மை அடுத்த சிஷ்யர்களுக் கெல்லாம் முத்திமார்க்கத்திற் குரிய ஞான உபதேசங்களைச் செய்து பரம உபகாரியாக விளங்கினார்; முடிவில் ஜய ரகுவீரா என்று கூறிச் சரீரத்தை விட்டுச் சொரூபத்தில் லயமானார்.

---

## 19. துகாராம் சரித்திரம்

துகாராம் வைசிய குலத்திலே அவதரித்தார். அவரு டைய தாய் தந்தையர் சிறு வயதிலேயே காலமாய் விட்டபடி யால் குடும்பத்தைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு ;அவர்க் கேற்பட்டு, வியாபாரத்தில் திரவியந்தேடலானார். துகாராம் பரம பக்த சிரோமணியாதலால் சதா காலமும் பகவானிடத்தில் மனத்தைச் செலுத்தியவராய் வியாபாரத்தை அதிகமாய்க் கவ னியாமலிருந்தார். அதனால் வருவாய் குறைந்துபோய்க் கஷ்டம் மேலிட்டது. அப்பொழுது, அவருடைய நண்பர்கள் வந்து, "நீ வியாபாரத்தில் ஸத்தியமாய் நடக்கிறாய்! அதனாலேதான் உனக்கு வருவாய் குறைந்துவிட்டது. அன்றியும், நீ எப்போ தும் ஸ்ரீஹரியைத் தியானித்தவண்ண மிருக்கிறாயே யொழிய வியாபாரத்தைக் கவனிப்பதில்லை. இப்படியிருந்தால் நீ உன் ஜன்மத்தில் நல்ல ஸ்திதிக்கு வரமாட்டாய்" என்று கூறி னார்கள்.

துகாராமர் அவர்களுடைய உபதேசத்தைக் கவனியாமல் பகவானையே சரண மடைந்து, அவருடைய திருவடியையே துணையாக நம்பி யிருந்தார். அப்படியிருக்கையில், ஒரு நாள் அவர் எருதின்மேல் சரக்குகளை ஏற்றிக்கொண்டு சில வியா பாரிகளுடன் வேறோர் ஊருக்கு வியாபாரம் செய்யச் சென்றார். போகும்போது வழியில் அவர், "ஸ்ரீகிருஷ்ணா, வாசு தேவா,

ஸ்ரீராமா" என்று பகவானுடைய நாமங்களைப் பலமாக உச்சரித்துக்கொண்டே கவலை யின்றிச் சென்றார். அதனால் ஏனைய வியாபாரிகள் அவரிடம் வெறுப்புற்றுத் தங்கள் எருதுகளை வேகமாக ஓட்டிக்கொண்டு முன்னே போய்விட்டார்கள்.

துகாராமர் மாத்திரம் தனியே தமது எருதை ஓட்டிக் கொண்டு செல்கையில், வழியிலிருந்த ஒரு பள்ளத்தில் அது விழுந்துவிட்டது; எருதின் மேலிருந்த சரக்கு மூட்டையும் கீழே விழுந்துவிட்டது. எருதைக் கரையேற்றி மூட்டையைத் தூக்கி யெடுத்து அதன்மேல் வைக்கச் சக்தியற்றவராய், "அந்தோ! என்ன செய்வது!" என்று திகிலடைந்து, பகவானைத் துதித்தார். பரம பக்தராகிய அவர்பால் இரக்கங் கொண்ட பகவான் அவ்விடத்தில் ஒரு வழிப்போக்கனைப்போல் வந்து, துகாராமருக்கு உதவிசெய்து அவர்க்கு வழிகாட்டியாக அவருடன் சென்றார்.

வழிப்போக்கனைப்போல் வந்த பகவான் துகாராமருடன் வெகு தூரம் பேசிக்கொண்டே போனார். அவ்விடத்தில் ஒரு பெரிய ஆறு குறுக்கிட்டது. அதைக் கடக்கவும் பகவான் உதவி செய்தார். பின் பகவான் துகாராமருக்குத் தமது திவ்ய சொரூப தரிசனம் தந்து மறைந்தார். துகாராமர் அந்தத் தரிசனம் கண்டு பரமானந்தமும் வியப்பு மடைந்தவராய், வியாபாரத்தைக் கவனியாமல் பெரு நஷ்டத்துடன் வீடு வந்து சேர்ந்தார்.

இப்படித் துகாராமர் வியாபாரத்திற் கருத்தில்லாமல் நஷ்டப்படுவதைப் பற்றி அவருடைய நண்பரும் ஊராருமே யன்றி அவர் மனைவியும் இகழ்ந்து பேசினாள்; "நீர் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்துகொண் டலைவதனாலேதான் இவ்வாறெல்லாம் துன்பம் நேரிடுகிறது" என்று கூறி அவமதித்தாள். துகாராமர் அவளுக்கு ஒரு விடையும் பகராமல் 'எல்லாம் இறைவன் செயல்' என்று எண்ணி மௌனமா

யிருந்து பிறகு சில நாட்களுக்கெல்லாம் ஒருருக்குப் போய் மிளகாய் வியாபாரம் செய்தார். அந்த வியாபாரத்தில் கடன் கேட்டவர்க்கெல்லாம் மிளகாயை மூட்டை மூட்டை யாய்க் கடன் கொடுத்துவிட்டார்; ஆகையால், தாம் கொண்டுபோன மிளகாயில் கால் பாகத்தையே ரொக்கத்திற்கு விற்றார். ஆனால் பகவான் என்ன செய்தா ரென்றால், துகா ராமருடைய சேவகரைப்போல் வேடம் பூண்டு சென்று, மிள காய் மூட்டையைக் கடனாக வாங்கினவர்களிடத்திலெல்லாம் கணக்குப்படி பணம் வசூல் செய்துகொண்டு வந்து துகாராம ரிடம் கொடுத்தார். துகாராமர் அது கண்டு அதிசயித்து, "இது ஈசன் கிருபை!" என்று கருதிப் பெருமகிழ்ச்சியுடன் ஊருக்குப் பிரயாணமானார்.

வழியில் அவரைச் சந்தித்த ஒருவன் பொன்முலாம் பூசி வைத்திருந்த பித்தளைக் கட்டியைக் காட்டி, "இந்தப் பொன் கட்டியை வைத்துக்கொண்டு உம்மிட முள்ள பொருளைக் கொடும்" என்று கேட்டான். துகாராமர், "இதுவும் ஈசன் செயல்" என்றெண்ணித் தம் கையிலிருந்த பொருளைக் கொடுத்து அவனிடமிருந்த பித்தளைக் கட்டியைப் பெற்றுக்கொண்டு வீடுவந்து சேர்ந்தார். பித்தளைக் கட்டியை அவர் பொன் கட்டி யென்றே நம்பி யிருந்தபடியால், தாம் கடன் கொடுக்க வேண்டியவர்களுக்கு அதை உடைத்துப் பங்கிட்டுக் கொடுத் தார். அவர்களெல்லாரும் அவைகள் பித்தளைக் கட்டிக ளென்று கண்டு, துகாராமரை வெறுத்து அவரிடத்திலேயே அந்தக் கட்டிகளை யெறிந்துவிட்டுப் போய்விட்டார்கள். அது கண்ட மனைவியும் அவரிடம் வெறுப்புக் காட்டியது மல்லாமல், இப்படிப்பட்ட புருஷனை வைத்துக்கொண்டு எப்படிச் சம்சாரத்தை நடத்துவதென்றும் விசனப்பட்டாள்.

துகாராமருக்கு மனைவிமார் இருவர். ஒருத்தியின் பெயர் ஆவுலி; இன்னொருத்தியின் பெயர் ருக்மாயி. ஆவுலியே சம்சார காரியங்களைக் கவனிப்பவள். அவர்கள் தங்களுக்குள்

ஆலோசனை செய்துகொண்டு ஒரு தனவந்தனிடம் ரூபா இரு நூறு கடன் வாங்கிக் கொடுத்து "இதைக் கொண்டு எந்த வியாபாரமாவது செய்து பணம் சம்பாதித்துவாரும்" என்று கூறித் துகாராமரைச் சில வர்த்தகர்களுடன் வேறூர் ஊருக்கு அனுப்பினார்கள்.

துகாராமர் அந்தச் சொற்பத் தொகையைக் கொண்டு உப்பு வியாபாரம் செய்து சிறிது லாபம் சம்பாதித்தார்; அந்த லாபத்தையும் முதலையும் வழியில் தம்மிடம் வந்து யாசித்த ஒருவனுக்குக் கொடுத்துவிட்டார்; ஆனால், அந்த க்ஷணமே, மனைவிமார்களுக்கு என்ன சொல்வதென்று பயந்தார். பகவான் உடனே துகாராமரைப்போல் வேஷம் பூண்டு, துகாராமரின் மனைவிக்குக் கடன்கொடுத்த தனவந்தனிடம் போய்க் கடனைக் கொடுத்தொழித்தார்; அப்பால் துகாராமருடைய மனைவியைக் கண்டு அந்த அம்மாளிடம் வியாபாரத்தில் லாபங் கிடைத்ததாகக் கூறிச் சிறிது தொகை கொடுத்துவிட்டுச் சென்றார். துகாராமர், வியாபாரஞ் செய்து அதனால் அடைந்த லாபத்தை வழியில் ஏழை யொருவனுக்குக் கொடுத்து விட்டதையும் துகாராமருடன் சென்ற வர்த்தகர் சிலர் அவர் மனைவிமார்களுக்குச் சொல்லிவிட்டார்கள். அவர்கள் அதைப் பொய்யென்று நினைத்தார்கள். பின் துகாராமரே வீட்டுக்கு வந்து சேர்ந்தார். யாவரும் உண்மை யறிந்து ஸ்ரீ ஹரியின் திருவருளை வியந்து பேசிக் கொண்டாடினார்கள்.

இப்படி யிருக்கையில், ஊரில் கொடிய பஞ்சமேற்பட்டு அநேகர் மடிந்தனர். அப்பொழுது துகாராமரின் மனைவியரில் ஒருத்தியும் அவள் வயிற்றுப் பிள்ளை ஒருவனும் இறந்தனர். துகாராமர், "சம்சாரத்தில் சங்கடமே உண்டாகும். அதனை நீக்குவதரிது" என்று கருதிப் பம்பாநாத் என்னும் ஒரு மலையின் மேலேறி நின்று பகவானைத் துதித்தார். பகவான் அங்கே அவர் கண்ணுக்குத் தோன்றி, அவரைத் தமது கையாலணைத்தெடுத்துக்கொண்டு தம்மைப் பார்க்கும்படி கூறினார்.

துகாராமர் பகவானைப் பார்த்துப் பரமசந்தோஷமடைந்து துதித்தார். அந்த வேளையில் அவருடைய தம்பி அங்கே வந்து பகவானுடைய தரிசனங் கண்டு மகிழ்ந்து அவருடைய திருவடியை அவ்விடத்தில் பதியவைக்கும்படி வேண்டிக்கொண்டான். பகவான் அப்படியே செய்தருளித் துகாராமரைக் கீழே விட்டு மறைந்தார்.

பின்பு துகாராமர் தமது தம்பியுடன் வீட்டிற்கு வந்து குடும்ப விஷயமான சகல உரிமைகளையும் தம்பிக்கே கொடுத்து விட்டுத் தாம் பம்பாநாத் பர்வதத்தின் மேலேபோய் நின்று பகவானைத் துதித்துக்கொண் டிருந்தார்.

இப்படிச் சிலநாட்க ளிருந்தபின், துகாராம் பகலெல்லாம் மலையிலிருப்பதும் இரவில் கீழே வந்து பகவானுடைய ஸந்நிதியிலிருந்து ஆடுவதும் பாடுவதுமா யிருந்தார்.

இப்படி யிருந்த அவரை ஒரு குடியானவன் கண்டு, "நீர் என்னுடைய சோளக் கொல்லையைக் காவல் காத்து வாரும். அறுவடையானதும் உமக்கு இரண்டு மணங்கு தானியம் தருகிறேன்" என்று கூறி அழைத்தான். துகாராமர் அவனுடைய நிபந்தனைக் கிணங்கிச் சென்று சோளக் கொல்லையைக் காவல் காத்தார். குடியானவன் அவரை நம்பிக் கொல்லையை விட்டு விட்டு வேறோர் ஊருக்குச் சென்றிருந்தான். துகாராமர், சோளக் கதிரில் வந்து விழும் பறவைகளை ஓட்டுவதே யில்லை. பறவைகள் சோளத்தை உண்பதைத் தவிர வீட்டுக்குக் கொண்டுபோகாதிருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டுக் கொண்டு, பகவானைத் தியானித்தவண்ண மிருந்துவந்தார். பிறகு குடியானவன் வந்து பார்த்து அவருடைய செயலைக் கண்டு அவரைக் கடிந்துகொண்டது மன்றி நன்றாயடித்து அவரை நியாயஸ்தலத்திற்கு அழைத்துக்கொண்டு போய் நீதிபதியின் முன் விட்டு விசாரணையிலும் வைத்தான்.

நீதிபதி துகாராமரை அழைத்து, "ஏன் சரியாய் வேலை பார்க்கவில்லை?" என்று கேட்டார். துகாராமர், "பறவைகள்

வந்து சோளத்தைத் தின்னும். ஆனால் அவைகள் வீட்டிற்குக் கொண்டு போவதில்லை. அப்படிப்பட்ட குணமுடைய பறவைகளை அடித்தால் அவை இறந்து விடுமே என்று அஞ்சி அவைகளைக் கவண்வீசி ஓட்டவில்லை'' என்றார். அதைக் கேட்டதும் நீதிபதி நகைத்துக் குடியானவனைப் பார்த்து, "அந்தக் கொல்லையில் எவ்வளவு சோளங் காண்பது வழக்கம்?'' என்று கேட்டார். குடியானவன் "நான்கு மணங்கு'' என்றான். நீதிபதி "சரி, சோளம் விளைந்த பிறகு துகாராமர் உனக்கு இரண்டு மணங்கு சோளம் கொடுத்து விடுவார். அதுவரையில் அந்தக் கொல்லை அவர் வசமே இருக்கட்டும்'' என்று தீர்ப்புச் செய்தார். துகாராமர், நீதிபதியைப் பார்த்து "அன்னியனுடைய கொல்லை எனதாதரவிலிருக்க நான் விரும்பவில்லை'' என்று சொல்லிவிட்டார். அப்பால், சர்க்கார் அதிகாரிகளே கூலியாளை வைத்து அந்தக் கொல்லையைப் பாதுகாத்து வந்தார்கள்.

பகவானுடைய கிருபையினால் அந்தச் சோளக் கொல்லை, பத்து மணங்கு சோளங் கண்டது. அதிகாரிகள் இரண்டு மணங்கு சோளத்தைக் குடியானவனுக்குக் கொடுத்துவிட்டு, மீந்த எட்டு மணங்கு சோளத்தையும் துகாராமருக்குக் கொடுத்தார்கள். துகாராமர், அதை வேண்டாமென்று மறுத்து, "நிரபேக்ஷையே மேலான வைராக்யம்; நிரபேக்ஷையே ஞானம்'' என்று கூறிவிட்டார். அப்பால் அதிகாரிகள் அவர் பங்கைக் கோவிலுக்குக் கொடுத்துவிட்டார்கள்.

துகாராமர் குடும்பத்தைக் கவனியாமல் பித்தனைப்போலிருந்ததனால், அவர் மனைவி மிகவும் துக்கமடைந்து, ஒரு நாள் கொஞ்சம் பக்ஷணம் செய்து எடுத்துக்கொண்டு அவரைப் பார்க்கப் பம்பாநாத் மலைமீதேறினாள். போகும் வழியில் அந்த மாதின் காலில் பெரிய முள்ளொன்று தைத்துவிட்டது. அந்தத் தொந்தரவில் அவள் மூர்ச்சித்துக் கீழே விழுந்து பின் சற்று நேரத்தில் தெளிந்து, பகவானை நொந்துகொண் டழுதாள். பகவான் அங்கே அவள்முன் தோன்றி, அவள் காலைத் தன்

துடையின்மீது தூக்கி வைத்துக்கொண்டு, காலில் தைத்திருந்த முள்ளைக் களைந்து, அவளை மெதுவாய்த் துகாராமரிடம் அழைத்துக்கொண்டுபோய் விட்டார். துகாராமருடைய மனைவி அவரைப் பணிந்து தான் கொண்டுபோன பக்ஷணத்தை அவருக்குக் கொடுக்கப் போனாள். துகாராமர் அதனைப் பகவானுக்கும் கொடுக்கும்படி மனைவிக்குச் சொன்னார். தான் கொண்டுபோனது ஒருவர்க்கே யாதலால், "இன்னொருவருக்கில்லையே! என்ன செய்வது!" என்று அம்மாது மலைத்து நின்றாள். பகவான் அவள் ஆச்சரியப்படும்படி மூவருக்கும் காணும்படியான பக்ஷணத்தை உண்டாக்கித் தந்தார். அது கண்ட அந்த மாது "அதிசயம்! அதிசயம்!" என மகிழ்ந்து, அந்தத் தின்பண்டத்தைத் தன் புருஷருக்கும் பகவானுக்கும் கொடுத்துத் தானும் அவர்களுடைய அநுமதியின்படி உண்டாள். அப்பால் பகவான் துகாராமரை வீட்டிற்குப் போய்த் தமது மனைவியுடன் வசிக்கும்படி அனுப்பிவிட்டு மறைந்தார்.

துகாராமர் தமது மனைவியுடன் வீட்டில் வசித்து வருகையில் ஒருநாள் ஒரு பிராமண ஸ்திரீ தனக்கு உடுத்துக்கொள்ளப் புடவை வேண்டுமென்று யாசித்தாள். அந்தச் சமயத்தில் துகாராமருடைய மனைவி ஆவுலி, தன் புடவையை அவிழ்த்து ஒரு சுவரின்மேல் வைத்துவிட்டு ஸ்நானஞ் செய்துகொண்டிருந்தாள். துகாராமர் அந்தப் புடவையை எடுத்து யாசகஞ் செய்த ஸ்திரீக்குக் கொடுத்துவிட்டு, உடனே வீட்டை விட்டு வெளியே போய்விட்டார். பின் அவள் தன் புடவையைத் தேடிக் காணாமல், "அந்தோ என்ன செய்வேன்! அந்த ஒரு புடவையையும் காணோமே! இனி எதை உடுத்துக் கொள்வேன்!" என்று கூறிக்கொண்டே தன் பதியைத் தேடிப் பார்த்தாள்; அவரையும் காணாமையினால், "ஓ! இவர்தான் என் புடவையை யெடுத்து யாருக்கோ கொடுத்துவிட்டு எங்கேயோ போய்விட்டார்! இது நிச்சயம்!" என்று தீர்மானித்து, அவரை வெறுத்துப் பண்டரிநாதரைக் கூவி அழைத்து, "நீ என் நாத

ரைப் பித்தராக்கியது மல்லாமல் எனக்கு இப்படிப்பட்ட கஷ்டத்தையும் கொடுக்கலாமா? இது நியாயமா?'' என்று வருந்தி யழுதாள். பகவான் உடனே அவள்மீது பீதாம்பர மொன்றை எறிந்தார். அவள் அந்தப் பீதாம்பரத்தைக் கண்டதும், "இது ஸ்ரீ ஹரியின் செய்கை!'' என்றறிந்து, அதனை உடுத்துக் கொண்டு, புருஷர் வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள்.

அப்பால், துகாராமர் இரவு வெகுநேரங் கழித்து வீட்டிற்கு வந்தார்; மனைவி நடந்ததைச் சொல்லக் கேட்டு, ஸ்ரீ ஹரியின் திருவருளை யெண்ணி மகிழ்ந்தார்; அன்று முதல் பரோபகாரஞ் செய்வதையே பெரிதாயெண்ணி அதில் முயற்சியுடன் ஈடுபட்டிருந்தார்; ஒருவன் சுமை சுமந்து சென்றால் அந்தச் சுமையைத் தான் சுமந்துகொண்டு போவதும், மழையில் நனைந்தவர்களை வீட்டிற்கு அழைத்துப் போய் உபசரிப்பதும், யாத்திரிகர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதும், எறும்புப் புற்றுகளில் தானிய நொய் போடுவதும், பசு முதலிய மிருகங்களின் உடம்பைத் தேய்ப்பதும், எவர் அழைத்தாலும் ஸ்ரீஹரீ என்று சொல்லிக்கொண்டு அவர்க்குப் பணிவிடை செய்வதுமா யிருந்தார்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள், அவர் தந்தைக்குச் சிராத்தம் வந்தது. அதன் பொருட்டு வீட்டிற்கு வேண்டிய சாமான்களைச் சேகரித்து வரும்படி துகாராமரை அவர் மனைவி ஏவினாள். அவர், "இதோ கொண்டு வருகிறேன்'' என்று கூறி, வீட்டைவிட்டுப் புறப்பட்டு அறுவடையாகும் வயற்புறங்களுக்குச் சென்றார். அங்கே ஒருவன் தன் வயலில் விளைச்சலை அறுத்துக்கொண் டிருந்தான். அவன் துகாராமரைக் கண்டதும் அவரைத் தனக்கு உதவி செய்யும்படி கேட்டுக் கொண்டான். துகாராமர் தாம் வந்த காரியத்தை மறந்து அவனுக்கு உதவி செய்வதில் கவனஞ்செலுத்திக் கையில் அரிவாள் கொண்டு அறுவடை வேலை செய்தார்.

அவர் இப்படிச் செய்யவே, பகவான் துகாராமரைப் போல் வேஷம் பூண்டு, தலையில் பெரிய மூட்டையுடன் அவர் வீட்டிற்குப் போய் அவர் மனைவியிடம், "இதோ சாமான்கள்! சீக்கிரம் சமையலாகட்டும்'' என்று கூறி மூட்டையைக் கீழே இறக்கி வைத்துவிட்டு ஊரில் துகாராமருக்குப் பந்துக்களாயுள்ளவர்களைப் போஜனத்திற்கு வரும்படி அழைத்துவிட்டு வீட்டிற்கு வந்து சிராத்த காரியங்களைக் கவனித்தார்.

துகாராமர் மனைவி சந்தோஷத்துடனும் பரபரப்புடனும் சமையல் செய்து முடித்தாள். பகவானாகிய துகாராமர் சிராத்தத்தைச் செய்து முடித்து, வந்த பந்துக்களுக்கும் ஏனையர்க்கும் போஜனம் செய்வித்துத் தாமுமுண்டு வெளியே சென்றார். அப்பால் துகாராமர் தாம் கூலியாகப் பெற்ற ஒரு படி நெல்லை எடுத்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்ததும், அங்கே நடந்தவைகளை யெல்லாம் அறிந்து, பகவானுடைய கிருபையை எண்ணி மகிழ்ந்து, அவரைத் துதித்துப் பாடி வணங்கியபின் புசிப்பெடுத்துக்கொண்டார்.

பின்னர் ஒருநாள், பகவான் துகாராமருக்குக் கவி செய்யும் சக்தியைத் தந்து, "துகாராம, நாமதேவன் சதகோடி கிரந்தம் செய்ய ஆரம்பித்தான். ஆனால் அது சமாப்தியாகுமுன் அவன் நமது பதத்தை யடைந்தான். நீ அந்தக் கிரந்தத்தைப் பாடி முடிக்கக் கடவாய்'' என்று கூறியருளினர். அவ்வாறே துகாராமர் பகவானை மனத்தில் தியானித்துக் கவி செய்யத் தொடங்கிச் சில நாட்களில் ஸ்ரீஹரி விஜயம் என்னும் கிரந்தத்தைச் செய்து முடித்தார்.

துகாராமருக்குக் கங்காதரன், சந்தாஜி என்று இரண்டு மாணவர்க ளிருந்தார்கள். துகாராமர் செய்யும் கவிகளைக் கங்காதரன் ஏட்டில் எழுதுவான். அவர் கீர்த்தனை பாடும்போது இருவரும் தாளம் போடுவார்கள். இப்படி அவர் பாடிய பாடல்களையெல்லாம் பார்த்த சில துஷ்டர்கள், அவரிடம் கொண்ட பொறாமையினால் அதிகாரிகளிடம் அவர் பாஷண்ட

ஞானத்தைப் பரப்புவதாகக் கூறி, அவரைத் தண்டிக்கும்படி வேண்டினர். மூட அதிகாரிகள், அந்தத் துஷ்டர்களுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு துகாராமரை ஊரைவிட்டுத் துரத்திவிடும்படி மணியக்காரனுக்குக் கட்டளை அனுப்பிவிட்டார்கள். மணியக்காரன் அந்த ஆக்ஞையைத் துகாராமரிடம் காட்டினன்.

துகாராமர் அதைப் படித்ததும் வருத்தமுற்று, "இனி என்ன செய்வேன்?" என்றெண்ணிக்கொண்டே இராமேச பண்டிதர் என்னும் வித்துவானிடம் போய்த் தமக்கு நேர்ந்த தண்டனையைக் கூறியதுமல்லாமல், தாம் செய்த கவிகளையும் காட்டினர். அவர் அவைகளைப் பார்த்து, "இவைகளைச் செய்ய நீர் அருகரல்லர். ஆதலால், இவைகளையெல்லாம் நீர் ஆற்றிலெறிந்துவிடும்" என்றார். துகாராமர் பெருந்துயரத்துடன் தமது கவிகளெழுதப்பட்ட ஏடுகளையெல்லாம் ஓர் ஆற்றிலெறிந்துவிட்டு ஸ்ரீஹரியின் திருவடியையெண்ணி, "இதுவும் உம்முடைய லீலையோ?" என்று கூறியபடி அவரைச் சிந்தனை செய்த வண்ணம் தம்மை மறந்து நின்றார். அப்பொழுது பகவான் அவர் முன் தோன்றி, "அஞ்சாதே! கவலைப்படாதே! காப்பாற்றுகிறேம்" என்று கூறி மறைந்தார்.

அப்பால் சில நாட்களுக் கெல்லாம், அந்த ஏடுகள் தேஹு என்னும் கிராமத்திற் கருகே நதியில் மிதந்து வந்தன. ஜனங்கள் துகாராமருக்கு அதனைத் தெரிவித்தார்கள். துகாராமர் பரம சந்தோஷ மடைந்து, உடனே நதிக்குச் சென்று, அந்த ஏடுகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு வந்து, எல்லோருக்கும் படித்துக் காட்டினர். இந்த அதிசயத்தை இராமேச பண்டிதர்க்குச் சிலர் தெரிவித்தார்கள். இராமேச பண்டிதர் துகாராமரை உண்மையான பக்தரென் றறிந்து, தாம் அவர்க்குச் செய்த குற்றத்தை யெண்ணி வருந்தினர்; பின் துகாராமருடன் சிநேகஞ் செய்துகொண்டார்.

துகாராமர், ஆளந்தி என்னும் கிராமத்திற்குச் சென்றார்.

அங்கே ஒரு பிராமணன் துகாராமரிடம் வந்து, தான் கடனால் வருந்துவதாகக் கூறினான். துகாராமர் அவனுக்கு உதவி செய்யும்படி அவ்வூராருக்குக் கூறினார். அவ்வூரில் ஒவ்வொருவரும் தம்மாலியன்ற அளவு உதவி செய்தனர். ஆனால், துகாராமரிடம் விரோதங் கொண்டிருந்த ஒரு தட்டான், பிராமணனுக்கு இரண்டு துட்டுக் கொடுத்தான். பிராமணன் அந்தத் துட்டுகளைத் துகாராமரிடம் தந்தான். துகாராமர் அந்தத் துட்டுகளை ஓட்டினால் தேய்த்து அவைகளைப் பொன்னாக்கித் தந்தார். ஜனங்கள் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். இதையறிந்த தட்டான், "துகாராமரிடம் பொன் செய்யும் வித்தை இருக்கிறது. அவரை அடுத்தால் நாம் அந்த வித்தையைக் கற்றுக்கொண்டு பணக்காரனாய் விடலாம்" என்று கருதி, உடனே துகாராமரிடம் சென்று, அவரை வணங்கித் தெய்வபக்தனைப்போல் நடித்தான். அப்படி அவன் ஒரு வருஷ காலமிருந்து வந்தான். நாளடைவில் சத்சங்கத்தால் அவனுடைய துர்க்குணங்கள் மாறிப் பரம ஞானியாய் விட்டான். பின்பவன், தன் சொத்துக்களை அன்னதானத்திற் செலவழிக்கத் தலைப்பட்டான். அதனால், தட்டானுடைய மனைவி துகாராமரே தன்னுடைய புருஷனைக் கெடுத்துவிட்டதாகத் தீர்மானித்து அவரிடம் த்வேஷங் கொண்டாள். பின்பொருநாள் அவள் துகாராமரை அழைத்து, நான்கு சால் நிறைய ஜலத்தைக் கொதிக்க வைத்து, அதை அவருக்கு ஸ்நானஞ்செய்ய எடுத்து வைத்தாள். துகாராமர் பகவானுடைய கிருபையால் அதனை அறிந்து கொண்டாராதலால், பகவானைத் தியானித்தார். தியானித்த அளவில் ஜலம் குளிர்ந்துவிட்டது. அதில் மனமகிழ்ச்சியுடன் ஸ்நானஞ் செய்து ஸ்ரீஹரி ஸ்ரீஹரி என்று கூறிக்கொண்டே அவ்விடம் விட்டுத் தமதிருப்பிடம் சென்றார்.

பின்பு அந்தத் தட்டானுடைய மனைவிக்குக் குஷ்டரோகமுண்டாயிற்று. அதனால் அவள் பெருங் கஷ்டப்பட்டு வருந்தினாள். பின் இராமேச பண்டிதர் அவளைப் பார்க்க நேர்ந்தபோது

"நீ போய்த் துகாராமர் ஸ்நானஞ் செய்த இடத்திலிருக்கும் மண்ணை எடுத்து உடம்பின்மேல் தடவிக்கொள்; இந்த வியாதி உடனே நீங்கும்" என்றார். அவள் அவ்வாறே செய்து வியாதி நீங்கப்பெற்றுத் துகாராமரை வணங்கி, அவர் ஆசீர்வாதத்திற்குப் பாத்திரமாய்ச் சகல நன்மைகளையும் அடைந்தாள்.

இப்படித் துகாராமர் நாடோறும் அநேக அற்புதங்களைச் செய்து காட்டி, அநேகரைப் பகவத் பக்தியில் ஈடுபடும்படி செய்து, உலகமெங்கும் தம்மைப் புகழச் சதாநந்தராக விளங்கி வந்து, முடிவில் தமதிச்சைப்படி வைகுண்டலோகம் சென்றார்.

---

## 20. சேனு நாவிதர் சரித்திரம்

ஹிந்துஸ்தானத்தில் சேனு என்னும் பெயர் கொண்ட ஒரு நாவித ரிருந்தார். அவர் ஸ்ரீஹரியினிடம் இடைவிடாத பக்திசெலுத்தும் உத்தம குணங்களுடையவராயும் எல்லாருக்கும் நல்லவராயும் தம் தொழிலிலே ஜீவனம் செய்பவராயு மிருந்தார். சேனு நாவிதர் வாழ்ந்து வந்த காலத்தில், ஹிந்துஸ்தானத்தில், மகமதியன் அரசனு யிருந்தான். அவனுக்குச் சேனு நாவிதர் க்ஷவரஞ் செய்து வந்தார்.

ஒருநாள் அரசன், நாவிதரைத் தனக்கு க்ஷவரஞ்செய்வதற்கு அழைத்து வரும்படி ஆளை யனுப்பினான். அந்த வேளையில் சேனு நாவிதர், ஸ்ரீஹரிக்கு ஆராதனை செய்துகொண்டிருந்தாராதலால், அவர் மனைவி இராஜ சேவகனைப் பார்த்து, "ஐயா, என் நாதர் வெளியே போயிருக்கிறார். வந்ததும் வரச் சொல்லுகிறேன்" என்று சொல்லி அனுப்பிவிட்டாள். பின் கொஞ்சநேரம் பொறுத்து அரசன் வேறொரு சேவகனை அனுப்பினான். அவனிடமும் சேனு நாவிதர் மனைவி, "என் நாதர் வெளியே போயிருக்கிறார்" என்று சொல்லியனுப்பி விட்டாள். அரசன் மூன்றாந்தரம் வேறொரு சேவகனை அனுப்பினான். அவனிடமும் சேனு நாவிதர் மனைவி, தன் நாதர்

வெளியே போயிருப்பதாகக் கூறி அனுப்பினள். ஆனல் அந்தச் சேவகன் அவள் பேச்சை நம்பாமல் அயல் வீட்டில் விசாரித்தான். அவ்விட்டார், சேன நாவிதர் ஸ்ரீஹரி பூசை செய்து கொண்டு வீட்டில் இருப்பதாகக் கூறினர்கள். உடனே சேவகன் சென்று அதை அரசனுக்குத் தெரிவித்தான்.

அரசன் அதைக் கேட்டதும் சினங்கொண்டு வேறிரண்டு சேவகர்களை அழைத்து, சிறிதும் தயைகாட்டாமல் சேனநாவிதரைக் கைப்பிடியாய்ப் பிடித்துக் கட்டித் தூக்கிக் கொண்டுபோய் ஆற்றி லெறிந்துவிட்டு வரும்படி ஆணையிட்டான். ‘தமது பக்தரான சேன நாவிதருக்குத் தொந்தரவேற்படுமே, என்று மனமிரங்கிய பகவான், அக்கணமே சேன நாவிதரைப்போல் ரூபங் கொண்டு, கையில் அடைப்பத்துடன் தோன்றி, அரசனை வணங்கினர். ஆகா ! என்ன வென்று சொல்வதிந்த ஆச்சரியத்தை. பக்தருக்காகப் பகவான் செய்யும் வேலையைப் பாருங்கள்! உலகமெல்லாம் வணங்கத் தக்க பரம ஜீவ காருண்ய சீலராகிய அவர், ஓர் அரசனை இச்சமயம் வணங்கினர். வணங்கியவுடன் அரசன் சாந்த மடைந்து, க்ஷவரத்திற்கு உட்கார்ந்தான். பகவான் உடனே அவ்வரசனுக்கு வெகு சுகமாக க்ஷவரமும் செய்தார். அது கண்டு அரசன் அவரைப் புகழ்ந்து, “ எப்போதும் நீயே க்ஷவரம் செய்யவா ! வேறெவரையும் அனுப்பாதே !” என்று கூறி உடனே எண்ணெய் தேய்த்துக் கொள்ள ஆயத்தமானன். எண்ணெய் ஸ்வர்ண பாத்திரத்தில் அரசனுக்கு முன்னே வைத்திருந்தது. சேன நாவிதராக வந்த பகவான், அரசன் முன் குனிந்து நின்று எண்ணெயைக் கையிலெடுத்துத் தலையில் வைத்துத் தேய்த்தார். அப்பொழுது அரசன் எண்ணெய்ப் பாத்திரத்தை நோக்கியவண்ண மிருந்தான். அது கண்ட பகவான், அந்த எண்ணெய்க்குள், தமது திவ்ய மங்கள சொரூபத்தைக் காட்டியருளினர். அரசன் அந்தப் பிரதி பிம்பத்தைப் பார்த்து, வியப்புற்றுப் பிரமித்து, மீண்டும் பகவானுடைய

சொரூபத்தைப் பார்த்து, மனதை அந்தத் திரு வுருவத் திலேயே நாட்டியவனாய்த் தன்னையும் மறந்தான். அப்பால் பகவான் எண்ணெய் தேய்ப்பதை நிறுத்தினார். அரசன் அந்த இடத்தை விட்டு எழுந்திராமல் குத்துக் கல்லைப்போல் வீற்றி ருந்தான். அதைக் கண்டு எல்லோரும் பயந்தார்கள்; பல முறை கூப்பிட்டுப் பார்த்தார்கள். அரசன் எழுந்திருக்கவே யில்லை. பின் அரசன் தானாகவே எழுந்திருந்து அம்பட்டனாக வந்த பகவானுக்குத் தக்க வெகுமானஞ் செய்து, "நீ போகாதே; இவ்விடமே இரு; நான் ஸ்நானம் செய்துவிட்டு வருகிறேன்" என்று கூறி ஸ்நானம் செய்யச் சென்றான்.

அரசன் சென்றதும் பகவான் சேனா நாவிதர் வீட்டிற்குச் சென்று அடைப்பத்தை அங்கோரிடத்தில் வைத்து, ஒரு குட்டிச் சுவர்மேல் தமக்குக் கிடைத்த வெகுமதியையும் வைத்துவிட்டு மறைந்தார். அப்பால் அரசன் ஸ்நானஞ்செய்து வந்து தனக்கு க்ஷவரஞ்செய்த சேனா நாவிதரை அழைத்துப் பார்த்துக் காணாமையால் வருத்தமுற்றான். அதுகண்ட சேவ கர்கள், சேனா நாவிதர் வீட்டிற்கோடி, அவரைக் கண்டு அரசன் அழைப்பதாகக் கூறினார்கள். சேனா நாவிதர் இச்சமயம் பூஜையை முடித்துவிட் டிருந்தாராகையினால், உடனே அவர் தம் அடைப்பத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டு அரண்மனைக் குப் போய் அரசனைக் கண்டார். அரசன் அவரைக் கண்ட தும் எழுந்து அன்பாய் வரவேற்று, "எனக்கு முன்னர்த் தரி சனம் செய்வித்த தேஜோ ரூபத்தைத் தயையுடன் இப்போதும் காட்டவேண்டும்" என்று கூறி, ஒரு பொற் கிண்ணத்தில் முன்போல் தைலங் கொண்டுவந்து வைக்கக் கட்டளை யிட்டான்.

பணியாள் அப்படியே தைலத்தைக் கொண்டுவந்து வைத் தான். சேனாநாவிதர் அதைப்பார்த்து "என்ன விந்தை இது!" என்று எண்ணிப் பிரமித்துநின்றார். அரசன், "தாமதம் ஏன்! தயைசெய்து காட்டவேண்டும்!" என்று கூறிச் சபையார் பிர

மிக்கும்படி சேன நாவிதரைப் பணிந்தான். என்ன செய்வார் சேன நாவிதர்! செய்வது தெரியாமல் பெரும் பீதியடைந்து மரம்போல் நின்றார்.

அப்பொழுது சிலர் அங்கு நடந்ததைச் சேன நாவிதருக்குச் சொன்னார்கள். அதைக் கேட்ட சேனநாவிதர், "ஓ! பகவானே என்னைப்போல் வேடம் பூண்டு வந்து அரசனுக்கு நான் செய்ய வேண்டிய வேலையைச் செய்திருக்கிறார்" என்றறிந்து கொண்டு, பெருமகிழ்ச்சியுடன் அவரைத் துதிக்க லானார்.

அரசன் அவரைப் பார்த்து, "ஐயா, பரம பக்தரே, உம்முடைய சகவாசத்தால் எவரும் அடைதற்கரிய பரமசுகத்தை அடைந்தேன்" என்று கூறி அவரைப் பணிந்து, அரிய வெகுமதிகளை அளித்து வீட்டிற்கனுப்பினன். சேனநாவிதர் வீட்டிற்குச் சென்றதும் அங்கே குட்டிச்சுவரில் பகவான் வைத்துப் போன வெகுமதியையும் கண்டெடுத்தார்; அடைப்பத்தையும் கண்டார்; எல்லாம் பகவானுடைய லீலை யென்று கண்டு பரம சந்தோஷமடைந்து, அரசன் வெகுமதியாக அளித்த திரவியத்தை யெல்லாம் ஏழைகளுக்கும் சாதுக்களுக்கும் கொடுத்து, ஸ்ரீஹரியின் திருவடி மலரில் மாறாத அன்பு பூண்டு ஆநந்த பரவசராயிருந்தார்.

---

## 21. மீராபாய் சரித்திரம்

உதாபுரம் என்னும் பட்டணத்தில் இராணன் என்றோர் அரசனிருந்து அரசு புரிந்து வந்தான். அவன் ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் அன்பு பூண்டவனா யிருந்தது மல்லாமல் சாதுக்களுக்கும் அவர்கள் விரும்புவதை யெல்லாம் கொடுத்துப் பரம புண்ய சீலனாக விளங்கினன். அவன் நாடோறும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்குச் சோடசோபசார பூஜை நைவேத்தியத்துடன் செய்து முடித்த பின்புதான் புசிப்பான். அவனுக்கு மீராபாய் என்ற ஒரு புத்திரி யிருந்தாள். அரசன்

அந்தப் பெண்ணைத் தன் அருகே வைத்துக்கொண்டுதான் நாடோறும் பூஜை செய்வது வழக்கம். பூஜை செய்யும் அந்தக் கிருஷ்ண விக்ரஹமும் அதி சுந்தரமா யிருந்தது.

மீராபாய் அம்மூர்த்தியின் அழகிலீடுபட்டு அந்தப் பகவானைத் தவிர வேறெவரையும் மணப்பதில்லையெனத் தீர்மானங் கொண்டாள். அப்பொழுது ஒரு நாள் அரசன் தன் மனைவியைஅழைத்து, "நமது மீராபாய்க்கு விவாகவயது வந்துவிட்டதே! தக்க மணவாளனைத் தேட வேண்டாவா?" என்று கேட்டான். அதை அருகிலிருந்து கேடடுக்கொண் டிருந்த மீராபாய், தன் தந்தையைப் பார்த்து, "நீர் பூஜை செய்யும் தெய்வத்தையே நான் நாயகராக வரித்திருக்கிறேன். அவரைத் தவிர நான் வேறெவரையும் மணக்க மாட்டேன். ஆகையினால், தயைகூர்ந்து அந்த கோபாலகிருஷ்ணருக்கே என்னை மணஞ் செய்வியும்" என்று தன் மனக் கருத்தைத் தெரிவித்தாள்.

அரசன், "பெண்ணே, அது ஆகிற காரிய மல்ல. ஏன் வீண் எண்ணங் கொண்டு கஷ்டப்படுகிறாய்?" என்று கூற, மீராபாய், "என் அருமைத் தந்தையே, நானென்ன செய்வேன்? அந்தப் பரமபதியினிடமே என் மனம் செல்கின்றது" என்று கூறி வருந்தி நின்றாள். அதைக் கண்டு அரசனும் வருந்தினான்; பின் தான் பூஜை செய்துவந்த கிருஷ்ணமூர்த்தியை மீராபாயினிடம் கொடுத்து, "நீ இந்த மூர்த்தியைப் பூஜைசெய்து வா. இவரே உன்னுடைய மனோபாவ மறிந்து உனக்கிதஞ்செய்வார். அப்படி ஏதேனும் பகவானுடைய திருவருள் ஏற்பட்டாலன்றி உன் மனோரதம் நிறைவேற வேறு வழி யில்லை" என்றான்.

மீராபாய் அன்றுமுதல் கிருஷ்ணமூர்த்தியை ஓரிடத்தில் வைத்து நியமத்துடன் பூஜை நைவேத்தியங்களைச் செய்து வந்தாள். நாளடைவில் பகவானுடைய திருவருளால் அவர் மீது கீர்த்தனைகள் செய்து பாடித் துதித்துப் பஜனை செய்யத் தொடங்கி அதனை வெகு பிரபலமாகச் செய்து வந்தாள்.

அந்தப் பஜனைக்கு அநேக பக்தர்கள் வரத் தலைபட்டார்கள். அவர்களும் மீராபாயுடனிருந்து பகவானைப் பாடித் துதித்து மகிழ்வா ராயினர்.

மீராபாய் விவாகம் செய்துகொள்ளாமல், இப்படிப் பல பக்தர்களுடன் பஜனையில் ஈடுபட்டிருப்பதை ஊர் ஜனங்கள் வெறுத்தார்கள். அச்செய்தி அரசனுக்குத் தெரிந்தது. அதனால் அவன் பெருவருத்த மடைந்து, தன்னுலியன்றவரையில் விவாகம் செய்துகொள்ளும்படி நயத்திலும் பயத்திலும் கூறிப் பார்த்தான். அவள் கேட்கவில்லை. 'கிருஷ்ணமூர்த்தியையன்றி வேறெவரையும் மணப்பதில்லை' என்றே கூறி மறுத்துவிட்டாள். அரசன் சினமடைந்து, "நம்மை நிந்தைக்காளாக்கும் ஒரு பெண்ணை வைத்திருப்பதிலும் கொன்றுவிடுவதே சிறந்தது" என்று தீர்மானித்து, மீராபாய்க்கு விஷத்தை யூட்டிக் கொல்லும்படி தன் மனைவிக்குக் கட்டளையிட்டான்.

இராணி அரசனுடைய கட்டளையைக் கேட்டதும் பொறுத்தற் கரிய துயரமுற்று, மகளிடம் சென்று, கண்ணீர் பெருக நின்று, அரசனுடைய கட்டளையைக் கூறி அழுதாள். மீராபாயும் அதைக் கேட்டுத் துக்கமுற்றுப் பின் அன்னையை நோக்கி, "இந்தத் தேகம் நித்திய மல்ல. இது நிச்சயமாய் அழியக்கூடியது. ஸ்ரீ ஹரியின் பொருட்டு நான் விஷமுண்டு தேகத்தை விடுவது மேலல்லவா ? விருக்ஷத்தில் பழம் பழுத்து விடுமேயானால் அது பூமியிலே விழுகிறது திண்ணம். அதுபோல், நான் கிருஷ்ண பரமாத்மாவினுடைய சரணத்தைச் சார்ந்தேன். ஸ்வர்ணத்திலே இரத்தினத்தைச் சேர்த்தால் அலங்காரமாவது போல் அந்த யதுகுல நாயக னென்னை யேற்றுக்கொண்டான். அம்மா! தாங்கள் வருந்தவேண்டா" என்று கூறிப் பகவானை எண்ணி, "என் பொருட்டு வருந்தும் என் தந்தை என்னைக் கொல்ல இதோ விஷம் அனுப்பியிருக்கிறார். உமது கிருபையினால் நான் வைகுண்டம் சேர்கிறேன்.

நான் போன பின் உம்முடைய பூஜையை யார் செய்யப் போகிறார்கள் ?" எனத் துக்கித்துப் பிறகு "இந்தச் சிந்தைதான் எனக்கேன் ?" என்று அந்த விஷத்தை வாங்கிப் பகவானுக்கு நிவேதனம் செய்து பின் அருந்தினாள்.

மீராபாய்க்கு அந்த விஷம் அமிர்தமாயிற்று. அதனால் அவள் பரமானந்தத்துடன் பகவானைத் துதிக்கத் தொடங்கினாள். ஆனால் அந்த விக்ரகம் உடனே கறுப்புநிற மடைந்தது. இந்த அதிசயம் கண்டவர்க ளெல்லாரும் ஆச்சரிய மடைந்தார்கள். அரசனும் இச்செய்தி யறிந்து விரைவில் வந்து பார்த்துப் பெரு வருத்தமுற்றான் ; தன் மகளை அணைத்துத் தழுவி, "என் பிழை பொறுத்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்; "அந்தோ ! விஷத்தைப் பகவானுக்குக் கொடுத்துக் கருநிற மடையும்படி செய்தேனே !" என்று பரிதவித்தான். உடனே மீராபாய் பகவானைத் துதித்துப் பாடி, "என்னை யாட்கொண்ட பரம்பொருளே ! உம்முடைய திருவுருவம் முன்போ லாகும்படி திருவுள மிரங்க வேண்டும்" என்று பிரார்த்தித்தாள். பரம பக்தியுடன் பிரார்த்தனை செய்த மீராபாயினிடம் இரக்கங் கொண்ட பகவான் முன்போல் பிரகாசித்தார். இது கண்டு அரசனும் ஏனையரும் என்று மடையாத ஆநந்தமடைந்து பகவானை வணங்கித் துதித்தனர் ; மீராபாயைப் புகழ்ந்து மகிழ்ந்தனர். அப்பால் மீராபாய் பகவானிடம் கொண்ட பக்தியைக் கைவிடாமல், அவரைப் பூஜிப்பதும் துதிப்பதும் அவருடைய பெருமை பேசி மகிழ்வதுமாய்த் தன் காலத்தை வெகு சுகமாகக் கழித்து அநேகரைப் பகவத் பக்தியி லீடுபடும்படி செய்தாள்.

---

# 22. கோபிசந்தர் சரித்திரம்

கௌட பங்காள தேசத்தில் காஞ்சனபுரி என்னும் நகரத்தில் திரிலோகசந்திர னென்னும் ஓர் அரச னிருந்தான். அவன் மனைவி மைனுவதி என்பவள் சகல குணங்களுக்கும் இருப்பிடமாய் விளங்கினள்; எப்பொழுதும் தன் நாயகனுடைய விருப்பப்படியே நடந்துவந்தாள். அவளுக்கு ஒரு புதல்வர் பிறந்தார். அவர் யுக்த வயதை யடைந்து, அரசுரிமையை ஏற்றுக்கொண்ட சில நாட்களில் அரசன் மரணமடைந்தான்.

அந்தப் புதல்வருடைய பெயர் கோபிசந்தர். கோபிசந்தர் நல்ல உத்தம தம்பதிக்குப் புதல்வராகப் பிறந்தும் கால வசத்தால் ஸ்திரீகளிடத்தில் ஆசை யுடையவராய்ப் பல மனைவியரை மணந்துகொண்டு அவர்கள் விருப்பப்படியே காலங் கழித்து வந்தார். மைனுவதி மகா உத்தம குணமுடையவ ளாதலால், புதல்வருடைய இந்தக் குணங் கண்டு வெறுத்தாள்; பகவானைச் சதா காலமும் தியானித்தவண்ண மிருந்துவந்தாள். ஒரு நாள் அந்த மாது அரண்மனையின் மேன் மாடியில் தெருப் பக்கம் நோக்கிய வண்ணமாய் நின்றுகொண் டிருந்தாள். அப்பொழுது தெருவில் ஒரு சுந்தர புருஷர் தலையில் விறகு சுமையுடன் சென்றார். மைனுவதி அவரைக் கவனித்தாள்; அவர் மகா உத்தம குணங்களுக் கிருப்பிடமான பக்தர் என்பதை அவருடைய தோற்றத்தினலே கண்டுகொண்டாள். உடனே அவள் ஒரு தாதியை அழைத்து "அவர் யாவர்?" என்று விசாரித்தாள்.

அவள், "அம்மணி, அவரை ஊரார் ஜலந்தரநாத ரென்றும் சித்புருஷர் என்றும் சொல்லுகிறார்கள். அவர் நாடோறும் பிக்ஷையெடுத் துண்கிறார்; இரவில் கனப்பிற்காக இப்போது காட்டிலிருந்து விறகெடுத்துச் செல்கிறார்" என்றாள்.

உடனே மைனுவதி சந்தோஷமடைந்து, "அவர் தினந்தோறும் எங்கே தங்குகிறார் தெரியுமா?" என்று கேட்டாள்.

தாதி அவர் தங்குமிடத்தைக் கூறக் கேட்டதும், மைனவதி, "நான்இவரையே என் குருநாதராக அடைந்து உபதேசம் பெற்றுக் கடைத்தேறுவேன்'' என்று தனக்குள் தீர்மானம் செய்து கொண்டு, மறுநாள் அவரை வணங்கிப் பூஜித்து அவரருள்பெறக் கருதிப் பூஜைக்கு வேண்டியவைகளுடன் புறப்பட்டு அவர் இருக்குமிடம் போய் அவரைக் கண்டு வணங்கினுள். அவர் முறைப்படி ஆசீர்வாதம் செய்து அமரும்படி கூற, மைனவதி அமைதியாய்ச் சிறிது தூரத்தில் அமர்ந்து, "சுவாமி, ஏழையினிடம் இரக்கங் கொண்டு நல்ல உபதேசம் செய்தருளவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள்.

ஜலந்தர நாதர், "நான் உனக்கு உபதேசஞ் செய்யத்தக்க யோக்யதை உடையவ னல்லன். நான் மனம்போனபடி திரிபவன். பெரியவர்களாகிய சாதுக்களைத் தேடி யடைந்து அவர்களிடம் உபதேசம் பெறக்கடவாய்'' என்ருர். மைனவதி, "சுவாமி, அப்படிச் சொல்லக்கூடாது. தேவரீருடைய மகிமையை உலகம் கூறக் கேட்டறிந்தே தம்மைச் சரணமடைந்தேன். சீதகால மதிகமானுல் ஜலசரங்கள் பயப்படுமோ? சூரிய உஷ்ணத்தினுல் கமல மலர் நீரில் வாடுவதுண்டோ? அதுபோல் நான் லோக அபவாதத்திற்கு அஞ்சவில்லை. அடைக்கலமாக வந்த என்னை ஆதரித் தருளவேண்டும்'' என்ருள். ஜலந்தர நாதர் அவ்வணங்கின் பரிசுத்த மனதைக் கண்டு மகிழ்ந்து அவ்வுத்தமிக்குத் தாரக மந்திர உபதேசம் செய்தருளினுர்.

மைனவதி அந்த உபதேசப்படி ஜபம் செய்து வந்தாள். சில நாட்களுக்கெல்லாம் அவள், 'நான் நீ' என்கிற பாவனை யற்றவளாய்த் தேகாபிமானம் நீங்கியவ ளானுள். அவள் உள்ளத்தில் விவேகம் விகசித்தது; பிறப்பிறப் பென்னும் கடலைக் கடந்தவளாய் ஆத்மசுக மனுபவித்து, ஸர்வேசுவரரான கடவுளைத் தனக்குள்ளே தரிசித்தாள்.

இவ்வாறு மைனவதி உயர்ந்த நிலையை யடைந்தாலும், அடிக்கடி ஜலந்தர நாதருடைய ஸந்நிதானத்துக்குப் போய்

அவரை வணங்கி அவருடன் சம்பாஷித்து வருவாள். அந்த ஞான சிரோமணி அப்படி யிருப்பதைக் கண்டு மனம் பொறுத அரசர் மனைவி, தன் நாயகருடன் தனித்திருக்கும்போது, "நாதரே, உம்முடைய அன்னையார் அடிக்கடி ஜலந்தர நாதரிடம் போய் வருவதை ஊரார் இகழ்ச்சியாகப் பேசிக்கொள்கிறார்கள். ஜலந்தர நாதரை உமது தாயார் மதித்திருப்பதுபோல் ஜனங்கள் அவ்வளவு சிறந்த யோகியென்று மதிக்கவில்லை. முதலில் இந்த அபவாதம் நீங்க ஏதேனும் ஒரு வழியைச் செய்யும்" என்றாள்.

கோபிசந்தர், மறுநாளே ஜலந்தர நாதரைப் பல்லக்கில் தமது அரண்மனைக்கு அழைத்து வரும்படி தம் அமைச்சனுக்குக் கட்டளையிட்டார். அமைச்சன் அரசருத்தரவின்படி ஜலந்தர நாதருடைய ஆசிரமம் சென்று, அரசருடைய கட்டளையைக் கூறி அழைத்தான். ஜலந்தர நாதர், அதைக் கேட்டதும் வியப்புற்று, அமைச்சனை நோக்கி, "எம்போன்றவர்கள் ஜனக் கூட்டத்தில் இருக்க வெறுப்படைவார்கள். என்னை அரசனேன் அழைக்கிறான்? என்னைக் கட்டாயப்படுத்தி அரசனிடம் கொண்டுபோவீரானால் அவன் அரசையிழந் தழிவான்" என்று கூறினர். அவர் கூறியதை அமைச்சன் கேளாததால், தாமே ஆசனத்தை விட்டெழுந்து பல்லக்கிலேற மறுத்துக் கால் நடையாகவே புறப்பட்டுப் போய் அரசனுடைய சபையை அடைந்தார்.

அரசர் ஜலந்தர நாதரைக் கண்டதும் பெரியார்க்குச் செய்யவேண்டிய சகல மரியாதைகளையும் செய்து வந்தன வழிபாடுகளுடன் உபசரித்துத் தம்முடன் அரண்மனையிலேயே போஜனம் செய்யும்படி வேண்டிக்கொண்டார். ஜலந்தரர் அதற்கிணங்கி அன்று பகல் அரசருடனிருந்து போஜனமுண்டார். பின் இரவிலும் அரசர் சுகமான போஜனத்தை அவருக்கு அளித்து, அவரை ஓர் அழகிய சயன அறையில் திவ்ய மஞ்சத்திலே படுக்கவைத்தார்.

ஜலந்தரர் அந்த மஞ்சத்தில் படுத்த சிறிது நேரத்திற் கெல்லாம் தெய்வத் தியானத்தில் மனத்தைச் செலுத்தித் தம்மையே மறந்தவரானார். அந்த வேளையில் அரசர் இரண்டு சேவகர்களை அழைத்து, “உள்ளே சயன அறையில் படுத் திருக்கும் ஜலந்தர நாதரை அலங்காமல் தூக்கிக்கொண்டு போய்ப் பாழுங் கிணற்றிலே போட்டு, மேலே மண்ணைத் தள்ளி மூடிவிடுங்கள்” என்று கட்டளையிட் டனுப்பினர். சேவகர் கள் உடனே படுக்கையறைக்குச் சென்று, கட்டையைப்போல் மஞ்சத்தில் கிடந்த ஜலந்தர நாதரை மெதுவாய்த்; தூக்கிக் கொண்டு போய்ப் புழைக்கடைத் தோட்டத்திலிருந்த பாழுங் கிணற்றில் போட்டு மேலே மண்ணைத் தள்ளி மூடிவிட்டு அதை அரசரிடம் தெரிவித்துச் சென்றார்கள். அரசன் அது கேட்டு மகிழ்ச்சியுற்றுத் தம் மனைவியினிடமும் அதைச் சொல்லி, அவள் மகிழக் கண்டு திருப்தி யடைந்தார்.

ஜலந்தர நாதர் அரண்மனைக்கு வந்தது முதல் இதுவரை நடந்த எதையும் அரசருடைய அன்னையாகிய மைனவதி யறியாளாதலால், அவள் வழக்கம்போல் ஜலந்தரருடைய ஆச்ரமம் போனாள். அங்கே ஜலந்தர நாதரைக் காணாமையால் “குருநாதர் எங்கே சென்றாரோ தெரியவில்லையே!” என்ற வருத்தத்துடன் அரண்மனை வந்து, தன்னுடைய பொருளை யிழந்த ஒரு லோபியைப்போல் துக்க மடைந்து “எப்போது என் குருநாதருடைய சரண மலரைக் கண்டு மகிழ்வேன்!” என்று ஏக்கமுற்றிருந்தாள்.

ஜலந்தர நாதருடைய மாணவர்களுள் காலிபாநாதர் என்ப வர் ஒருவர். அவர் ஜலந்தர நாதரை விட்டுப் பிரிந்து எழுநூறு மாணவர்களுடன் தேச சஞ்சாரஞ் செய்து, முடிவில் தம்மு டைய குருநாதரைத் தேட ஆரம்பித்து நெடுகலும் தேடிக் கொண்டு வந்தார். இவ்வாறிருக்கையில், ஒரு நாள் ராஜா கோபிசந்தர் எண்ணெய் தேய்த்துக்கொண்டார். அவர் முன் பொற் கிண்ணத்தில் எண்ணெய் வைத்திருந்தது. நாவிதன்

எண்ணெய் தேய்த்தான். அரசர் இந்தச் சுகத்தில் மகிழ்ந்து கொண்டிருந்தார். அச்சமயம், அரசருடைய அன்னை மைனுவதி மேன்மாடியிலிருந்து அவரைக் கவனித்தாள். புதல்வருடைய மன்மத சொரூபத்தைக் கண்ட அவள், "அந்தோ! இவனுடைய இந்தத் திவ்ய சொரூபத்தைக் கண்டு யமன் விட்டுவிடப் போகிறுனு? இவன் உயிரையுந்தான் கொண்டு போகப்போகிறுன்!" என்று கருதித் துக்க மடைந்து, கண்ணீர் விட்டாள். அந்தக் கண்ணீர்த் துளி காவலருடைய முதுகின்மேல் விழுந்தது.

அப்போது அரசர் திடுக்கிட்டு, "இந்த நீர்த் துளி எங்கிருந்து விழுந்தது?" என்று உயர நோக்கினுர். அங்கே தம் அன்னை அழுவதைப் பார்த்து, "அம்மா!" என்றழைத்து, "ஏன் கண்ணீர்விட் டழுகின்றீர்கள்? உங்கள் மருமகள் ஏதாவது இழிவாகப் பேசினுளா? சொல்லுங்கள். உடனே அவளைத் தண்டிக்கிறேன்" என்றுர்.

மைனுவதி, "அப்பா, மருமகள் என்னை ஒன்றும் இழிவாகப் பேசவில்லை. நான் உன் அழகை இங்கிருந்தே கவனித்தேன். உடனே, 'ஆகா! இந்தச் சுந்தர ரூபனுடைய உயிரையும் யமன் கொண்டுபோய்விடப் போகிறுனே!' என்றெண்ணினேன். எண்ணியவளவில், துக்கம் வந்து சூழ்ந்து கொண்டமையால் அழுதேன். உன் தந்தையும் உன்னைவிட அதிக ரூப லாவண்ய மமைந்தவரா யிருந்தார். அவரும் காலன் வசமானுர். இந்த இராஜ்ய ஸம்பத்து, மக்கள், சுற்றம் யாவரும்நாசமடையக் கூடியவர்களேயாவர். கானல் நீரைக் கண்டு மான் ஜலமென்று எண்ணி ஓடுவதைப்போல் நீ இந்தப் போகத்தை நாடி மகிழ்கிறுய். நர தேகம் எடுத்தபின் நாராயணனைப் பஜியாமல் வீண் காலம் போக்கி உலக போகத்தில் மகிழ்பவன் பதருக்கு நிகராவான். ஆகையினுல், என்னருமைப் புதல்வனே, நீ மமதையை விட்டு, சற்குருவைத் தேடி அடையக் கடவாய்" என்று கூறினுள்.

அரசர் இதைக் கேட்டதும், "நான் யாரைக் குருவாக அடைந்து ஞானமடையட்டும்?" என, அன்னை, "அந்தோ!

என்ன செய்வேன் ! ஜலந்தரநாத ரிருந்தால் அவரைக்கொண்டு உனக்கு ஞான ஸம்ஸ்காரம் செய்துவைப்பேன். என்ன செய்ய லாம் ! துரதிர்ஷ்ட வசமாய் அவர் எங்கேயோ போய்விட்டார். மகான்கள் ஒவ்வொரு காலத்திலேதான் தரிசனம் தருவார்கள். சமயம் வாய்த்தபோதே இவ்விஷயங்களிலெல்லாம் அறிவாளி கள் ஜாக்ரதையா யிருப்பார்கள். நீ உன் நினைவை வேறு வழி யில் செலுத்தி மகிழ்கிறபடியால் மகான்களுடைய மகிமையை உணரவில்லை '' என்று கூறி விசனித்தாள்.

அன்னையின் இந்த அரிய உபதேசத்தைக் கேட்ட அர சர், முன் தாம் தம் மனைவியின் பேச்சைக் கேட்டு ஜலந்தர நாதரைக் கிணற்றிலே தள்ளி மூடிவிடும்படி செய்ததை யெண்ணிப் பெருந்துயரப்பட்டார்; இந்தப் பாபத்திற்கு எந்த விதத்திற் பரிகாரமேற்படப் போகிறதென்று கலங்கினார்.

இங்கிப்படி யிருக்கையில், ஜலந்தரநாதரைத் தேடிக் கொண்டலைந்த கானீபாநாதர், குஜராத்தி தேசத்தில் ஓர் ஊரில் கோரக்ஷகர் என்னும் பெயர்கொண்ட சித்புருஷரைக் கண்டார். கண்டதும் இருவரும் ஒருவரை யொருவர் அறிந்து நட்புக் கொண்டனர். பிறகு கோரக்ஷகர், "உம்முடைய குருநாதரை இராஜா கோபிசந்த், கிணற்றிலே போட்டு மூடும்படி செய்து விட்டு, தான் செய்த அந்தக் கொடிய செய்கையை இப்போது எண்ணி வருந்துகிறான் '' என்றார்.

இந்தத் துப்புக் கிடைத்ததும் கானீபாநாதர், "பன்னி ரண்டு வருஷ காலமாகக் குருநாதரைத் தேடி யலைகின்றேன்; தம் முடைய திவ்ய தரிசன மகிமையினால் அவருடைய நிலை மையை அறிந்தேன். அவர் அமரகாய முடையவராதலால் இறந் திருக்க மாட்டார். ஆகையினால், நான் இப்போதே அங்குச் சென்று அவரை மீட்கிறேன். விடை தரவேண்டும் '' என்று பணிந்து விடைகொண்டு, தமது எழுநூறு மாணவர்களுடன் புறப்பட்டுக் கோபிசந்தர் இருந்து அரசு புரியும் பட்டணத் துக்கு வந்தார்; அங்கே ஓர் அழகிய சோலையிலே தங்கி, தம்

முடைய வரவை முதலில் அரசருடைய அன்னையாகிய மைனு வதி யம்மாளுக்குத் தெரிவித்தார். மைனுவதி உடனே அச் செய்தியைக் கோபிசந்தருக் கறிவிக்க எண்ணி அவரிருக்குமிடம் சென்ருள். அவர் அப்போது மனைவியுடன் பேசிக்கொண்டு சந் தோஷமா யிருந்தார். மைனுவதி அவரைக்கண்டதும், "அப்பா, இந்தச் சந்தோஷமெல்லாம் முடிவில் துக்கமாக மாறும். மேலும் இது நிலையற்றது. இந்தப் பிண்டமும் பிரமாண்டமுங் கூட நிலையற்றவை. ஆதலின், இதை மறந்துவிடு. இதோ நம்முடைய நகர்ப்புறத்திலுள்ள சோலையில் ஜலந்தர நாதருடைய சிஷ்யரில் ஒருவரான கானீபாநாதர் எழுந்தருளி யிருக்கிருர். அவரிடம் இப்போதே சென்று அவரைச் சரணமாக அடை. உனக்கு ஸ்ரீஹரியின் திருவருட் செல்வங் கிடைக்கும்" என்ருள்.

மன்னர் உடனே தம் அன்னையை வணங்கி, "இதோ போய் அவரைக் கண்டு பூஜித்து அரண்மனைக்கு அழைத்து வந்து, அவருக்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய் கிறேன்" என்று கூறிப் பின் தூய நீரில் ஆடி, நேமநிஷ்டை களை முடித்துக்கொண்டு, அமைச்சர் முதலிய தம் பரிவாரங் களுடனும் பூஜா திரவியங்களுடனும் புறப்பட்டுக் கானீபாநாதர் இறங்கியிருக்கும் சோலையை அடைந்து, அந்த மகானைத் தூர இருந்தபடி வணங்கி அபிவாதனம் செய்தார்.

தம்முடைய குருவிற்குக் கொடிய அபராதம் செய்தவ ராகையினுல் கானீபாநாதர் அரசரைக் கடுங்கோபத்துடன் நோக்கி, "நீயோ கோபிசந்தன்? உனக்கு அந்தப் பெயர் வைத் தது யார்? பைத்தியக்காரனை மகாபுருஷனென்று கூறுவது போலவும், மதுபானத்தை அமிர்தமென்று சொல்வது போலவு மிருக்கிறதே! நீ உன் மனைவியின் பேச்சை நம்பிப் பரம குரு நாதராகிய ஜலந்தர நாதரைக் கிணற்றிலே தள்ளிவிடும்படி செய்தா யல்லவா? உன்னுடைய மதியை எதற்கொப்பிடுவது? தீர விசாரியாமல் ஏன் இந்தக் கொடிய பாதகத்தைச் செய் தாய்?" என்று கேட்டார்.

அரசர் மெய்ந்நடுக்கமடைந்து, "மதியீனத்தினுல் அடாத காரியம் செய்துவிட்டேன்; இப்போது அதனை யெண்ணி வருந்துகிறேன்; தங்களையே சரணமடைந்தேன்; என் பாப மொழியக் கருணை செய்து என்னை ஆட்கொண் டாதரிக்க வேண்டும்'' என்று கூறிப் பெருந்துயரத்துடன் அவர்தம் திருவடியிலே பணிந்தார்.

கானீபாநாதர் அவர் மீதில் இரக்கங்கொண்டு, "ஜலந்தர நாதராகிய என் குருநாதருக்கு நீ செய்த அப்சாரம் பொறுக்க முடியாததானுலும் உன்னுடைய அன்னை மைனுவதி யம்மாளு டைய முகம் பார்த்து இரக்கங் கொள்கிறேன். நீ இப்போதே, செம்பு, பித்தளை, இரும்பு, வெள்ளி ஆகிய நான்கு லோகங்களினு லும் உன்னைப் போல் நான்கு உருவங்களைச் செய்து என் னிடம் கொண்டுவரக் கடவாய்!'' என்றுர்.

அரசர் "அப்படியே!'' என்று தம் அருகே யிருந்த அமைச்சனை நோக்கினுர். அமைச்சன் உடனே சேவகனை அனுப்பித் தகுந்த வேலையாட்களை வரவழைத்துக் கானீபா நாதர் கூறியபடி நான்கு லோகங்களினுலும் அரசரைப்போல் நான்கு விக்ரகம் செய்யும்படி உத்தரவிட்டான். பிறகு அன்று அரசரும் ஏனையரும் கானீபாநாதரை வணங்கி விடை கொண்டு சென்றனர்.

மறு நாள் விக்ரகங்கள் நான்கும் வந்து சேர்ந்தன. அர சர் உடனே தம் பரிவாரங்களுடன் கானீபா நாதரிடம் சென்று, அவர் திருவடி தொழுது, அவரை அரண்மனைக்கு அழைத்துவந்து பரம உபசாரங்களைச் செய்து பின் விக்ரகங் களைக் காட்டினுர். கானீபா நாதர், விக்ரகங்களுடனும் அர சர் முதலியவர்களுடனும் ஜலந்தர நாதரைத் தள்ளியிருந்த கிணற்றண்டை போய், இரும்பினுலே செய்த பது மையை வாங்கிக் கிணற்றின்மேல் வைத்து, அரசரைப் பார்த்து, "ஆதேச்'' என்று கூவும்படி சொன்னுர். அரசர் அப்படியே கூவினுர். கிணற்றி னுள்ளிருந்த ஜலந்தரநாதர்,

"யார்?" என்று கேட்டார். அரசர், "கோபிசந்தன்" என்றார். ஜலந்தர நாதர், "கோபிசந்தன் பஸ்பமாகக் கடவன்!" என்றார். உடனே இரும்பினால் செய்த பதுமை பஸ்பமாய்விட்டது. பின் கானீபாநாதர் தாமிரப் பதுமையை வைத்து அதையும் அவ்வாறே செய்தார். அப்பால் பித்தளைப்பதுமையையும் கடைசியாகப் பொற்பதுமையையும் வைத்துப் பஸ்பமாகும்படிசெய்தார்.

இது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். அரசர் ஆச்சரியப்பட்டது மன்றி, "இனி என்ன நடக்குமோ!" என்றஞ்சினார். அப்பால் கானீபாநாதர், அரசரைக் கிணற்றின்மேல் நிற்கவைத்து முன்போல், "ஆதேச்" என்றழைக்கும்படி உத்தரவிட்டார். அரசர் அவ்வாறே அழைத்தார். ஜலந்தரர், "நீ யார்?" என, அரசர், "நான் மைனாவதியின் குமாரனான கோபிசந்தன்" என்றார். அதைக் கேட்டதும் அவர், "நீ இன்னும் பிழைத்திருக்கிறாயா? இனி நீ அமரகாயத்தை அடையக் கடவாய்!" என்று கிருபை காட்டினார். இதுகண்டு யாவரும் வியப்பும் மகிழ்ச்சியு மடைந்து, ஜயஜய வென்று ஜலந்தரநாதரைத் துதித்துப் பாடினார்கள். அரசரும் வணங்கி ஜயகோஷத்துடன் பாடி ஜலந்தர நாதரைத் துதித்தார். இச்சமயத்தில் கானீபாநாதர், கிணற்றின்மேல் மூடியிருந்த மண்ணை வெட்டி யெடுக்கும்படி அங்கிருந்தவர்களுக்கு உத்தரவிட்டார். அவர்கள் அரை நாழிகையில் அந்த வேலையைச் செய்து முடித்தனர். பின் கிணற்றில் ஜலந்தரநாதர் சூரியப் பிரகாசத்துடன் விளங்கினார். அவரைக் கண்டு எல்லோரும் வணங்கினார்கள். மைனாவதியும் கண்களி லிருந்து ஆநந்தபாஷ்பம் பெருக அவரை வணங்கித் துதித்தாள்.

ஜலந்தரநாதர் எல்லோருக்கும் அன்பான ஆசீர்வாத மளித்து அவ்விடத்தைவிட் டெழுந்தார். கானீபாநாதர் அவரைக் கரங்கொடுத்து அழைத்துக்கொண்டுபோய்த் தாம் இறங்கியிருந்த சோலையில் அரிய ஆசனத்தில் வைத்து அரசருடைய உதவியால் ஆசார உபசாரங்களுடன் பூஜை செய்து மகிழ்ந்தார். அரசரும் அது கண்டு பரம பிரீதி யடைந்தார்.

அப்பால் அரசர் விரக்தியடைந்து உடனே தம் மைந்தனை ஜலந்தர நாதருடைய ஸந்நிதிக்கு வரவழைத்து, தம் அரசை அவனிடம் ஒப்புவித்தார் ; கண்களில் ஆநந்தபாஷ்பம் தாரை தாரையாய்ப் பெருக ஜலந்தர நாதரைப் பார்த்து, "குரு நாதரே, பிழை பொறுத்து என்னைத் தமது திருவருளுக்குப் பாத்திரவானுக்கிக் கொண்டதுபற்றி மகிழ்கின்றேன். இனி நான் தவ நிலையை அடைய விரும்புகிறேன். அதற்குரிய உபதேசங்களைச் செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

ஜலந்தா நாதர், "வேந்தே, விஷத்தை உண்டு பிழைத்திருக்கலாம். ஆகாயத்தில் நடக்கலாம். கடலை வற்றச் செய்யலாம். ஆனல் வைராக்கியத்தை மாத்திரம் நிறைவேற்றுவது வருத்தமாகும். நான் உனக்கு ஆசீர்வாதம் செய்தேனல்லவா? நீ அமரகாயத்தை வகித்தவனுனய். ஆதலினுல், இனி நீ வைராக்கியத்தை வகித்து வருந்தவேண்டாம்" என்ருர்.

அரசர், "சுவாமி, தமது திருவருளுண்டானல் எதைத்தான் செய்ய இயலாது ?" என்ருர். ஜலந்தரநாதர் சந்தோஷமடைந்து, "நீ இனி உனக்குள்ள யாவற்றையும் துறந்து பிக்ஷைவாங்கி யுண்டு வைராக்யத்தைச் செலுத்து" எனக் கட்டளையிட்டார். அரசர் உடனே அவர் ஸந்நிதியிலேயே துறவு பூண்டு மனைவியிடம் சென்று, "ஆலக்" என்று கூவி, "அம்மணி, பிக்ஷையிட வேண்டும்" என்ருர். மனைவி பார்த்துப் பெருந்துயர மடைந்தாள். ஊராரனைவரும் ஆச்சரியமடைந்தனர். அரசர், நீ நான் என்கிற பேதபாவனை யற்றவராய் விட்டபடியால் வீடு வீடாய்ச் சென்று பிக்ஷையேற்று அன்னையினிடம் வந்து, பாலும் சோறும் போடும்படி கேட்டார். அன்னை சந்தோஷத்துடன் அத்தகைய தன் மைந்தருக்கு அன்போடு பாலும் சோறும் போட்டு, "குலத்தை யீடேற்றிய குணமணியே, உன் பெருமையை யாரறிவார் ?" என்று புகழ்ந்து ஆசிர்வாதம் செய்தனுப்பினுள்.

அப்பால், அரசர் அந்நகரத்தை விட்டுப் புறப்பட்டுப் பன்னிரண்டு வருஷ காலம் தேச யாத்திரை செய்து, பின் சுதேசத்தை யடைந்து, தம் மனைவியினிடம் பிக்ஷை கேட்டார். அந்த மாது தன் நாயகரைக் கண்டதும் கரை கடந்த துக்கத்துடன் பிக்ஷையிட்டு, "சுவாமி, உமது கால்களை யாவர் அலம்புவர்?" என, கோபிசந்தர், "கங்கை, யமுனை, முதலிய நதிகள் அலம்பும்" என்றார். அந்த மாது, "உம்முடன் கூட இருப்பவர் யாவர்?" என, கோபிசந்தர், "ஆடையும் ஜோல்னாப் பையும்" என்றார். அவள், "உம்முடன் யார் வார்த்தை சொல்லுவார்?" என, கோபிசந்தர், "என் இருதயம் வார்த்தை சொல்லும்" என்று கூறினார். அந்த மாது, "உமக்கு யார் உண விடுவார்? எந்தப் பாத்திரத்தில் உண்பீர்?" என்று கேட்டாள். கோபிசந்தர், "உன்னைப்போன்ற தாய்மார்கள் பிக்ஷை யிடுவர்; கரமாகிய பாத்திரத்திலேற்று உண்பேன்" என்று கூறி, உடனே அன்னையிடம் போய்ப் பிக்ஷை கேட்டார். அன்னை, பாலும் சோறும் போட்டு ஆசீர்வாதம் செய்தாள். பின் கோபிசந்தர் சித்தயோகிகளின் கூட்டத்திலே சேர்ந்துகொண்டு பரமாநந்த பக்தராக விளங்கினார்.

---

## 23. சகுபாய் சரித்திரம்

கிருஷ்ணா நதி தீரத்தில் கரவீரபுர மென்றொரு கிராம மிருந்தது. அந்தக் கிராமத்தில் ஒரு பிராமண னிருந்தான். அவனுக்கு மந்த புத்தியுள்ள ஒரு மகன் இருந்தான். அவனுக்கு அறிவீனனான ஒரு பிராமணன் புத்திசாலியான தன் பெண்ணைப் பணத்திற் காசைப்பட்டுக் கல்யாணஞ் செய்து கொடுத்தான். அந்தப் பெண்ணின் பெயர் சகுபாய். அவள் நல்ல புத்திசாலியா யிருந்ததோடு மிகவும் அழகுடைய வளாயு மிருந்தாள். தன் தந்தை ஒரு மந்தனுக்குத் தன்னை மணஞ் செய்துகொடுத்ததைப்பற்றி அவள் விசனப்பட்டா

ளானுலும், "யாவும் விதியின்படி நடக்கின்றன. நாம் பிறரைக் குறைகூறி விசனப்படுவதில் யாது பயன்?" என்றெண்ணித் தன் நாயகனைச் சகலமுந் தெரிந்த அறிவாளியாகவும் சிறந்த ரூபவானுகவும் கருதி, அவனுக்குத் தான் செய்யக் கடமைப் பட்டவைகளைச் செய்து வந்தாள்; தன் மாமி மாமன்களிடமும் பணிவாயிருந்து அவர்களிட்ட சட்டப்படி நடந்து வந்தாள்.

சகுபாயின் மாமி பழிக்கஞ்சாத படுபாவி! கொடிய துர்க் குணங்களுக்கு இருப்பிடமானவள்! அகங்காரி! தன் கண வனுக்கு அடங்காத காலகண்டி! தெய்வத்துக்கும் அஞ்சாத வஞ்சகி! சகுபாய் அவளிடம் எப்படி யிருப்பாள்? அவள் இராக்ஷஸியினிடம் அகப்பட்டவள்போல் சதா காலமும் நடுங் கிக்கொண் டிருந்தாள். ஆயினும், அவள் தெய்வத்தை நம்பிய வளானதினுல் எந்தச் சமயத்திலும் அவளுடைய மனம் தெய் வத் தியானத்திலேயே யிருந்தது. அதனுல் அவள் தனக்குத் தன் மாமி செய்யும் தொந்தரவை, 'இது உலகத்தில் பரம மூடர்களுக்கு வழக்கம்' என்று கருதித் தன் வேலையைக் கவனித்துக்கொண் டிருந்தாள்; மாமி சொல்லத் தகாத வார்த் தைகளைச் சொன்னுலும் பதிற் பேசாம லிருப்பாள்.

இப்படிப்பட்ட நல்ல குணமுடைய மருமகளுக்கு, அந்தப் பாவி ஒரு வேளைச் சோறும் வயிருரப் போடமாட்டாள். ஏதா வது பண்டிகைத் தினத்திலேதான் சகுபாய்க்கு வயிறு நிறையச் சோறு கிடைக்கும். ஜலங் கொட்டிவர அந்தக் கொடிய வள் பொத்தல் குடமே கொடுப்பாள்; வீடு விளக்குவதற்குப் புதுத் துடைப்பம் தரமாட்டாள்; தேய்ந்து கட்டையான துடைப்பமே தருவாள். இன்னும் பலவாருன தொந்தரைகள் செய்வாள். சகுபாய், இப்படிப்பட்ட மாமியாரை ஒரு நாளும் வெறுத்துப் பேசுவதே கிடையாது. அவளுடைய நல்ல குணங்களைக் கண்டு ஊாரெல்லாரும் அவளைப் புகழ்வார் கள். ஆனுல் மாமியாகிய அந்தப் படுபாவி மாத்திரம் ஒரு நாளும் புகழ்ந்து பேசமாட்டாள். இப்படிப்பட்ட தாயை

மகனும் கண்டிப்பது கிடையாது. அவள் செய்வது அடாத செய்கை என்பதை அறிந்தவனு யிருந்தும், அவன் மந்த மதியின னுதலினல் ஒன்றையும் கவனியாமல் உண்பதும் உறங்குவதுமா யிருந்தான். ஆனுல், அவன் சகுபாயை ஒரு விதமான தொந்தரவும் செய்வது கிடையாது. அதுவும் தன் புண்யவசமென்று நினைப்பாள் சகுபாய்.

சில சமயங்களில் சகுபாயைக் காணும் அவ்வூர் ஸ்திரீகள், "நீ யேன் இங்கிருந்து கஷ்டப்படுகிருய் ? உன்னுடைய தாயார் வீட்டுக்குப் போய்விடலாகாதா?" என்று கேட்பார்கள். அப்போது சகுபாய், "எனக்குத் தாய் தந்தை சுற்றம் எல்லாரும் ஸ்ரீ ஹரியே யாகையினுல், அவருடைய துணையையே பெரிதாகக் கொண்டிருக்கிறேன். அவருக்கு மக்கள் அநேகர். ஆகையினுல், அவர் இன்னும் என்னைக் கவனிக்கவில்லை!" என்று சொல்வது வழக்கம். சில சமயம் அவள், "இந்த உலகத்தில் பிறந்தபின் துக்கத்துக்குப் பயப்படுவது அறிவாகுமா ? உலக வாழ்வில் பார்க்கப்போனுல் எல்லாம் துக்கந்தான்" என்று கூறுவாள்.

இப்படி யிருக்கையில், ஒரு நாள் அந்த ஊருக்குப் பண்டரிபுர யாத்திரை போகும் பாகவதர் சிலர் வந்திருந்தனர். அவர்கள் பகவானுடைய திருப்புகழைப் பாடிப் பஜனை செய்துகொண்டு தெரு வழியே சென்ருர்கள். அச்சமயத்தில் சகுபாய் ஜலந் திரட்டச் சென்ருள். அவள், பக்த கோஷ்டிகளைக் கண்டதும் அவர்களுடைய ஸந்நிதியில் விழுந்து பணிந்து, "என்னையும் பண்டரி புரத்திற்கு அழைத்துக் கொண்டுபோய்ப் பகவானுடைய தரிசனம் செய்விக்கவேண்டும்; பண்டரிநாதரைத் தரிசிக்கவேண்டு மென்கிற ஆவல் என் உள்ளத்தில் நெடுநாட்களா யிருக்கிறது. அடியேனுடைய எண்ணத்தை நீங்கள் பூர்த்திசெய்விப்பீர்களானுல் ஓர் அநாதையைத் துக்கக் கடலிலிருந்து கரை யேற்றிக் காப்பாற்றிய புண்யப் பயனை அடைவீர்கள்" என்ருள். அவர்கள், "அம்மணி, நீ சுகமாக வா. நாங்கள் உன்னைச் சுமந்து கொண்டா போகப்

போகிறோம்? சுகமாக வந்து ஸ்ரீ பாண்டுரங்கருடைய திவ்ய தரிசனம் செய்" என்றார்கள். உடனே, சகுபாய் பரமானந்த மடைந்து, வீட்டை மறந்து, அவர்களுடன் சென்றாள்.

இதைப் பார்த்த ஒருத்தி, விரைந்து சென்று சகுபாயின் மாமியைப் பார்த்து, "உன் மருமகள் பாகவதர்களுடன் பண்டரிபுரம் போகிறாள்; அவர்களுடன் பஜனை செய்து கொண்டு குதிக்கிறாள்" என்று சொல்லிவிட்டாள். அவள் கோபங்கொண்டு தன் மகனை ஏவினாள். அவன் உடனே குடல் தெரிக்க ஓடிச் சகுபாயைப் புடைத்து, மயிரைப்பிடித்திழுத்து வந்து தன் அன்னையினிடம் ஒப்புவித்தான். அவளும் சகுபாயைப் படேல் படேல் என்று அறைந்து, தூணில் வைத்துச் சேர்த்துக் கட்டி, "இன்னும் பதினைந்து நாட்கள் வரையில் உனக்குச் சோறு கிடையாது; உனக்குக் கர்வம் அதிகமாய் விட்டது; அதை அடக்குகிறேன்" என்று கூறிக் கடிந்து கொண்டாள். சகுபாய் என்ன செய்வாள் பாவம்! பகவானுடைய நாமஸ்மரணையை மனத்திலேயே செய்துகொண் டிருந்தாள். அந்தப் பகவந் நாமஸ்மரணையே அந்தப் பக்த சிரோமணிக்கு உணவாயிருந்தபடியால் அவள் ஜீவனற்ற கட்டைபோலிருந்தாள். ஆனால் மூச்சு மாத்திரம் ஓடிக்கொண் டிருந்தது. ஒரு சமயம், "ஆ! பாண்டுரங்கா, உன்னுடைய திவ்ய தரிசனம் எப்போது காண்பேன்?" என்பாள். மற்றொரு சமயம் "உன் திவ்விய தரிசனம் காண்பதற்கு முன் இறந்து விடுவேனோ?" என்று கூறுவாள். அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகிக்கொண்டே யிருக்கும்.

இப்படிச் சகுபாய் தவிப்பதைப் பகவான் அறியாமலிருப்பாரா? அறிந்ததும், பண்டரிபுரத்திலிருந்து கரவீர புரத்திற்குச் சகுபாயைப்போல் உருவமெடுத்துக்கொண்டு வந்து, இரவில் சகுபாயின் எதிரில் நின்று, "நான் உன்னைக் கட்டவிழ்த்து விடுகிறேன். நீ பண்டரிபுரம் போய்ப் பகவானைத் தரிசனம் செய்துவிட்டு வா. அதுவரை உனக்குப் பதிலாக

நான் இந்தத் தூணில் கட்டுண் டிருக்கிறேன்'' என்றார். சகுபாய், “நீ யாரம்மா? என்னிடம் ஏன் இவ்வளவு பரிதாபங் காட்டிப் பேசுகிறாய்?'' என்று கேட்டாள். பகவான், “நான் பண்டரிபுரத்தி லிருப்பவள். உன்னைப்போல் நானும் பகவானை நம்பி யிருப்பவள். உன்னுடைய நிலைமையை அவ் விடம் வந்த சிலர் கூறக் கேட்டேன். அதனால் உன்னை விடுவித்து உனக்குப் பகவானுடைய திவ்ய மங்கள சொரூப தரிசனம் செய்விக்க எண்ணி வந்தேன்'' என்று கூறிச் சகு பாயைக் கட்டவிழ்த்துவிட்டு அழைத்துக்கொண்டுபோய்ப் பண்டரிபுரம் போகும் யாத்திரிகருடன் சேர்த்து அனுப்பி விட்டுத் தாம் திரும்பி வந்து சகுபாய் கட்டப்பட்டிருந்த தூணில் தாமே கட்டுண்டு, அவளைப்போலவே பகவானைத் தியானித்தவா றிருந்தார்.

பின் அன்றிரவு பொழுது விடியுந் தருணத்தில் சகுபா யின் புருஷன், “நம்முடைய மனைவி பதினைந்து நாட்களாய்ப் பட்டினியா யிருக்கிறாள். திடீரென்று இறந்துவிட்டால் பொருள் செலவழித்து வேறு மனைவியை அடையவேண்டி வரும். வீணே அவளைத் தொந்தரவு செய்வதில் யாது பயன்? இனி அவளை அந்த வழியிற் பிரவேசிக்க வொட்டாமற் பார்த் துக் கொள்ளவேண்டும். அதுதான் செய்யத் தக்கது'' என்று கருதிப் படுக்கையைவிட் டெழுந்ததும், பகவானாகிய சகு பாயைக் கட்டவிழ்த்துவிட்டு, ‘நீ இனி அப்படிப்பட்ட நட வடிக்கை வைத்துக்கொள்ளாதே! மீறி நடந்தால் அம்மாள் உன்னைக் கொன்றுவிடுவாள். நான் அம்மாவுக்குக் கோபந் தணியும்படி நல்ல வார்த்தை சொல்கிறேன். நீ எப்போதும் போல் அவள் போடும் உணவை உண்டு, இட்ட பணிவிடை களைச் செய்துகொண்டிரு'' என்று கூறிவிட்டுத் தன் அன்னை யினிடம் சென்று, “அம்மா, இனி உன் மருமகள் சரியாயிருப் பாள். அவளுக்குவேண்டிய புத்திமதி சொல்லிக் கட்டவிழ்த்து விட்டிருக்கிறேன். நீ எப்போதும்போல் அவளுக்கு உண

விட்டு ஆதரித்துவா'' என்று கூறினன். அவள், "அப்பா, அவள் புத்திசாலியா யிருந்தால் நானென்ன செய்யப் போகி றேன்?'' என்று பிரிய வசனஞ் சொல்லி அனுப்பிவிட்டுப் பகவானுகிய சகுபாயை அழைத்து உணவளித்து, முன்போல் வீட்டு வேலைகளைச் செய்துவரும்படி திட்டப்படுத்தினள்.

பகவான் அடியார்க் கடியராகையினல், சகுபாயென்கிற தம்முடைய அடிமையின் பொருட்டு ஈனத்தொழில்களையும் செய்து வந்தார். மாமி, அடுத்த நாளே தன் வழக்கப்படி திட்டவும் கடுமையாய் வேலை வாங்கவும் தலைப்பட்டாள். பக வான் கீழ்ப்படிதலுடனிருந்து அவளிட்ட வேலைகளை யெல் லாம் செய்துகொண்டு அவள் மனம் கோணுதபடி நடந்து வந் தார். பகவான் தினந்தோறும் ஆற்றுக்குச் சென்று ஸ்நானம் செய்து ஜலந் திரட்டி வந்து சமையல் செய்வார். அவர் செய் யும் சமையல் கொஞ்சமும் பழுது சொல்வதற் கிடமில்லாம லிருக்கும்; செய்யும் வேலைகளெல்லாம் சுத்தமா யிருக்கும்; பேசுகையிலும் பகவானுகிய சகுபாய் தன் மாமி மாமன்மார் களுடைய சமயபேதந் தெரிந்து இதமாகவே பேசுவாள்.

இப்படி நடப்பதைக் கண்ட மாமி, "நம்முடைய மரு மகள் இப்போது சில நாட்களாய் நடக்கும் மாதிரி, நமக்கே ஆச் சரியப்படத் தக்கதாயிருக்கிறது! காரணம் என்ன சொல்வது! கண்டனை தண்டனைகளே போலும்! இனிக் குணமாயிருப்பாள்'' என்று கருதித் தன்னுடைய இயற்கைக் குணங்களை அதிக மாகக் காட்டாம லிருந்தாள்.

நிற்க, பண்டரிபுரம் போன சகுபாயைக் கவனிப்போம்: சகுபாய் அங்கே போய்ப் பகவானுடைய திவ்ய தரிசனத்தை யும், பக்தகோடிகள் வந்து பகவானைத் துதித்துத் தொழுது செல்லும் விமரிசையையுங் கண்டு, "இனி நான் இந்த ஊரை விட்டு என் பிராணன் போனாலும் போகிறதில்லை'' என்ற பிரதிக்ஞை செய்துகொண்டு வைராக்யத்துடன் பகவானைத் தொழுது வந்தாள்.

அப்படிச் சில நாட்கள் சென்றபின், ஒரு நாள் சகுபாய் ஸந்நிதியில் பகவானைத் தொழுதுகொண் டிருக்கும்போது மூர்ச்சையாய்க் கீழே விழுந்து இறந்துவிட்டாள். உடனே அவளைக் கரவீரபுரத்துக்குப் பக்கத்தூரா னொருவன் கண்டு விசனமுற்று அப்புறப்படுத்தியது மல்லாமல், சுடுகாட்டுக்கு எடுப்பித்துச் சென்று தகனமும் செய்துவிட்டுத் தன் ஊர் போய்ச் சேர்ந்தான்.

சகுபாயின் கதி இப்படியாகவே, பரதேவதையாகிய ஸ்ரீ ருக்மிணி பிராட்டியார், கரவீரபுரத்தில் சகுபாயாக விளங்கி வரும் தமது நாதராகிய பகவானை விடுவிப்பதன் பொருட்டுச் சகுபாயின் எலும்பை ஒன்றுகூட்டிச் சேர்த்து உயிர்ப்பித் தருளி, "நீ இனிக் கரவீரபுரம் போய் உன் நாதனை அடையக் கடவாய். வேறு சரீரம் அடைந்துவிட்டபடியால் நீ ஸந்நிதி யிலே செய்துகொண்ட சபதம் தீர்ந்துவிட்டது. இனி உன் மாமி முதலியவர்கள் உன்னைத் தொந்தரவு செய்யமாட்டார் கள். சிறிதும் பயப்படாமல் செல்" என்றார்.

சகுபாய் லோக மாதாவை வணங்கி, "தாயே, தங்கள் ஆக்ஞைப்படி நடக்கிறேன். தமது திருவருளையே துணையாகக் கொண்டுள்ள என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக் கொண்டு தைரியமாய்ப் புறப்பட்டுக் கால் நடையாகவே நடந்து கரவீரபுரம் போய்ச் சேர்ந்தாள். இவள் அங்கே போய்ச் சேர்ந்த சமயம், பகவானாகிய சகுபாய் ஜலந் திரட்டுவதன் பொருட்டு நதிக்கு வந்தாராகையினால் அவர் சகுபாயைச் சந்தித்தார். சந் தித்ததும் பகவான், "நான் இங்கிருந்தவண்ணமே போகிறேன். நீ இந்தக் குடத்தில் ஜலமெடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போய்ச் சேர். உன்னிடம் எல்லாரும் இனிப் பக்ஷமாயிருப்பார் கள். பண்டரி புரத்தில் நடந்தவைகளை 'யெல்லாம் நான் அறி வேன்" என்று கூறிக் குடத்தைச் சகுபாயினிடம் கொடுத்து மறைந்தார்.

பின் சகுபாய் பகவானுடைய திருவருளை எண்ணி மகிழ்ந்து அவரைத் துதித்து வணங்கி நதிக்குப் போய் ஜல

மெடுத்துக்கொண்டு தன் வீட்டை நோக்கி நடந்தாள். அப்பொழுது அங்கே பண்டரிபுரத்தில் சகுபாய்க்கு ஸம்ஸ்காரம் செய்த பக்தன் வந்து, சகுபாயின் மாமியைக் கண்டு, சகுபாய் ஸந்நிதியில் இறந்ததையும் தான் பிரேத ஸம்ஸ்காரம் நடத்தியதையும் கூறினான். இவ்வாறு கூறிக்கொண் டிருக்கும் போதே சகுபாய் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தாள். அவளைக் கண்டதும் பக்தன் வியப்படைந்து, "ஆகா! இறந்துபோய்க் கொளுத்தப்பட்ட சகுபாய் இங்கே எப்படி வந்தாள்?" என்று கூறி, சகுபாயைப் பார்த்து, "நீ எப்படிப் பிழைத்தாய்?" என்று கேட்டான்.

சகுபாய், தண்ணீர்க் குடத்தைக் கீழே வைத்துவிட்டு, தூணில் கட்டுண்ட தன்னைப் பகவான் விடுவித்துப் பண்டரிபுரத்துக்கு அனுப்பியது முதல், அதுவரை நடந்தவைகளை யெல்லாம் விவரமாகக் கூறிப் பகவானை வணங்கித் துதித்து மாமியையும் மாமனாரையும் கணவனையும் வணங்கினாள். அவர்கள் இவைகளைக் கேட்டதும் சகுபாயின் பக்தியைப் பற்றி நெடு நேரம் புகழ்ந்து பேசியதோடு, அந்த க்ஷண முதல் அவளைத் தங்கள் வீட்டுக்குப் பிரத்யக்ஷமாக வந்த தெய்வமாகவே கருதி, அவளிடம் பரம விசுவாசம் பாராட்டிப் பெருமையாய் ஆதரித்து வந்தார்கள். இந்தச் செய்தி கேட்ட ஊரார் அடிக்கடி ஒவ்வொருவராகவும் கூட்டங் கூட்டமாகவும் வந்து சகுபாயை வணங்கி அவளிடம் பகவானுடைய திருவருட் பெருமையைக் கேட்டு மகிழ்ந்து, தாங்களும் பகவத்பக்தியிலீடுபட்டுத் தத்தம் மனோரதங்களை யடைந்தார்கள். சகுபாய் பூர்ணாயுளுடன் சுகமாக வாழ்ந்துகொண்டிருந்து முடிவில் பகவானுடைய திருவடியை அடைந்தாள்.

---

## 24. ஸ்ரீ ராமதாஸர் சரித்திரம்

கோல்கொண்டா என்னும் கிராமத்தில் நியோகி என்னும் வகுப்பைச் சேர்ந்த தெலுங்கு பிராமணன் ஒருவனிருந்தான். அவன் பெயர் லிங்கன்ன. அவனுக்குக் கோபன்ன என்னும் பெயர்கொண்ட ஒரு புதல்வ ரிருந்தார். அவர் சிறு வயதுமுதல் ஸ்ரீராமபிரானிடத்தில் அன்புடையவராயிருந்தார்; யார் வீட்டில் ஸ்ரீராம பஜனை நடந்தாலும் அங்கே போய்த் தாமும் பக்தர்களுடனிருந்து பகவானைப் பாடித் துதித்துப் பணிந்து திரும்புவார்; பக்தர்களுடன் சேர்ந்து உறவாடுவார்; அவர்கள் பகவானுடைய விஷயமாகப் பேசுவதையும் பாடுவதையும் கவனித்து வருவார்.

இப்படி யிருந்தவர் நாளடைவில் சிறந்த பக்திமானுனர்; கல்வி கேள்விகளிலும் தேர்ச்சி யடைந்தார். பிறகு அவருக்கு விவாகமாயிற்று. விவாகமான சில வருஷங்களுக் கெல்லாம் அவருடைய தாய் தந்தையர் காலஞ் சென்றனர். பிறகு கோபன்ன குடும்ப பாரத்தை வகிக்கவேண்டியவராய் விட்டபடியால், கேவலம் பகவத் பக்தியிலேயே சித்தஞ் செலுத்திய அவருடைய வாழ்க்கை சிறிது மாறுத லடைந்தது. மாறுதலடைந்ததெனினும், அவர் ஸ்ரீராமபிரானையே தஞ்சமென நம்பித் தமக்கு நேரிடும் நன்மை தீமைகளெல்லாம் அவருடைய திருவருளின் செயலென் றெண்ணிக் கலங்காத நிலையிலிருந்தார்; அடிக்கடி சாதுக்களுக்கு அன்னமிட்டுச் சாது சேவை செய்து வந்தார்.

இப்படி யிருக்கையில், சில வருஷகாலத்திற்குள் கோபன்னவுக்கிருந்த சொத்துக்களெல்லாம் செலவழிந்து வறுமை மேலிட்டது. அதனுல் கோபன்ன தம் குடும்ப காலக்ஷேபத்திற்கும் பொருளில்லாமல் கஷ்டப்பட நேர்ந்தது. பின்னர், 'ஏதாவது தொழிலைச் செய்து ஜீவிக்கலாமா?' என்று அவர் தம் மனைவியினிடமும் நண்பர்களிடமும் ஆலோசித்தார். தம் குல தர்மப்படி உஞ்சவிர்த்தி எடுத்துக் காலக்ஷேபம் செய்யலாமா என்று எண்ணினுர். அந்த வழி சிறந்ததல்லவென்று சிலர் சொல்

லேவே, கோபன்ன அந்த எண்ணத்தையும் விட்டு, எந்தத் தொழிலே மேற்கொள்ளலாமென்கிற சிந்தையுடனிருந்தார்.

கோபன்னவுக்கு அக்கன்ன, மாதன்ன என்று மாமன் மார் இருவரிருந்தார்கள். அவர்கள் ஹைதராபாத்தில் தானேஷா என்கிற நவாபினிடம் மந்திரிகளாக வேலே பார்த்து வந்தார் கள். கோபன்ன அவர்களிடம் போய்த் தம் நிலைமையைக் கூறி னர். அவர்கள் அவரிடம் இரக்கம் பாராட்டி அவரைத் தங்கள் நவாபினிடம் அழைத்துப் போய், இராஜாங்கத்தில் ஒரு வேலேயில் வைத்துக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டார்கள். நவாப் கோபன்னவைப் பத்ராஜலம் தாசில்தாராக நியமித்தார்.

அப்பால் கோபன்ன கோல்கொண்டாவுக்கு வந்து தம் மனேவியை அழைத்துக்கொண்டு பத்ராஜலம் போய்த் தாசில் வேலேயி லமர்ந்து சுகமாகக் காலங்கழித்து வந்தார். ஆனல் எப் போதும்போல் ஸ்ரீராம பஜனே செய்வதும் சாதுக்களுக்கு அடிக் கடி போஜனம் செய்விப்பதுமாகவே இருந்தார். தம்மை அடிமை கொண்ட பரம கருண நிதியாகிய ஸ்ரீராமசந்திர பிரபுவை அவர் மறக்கவே யில்லே; சதாகாலமும் அவரையே தியானித்து வந்தார்; அநேகரை ஸ்ரீராம பக்தியிலீடுபடும்படி செய்தார்.

இப்படி யிருக்கையில், அவருக்கு ஒரு புதல்வன் பிறந் தான். அவன் ஒரு வயது குழந்தையாயிருந்தபோது ஒருநாள், கோபன்ன பிராமணர்களுக்குப் போஜனம் செய்வித்தார். அச் சமயம் அக்குழந்தை காய்ச்சி வைத்திருந்த தைலத்தில் விழுந்து இறந்துபோனன். அதனல் பெருந்துயரமுற்ற கோபன்ன, ஸ்ரீராமபிரானேப் பாடித் துதித்துப் பணிந்தார்; கண்ணீர்விட்டுக் கதறினர். பக்தர்க் கிரங்கும் பரம தயாநிதியாகிய ஸ்ரீராம சந்திர பிரபு பக்தராகிய கோபன்னவிடம் இரக்கங்கொண்டு அக் குழந்தையை உயிர்ப்பித் தருளினர். இதனே எல்லாரும் கண்டு பரமானந்த மடைந்ததுமல்லாமல் ஸ்ரீராமபிரானேச் சரணகத ரக்ஷகரென்று தெரிந்துகொண்டு அவரிடம் மெய்யன்பு கொண்டனர். கோபன்னவும் அவர் மனேவியும் தங்கள் உடல்,

பொருள், ஆவி மூன்றையும் ஸ்ரீராமபிரானுக்கே அர்ப்பண மாக்கி அவரிடம் தஞ்சம் புகுந்தனர்.

இப்படியிருக்கையில் கோபன்ன, அவ்வூரில் இடிந்துபோயிருந்த ஸ்ரீராமபிரானுடைய ஆலயத்தைச் செவ்வையாய்க் கட்டிமுடிக்க ஆரம்பித்து அதற்காகத் தம்மிடமிருந்த பணத்தையெல்லாம் செலவுசெய்து பின் ஊராரிடமும் யாசகமாகக் கேட்டு வாங்கிச் செலவிட்டு முடிவில் துணிகரமாய், நவாபுக்குச் செலுத்தவேண்டிய கிராம வரிப்பணத்தில் ஆறு லக்ஷம் வராகனையும் எடுத்துச் செலவு செய்து கோவிலை யாவரும் கண்டதிசயிக்கும்படி கட்டி முடித்தார்; பகவானுக்கு வாகனங்கள், தேர்கள், நகைகள் முதலியனவும் தம் மனம்போனபடி செய்து மகிழ்ந்தார்.

இப்படி இவர் செய்தது நவாபுக்குத் தெரிந்தது. அவர் உடனே கோபன்னவை வரவழைத்து விசாரித்து, சர்க்கார்ப் பணத்தைக் கையாடிய குற்றத்திற்காக அவரைச் சிறைச் சாலைக்கு அனுப்பினர்; ஆறு லக்ஷம் வராகனைத் தருகிற வரையில் சிறைச்சாலையிலிருந்து விடுவிப்பதில்லை என்று கடுமையான கட்டளையும் விதித்தார்.

பரம பக்தராகிய கோபன்ன, ஸ்ரீ ராமபிரானை நினைத்து நினைத்துப் பாடிப் புலம்பி அழுதவண்ணம் சிறைச்சாலையில் பன்னிரண்டு வருஷகால மிருந்தார். சிறைச்சாலைக் காவலாளிகள் அரசருத்தரவின்படி அவரைப் பலவிதமான தொந்தரை செய்து பணத்தைத் தரும்படி கேட்டார்கள். கோபன்ன எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு ஸ்ரீராமபிரானைத் தியானித்தவண்ண மிருந்தார். இப்படி யிருக்கும் பரம பக்தரிடம் இரக்கங்கொண்ட சீதாபதி, தம்பி லட்சுமணன் இருவரும் பத்ராஜலம் தாசில் சேவகர்களைப்போல் வேஷம் பூண்டு ஆறு லட்சம் வராகனுடன், தானேஷாவின் அரண்மனைக்கு இரவில் சென்று அவரை எழுப்பிக் காட்சிதந்து, "நாங்களிருப்பது பத்ராஜலம். கோபன்னவின் சேவகர்கள்" என்று சொல்லி,

அவர் செலுத்தவேண்டிய ஆறு லட்சம் வராகனையும் செலுத்தி அவருடைய கைச்சாத்துப் பெற்றுக்கொண்டு, பின் கோபன்னு விருக்கும் சிறைச்சாலைக்குப்போய் அவரை ஸ்ரீராமதாஸா என் றழைத்து நவாபினிடம் பணம் செலுத்தியதற்குத் தாம் பெற் றுக்கொண்ட கைச்சாத்தைக் கொடுத்து, "நவாபிற்கு நீ செலுத்த வேண்டிய ஆறு லட்சம் வராகனையும் செலுத்தியாய் விட்டது" என்று கூறி மறைந்தனர்.

அது முதல் கோபன்னுவுக்கு ராமதாஸர் என்னும் பெயர் ஏற்பட்டது. ஸ்ரீராம லட்சுமணர்கள் மறைந்ததும் ஸ்ரீராம தாஸர், ஆச்சரிய மடைந்தார்; ஸ்ரீராமபிரானுடைய திருவருட் செயல் இது என்று அவரைத் தியானித்துத் துதித்தார். அப்பொழுது நவாபினிடமிருந்து சேவகன் வந்து, ஸ்ரீராம தாஸரைச் சிறைச்சாலையிலிருந்து விடுவித்து அவரை நவாபி னிடம் அழைத்துப் போனான். நவாபு, "நீ தரவேண்டிய ஆறு லட்சம் வராகனையும் பெற்றுக்கொண்டேன்" என, ஸ்ரீராமதாஸர், "நானனுப்பவில்லை. ஸ்ரீராமபிரானுடைய திரு வருட் செயல் இது" என்று கூறி ஸ்ரீராமரைத் தியானித்தார்.

நவாபு, ஸ்ரீராமதாஸரை நோக்கி, "உம்முடைய மகி மையை அறியாமல் உமக்குப் பலவாறாக இடையூறுகள் செய் தேன். அந்தப் பிழைகளையெல்லாம் பொறுத்தருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டு பத்ராஜலம் தாலூகாவையே ஸ்ரீராம பிரானுடைய கைங்கரியத்திற்காக ஸ்ரீராமபிரான் பேரிலேயே பட்டா செய்துகொடுத்தார். அல்லாமலும், அந்தக் கைங்கரி யத்தைச் சர்வ சுதந்தரத்துடன் நடத்த ஸ்ரீராமதாஸரை நிய மித்து, தாம் பெற்றுக்கொண்ட ஆறு லட்சம் வராகனையும் அந்த ஆலயத்திற்கே மூல தனமாகத் தந்து மகிழ்ந்து, பெரும் புகழ் படைத்தார். ஸ்ரீராமதாஸர் பத்ராஜலம் போய்ச் சகல பற்றுகளையும் விட்டுப் பகவானுடைய கைங்கரியத்தைச் செய்து கொண்டு சுகமா யிருந்தார்.

முற்றிற்று.

# மாடர்ன் பப்ளிஷிங்

## தமிழ்ப் பிரசுரங்க

* துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டவை

---

வரகவி - திரு. சி. சுப்ரமண்ய பாரதி எழுதியவை ரூ. அ.

| | | |
|---|---|---|
| *குமார விஜயம் அல்லது ஸ்காந்த ஸங்கிரகம் | 1 | |
| *அர்ஜுனன் (இரண்டாம் பதிப்பு) ... | 0 | 12 |
| பால பக்தவிஜயம் (புதிய பதிப்பு) ... | 0 | 10 |
| *இரண்டு பக்த சிரோமணிகள் (இரண்டாம் பதிப்பு) | 0 | 8 |

---

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை எழுதியவை

| | | |
|---|---|---|
| பஞ்சதந்திக் கதைச் கலம்பகம் (முதற் புத்தகம்) | 0 | 4 |
| ஷை (இரண்டாம் புத்தகம்) | 0 | 5 |
| *குணவீரசிகாமணி அல்லது நட்பின் பெருமை (இரண்டாம் பதிப்பு) ... | 0 | 6 |

---

| | | |
|---|---|---|
| *பன்னிரு திருமுறையாசிரியர் வரலாறு அ. பாலசுப்பிரமணிய பிள்ளை எழுதியது | 0 | 10 |
| நவமணித்திரள் (இரண்டாம் பதிப்பு) கே. அப்பாவு எழுதியது ... | 0 | 8 |
| தென்னாட்டுப் பெரியோர் (புதிய பதிப்பு) எஸ். எஸ். அருணகிரிநாதர் எழுதியது ... | 0 | 7 |
| *காரைக்கால் அம்மையார் (இரண்டாம் பதிப்பு) செட்டூர் - ஏ. கு. சீனிவாசப்பய்கார் எழுதியது | 0 | 5 |

---

Current Thought Press, Triplicane, Madras.